Regd. No. 2975.

ஸ்ரீ:

# ஸ்ரீராமாநுஜன் 182, 183.

P. B. ANNANGARACHARYA, KANCHEEPURAM.

ஆசிரியர்: ஸ்ரீகாஞ்சீ. P. B. அண்ணங்கராசாரியர்.

வருடச் சந்தா ரூ. 5 ஜீவியச் சந்தா ரூ. 100.

ஜீவியச் சந்தாதாரர்களுக்கு பத்திரிகை சாச்வதமாக அனுப்பப்பட்டு வருவது தவிர 100 ரூபா விலையுள்ள புத்தகங்கள் உடனே அனுப்பப்படும்.

பேரருளாளன் பெருந்தேவித்தாயார் திருவடிகளே சரணம்.



ஆழ்வார் எம்பெருமானார் ஜீயர் திருவடிகளே சரணம்.

ஆழ்வார்கள் வாழி அருளிச்செயல் வாழி*
தாழ்வாது மில்குரவர் தாம்வாழி*—ஏழ்பாரு
முய்ய வவர்க ளுரைத்தவைகள் தாம் வாழி*
செய்யமறை தன்னுடனே சேர்ந்து.

சோபகிருது௵ மாசி & பங்குனிமீ 1964௵ பிப்ரவரி & மார்ச்சுமீ

# ஸ்ரீராமாநுஜன் 182, 183.



சென்னை ஸத்க்ரந்தப்ரகாசன ஸபா மூலமாக மாதந்தோறும் வெளிவரும் பத்திரிகை.

ஆசிரியர்: ஸ்ரீ காஞ்சி. P. B. அண்ணங்கராசாரியர்.

ஸம்புடம் 16 | 1964ஹ பிப்ரவரி, மார்ச்சுமீ. சோபகிருதுஹ மாசி, பங்குனிமீ | ஸஞ்சிகை 2, 3

## திருவாய்மொழி நூற்றந்தாதி—71.

தேவ னுறைபதியில் சேரப் பெருமையால் *
மேவு மடியார் வசனும் மெய்ந்நிலையும் —* யாவையும்தா
னும்நிலையும் சங்கித் தவைதெளிந்த மாறன்பால் *
மாநிலத்தீர் நங்கள் மனம்.

| | |
|---|---|
| மா நிலத்தீர் | இப்பெரிய வுலகத்திலுள்ளவர்களே! |
| தேவன் உறை பதியில் | (கீழ்ச் சொன்ன) திவ்ய தேசமாகிய திருவாறன் விளையில் |
| சேர பெருமையால் | சேர்ந்துகூடி அடிமை செய்யப் பெருமையாலே |
| மேவும் அடியார் வசன் ஆம் மெய் நிலையும் | (அவனது) ஆச்ரித பாரதந்திரியமாகிற நிலைமையிலும் |
| யாவையும் தான் ஆம் நிலையும் | ஸகல சேதநாசேதந ப்ரகார த்வரூபமான நிலைமையிலும் |
| சங்கித்து | அதி சங்கை பண்ணி |
| அவை தெளிந்த | இரண்டு வகையான அந்த அதிசங்கைகள் தீர்ந்து கீழ்ச் சொன்ன இரண்டு குணங்களிலும் தெளிவு பெற்ற |
| மாறன் பால் | —ஆழ்வார் பக்கலிலே |
| நங்கள் மனம் | - எமது நெஞ்சு பொருந்தியிருக்கின்றது. |

* * *—கீழ்த் திருவாய்மொழியான * இன்பம் பயக்கவெனும் பதிகத்தில் மநோரதித்தபடியே திருவாறன் விளையிலே சென்று புக்குத் திருவாய்மொழி கேட்பித்து அடிமை செய்யப் பெருமையாலே மிகவும் தளர்ந்து “எம்பெருமான் ஆச்ரித பரதந்த்ரன் ஸர்வநிர்வாஹகன் என்றிருந்தோம்; இவையும் நம்மைத் தோற்றிப் பொய்யாகிறதோ?” என்று ஆழ்வார் அவன் குணத்திலும ஸ்வரூபத்திலும் அதிசங்கை பண்ண, அந்த அதிசங்கையை எம்பெருமான் போக்கியருள ஸமாஹிதரானபடியைக் கூறுவதாம் * தேவிமாராவார் என்னுந்திருவாய்மொழி * உமருகந்துகந்தவுருவம் * இறந்ததும் நீயே * என்கிற இரண்டு பாட்டுக்களில் * அறிவொன்றும் சங்கிப்பன் வினையேன் * என்றருளிச் செய்திருப்பது கொண்டு ஆழ்வாருக்கு சங்கையுண்டாயிற்றென்னுமிடம் அறிக. * மலரடிப் போதுகளென் னெஞ்சத் தெப்பொழுதுமிருத்தி வணங்கப் பலரடியார் முன்பருளிய * என்று கீழ்த் திருவாய்மொழியில் அநுஸந்தித்த உபகாரத்தை ஸ்மிருதி விஷயமாம்படி பிரகாசிப்பிக்க, அத்தை * தாள்களை எனக்கே தலைத் தலைச் சிறப்பத்தந்த பேருதவி * என்றநுஸந்தித்து ப்ரீதரானமையால் ஒருவாறு சங்கை தெளிந்தமையும் விளங்கிற்று.

கீழ்ச் சென்ற பதிகத்தில், திருவாறன் விளையென்னும் திருப்பதியிலே சென்று அங்கு எம்பெருமான் பெரிய பிராட்டியாரும் தானுமாகத் திருவாய்மொழி கேட்கைக்கு விருப்பத்தோடிருக்கிற விருப்பிலே நாம் திருவாய்மொழி கேட்பித்து பற்றுஞ்சில கைங்கரியங்களையும் பண்ணி யநுபவிப்போமென்று பாரித்தார்; அது பாரிப்பளவிலே நின்றதத்தனையொழிய நினைத்தபடி நிறைவேறப் பெற்றதில்லை. அதனால் ஆழ்வார்க்கு எம்பெருமானுடைய சில திருக்குணங்களில் அதிசங்கை தோன்ற, அதனை வெளியிடுவது இத்திருவாய்மொழி. பிராட்டியார் அருகே யெழுந்தருளியிருக்க, நித்ய ஸூரிகளுமுண்டாயிருக்க, நினைத்தபடி காரியஞ் செய்து தலைக்கட்டவல்ல சக்தியும் அவனுக்குண்டாயிருக்க, அடியார்கள் விரும்பினபடி திருமேனிகளைப் பரிக்ரஹித்து வந்து உதவுமியல்வினனுமிருக்க, தமக்கும் அபிநிவேசத்தில் குறையில்லாதிருக்க, நினைத்த பரிமாற்றம் பெறுதொழியவே ஆழ்வார்க்கு வெறுப்பு உண்டாயிற்று; அதனால், எம்பெருமானையே நோக்கி 'பிரானே! நான் நினைத்திருப்பது மருள் கொல்? அடியார்களுக்கு நீ வசப்பட்டவனென்றும் எல்லாப் பொருள்களும் நீயிட்ட வழக்கென்றும் இப்படிச் சில குணங்களை நான் உன்னிடத்தில் இருப்பனவாகக் கொண்டிருந்தேன்; அக்கொள்கை உண்மையன்றோவென்று இப்போது அதிசங்கிக்க நேர்கின்றது; நானொருவன் தோன்றி உனக்கு இவை பொய்யாய்ப் போகின்றனபோலும்!' என்று விண்ணப்பஞ் செய்கிறார். அசோகவனத்தில் பிராட்டி "வ்ருத்தஃ ப்ராஜ்ஞ: க்ருதஜ்ஞச் ச ஸாநுக்ரோசச் ச ராகவ:, ஸத்வ்ருத்தோ நிரநுக்ரோச: சங்கே மத்பாக்ய ஸம்க்ஷயாத்" என்று பெருமாளுடைய குணங்களிலே அதிசங்கை பண்ணினாற்போலுமிது. "கோவிந்தன் குணம்பாடி—ஆவி காத்திருப்பேனே" என்கிறபடியே எம்பெருமானுடைய திருக்குணங்களைச் சிந்தனை செய்தே தரித்திருக்க வேண்டியவர்கள் அவற்றில் அதிசங்கை பண்ணினால் பிறகு ஜீவித்திருக்க வழியில்லாமையாலே 'இங்ஙனே அதிசங்கை கொண்ட ஆழ்வாரை இனி நாம் இழக்க நேருமோ?' என்று எம்பெருமான் அதிசங்கை பண்ணி 'ஆழ்வீர்! இப்படியும் நீர் அதிசங்கை கொள்ளத்தகுமோ? நாம் உமக்கு ஒன்றும் செய்யவில்லையா? எவ்வளவு செய்திருக்கிறோமென்பதை நீர் தாமே ஆலோசித்துப் பாரும்; இவ்வளவு செய்த நாம் மேற்செய்ய வேண்டியதையும் அடைவே செய்வோங் காணும்; வீணாக அதிசங்கை கொள்ள வேண்டா' என்று சொல்லி ஸமாதானம் பண்ண, ஆழ்வாரும் தேறி நின்று அவற்றையநுஸந்தித்து இனியராகிறார்.—என்று அறிவது. *

---

## ஸ்ரீராமாநுஜன் சந்தா செலுத்தியவர்கள்

26. உயர்திருவாளர் C. N நாகப்ப கவுண்டர், அட்வகேட், (கோயம்புத்தூர்) அவர்கள் ஜீவிய சந்தாதாரராகச் சேர்ந்ததற்குப் பெருநன்றி.
27. Sri P. N. Krishnaswami Iyengar, Karolbag, New Delhi.
28. ஸ்ரீமான் அழகு ராமாநுஜன், மதுரை. 29. உ. வே. அக்ரம் வரதாசாரியர், மதுரை.
30. S. சின்ன யர்ஜுநராமாநுஜ தாஸர், திசைபன்விளை. தூத்துக்குடி (தா).
31. ஸ்ரீ. உ. வே. S. நாராயணையங்கார், B. A., B. L., பல்லாவரம்.
32. ,, உக்கமநம்பி சடகோபாசாரியார் ஸ்வாமி, நம்பெருமாள் ஸந்நிதி.
33. ,, K. ரங்கஸ்வாமி ஐயங்கார், அட்வகேட், பூனமல்லி.
34. ,, M. S. ஸுந்தரராஜ ஐயங்கார் கோயமபுத்தூர்.
35. ,, K. V. விஜயராகவாசாரி, அட்வகேட், சின்ன காஞ்சிபுரம்.
36. ,, கி. ராஜமையங்கார் (ஜ்யோதிர்ப்பூஷணர்) நன்னிலம்.
37. ,, C. V. ராஜன் அவர்கள் (Rtd. P. M. G.) பெங்களூர்.
38. ,, Raosahib S. Raghavaiyangarswami Madras.
39. ,, V. V. Ramanujam, (Reader) Triplicane.
40. ,, M. ஸுதர்சனமையங்கார், (Timber Merchant, Mylapore) ஸ்வாமி ஜீவிய சந்தாதாரராகச் சேர்ந்து அரிய பெரிய ஸ்ரீமுகமொன்று அனுப்பினார். அது மேலே பிரசுரிக்கப்படும்.

ஸ்ரீ:

# ஸஹ்ருதய ஸுஹ்ருந்மணிகளுக்கு அடியேன் விண்ணப்பம். P. B. A.

ஏதோ எழுத வேணுமென்று எம்பெருமான் ப்ரேரணம் செய்தருளினபடியால் எழுதத் தொடங்கினேன். ஆனால் மனம் கலக்கமுற்று திடமாக இருந்த விவக்ஷிதங்களை யெல்லாம் விடாமல் எழுதி முடிப்பேனா வென்பது ஸந்தேஹமே. ஆயினும் எழுதுகிறேன். நாயேனளவும் விரும்பிய நல்லன்பு வாய்ந்த நல்லோர்கள் நாற்றிசையிலும் நிறைந்துள்ளார்களென்க்கு; அவர்களுக்கெல்லாம் தனித் தனியே யெழுதவேண்டிய ஸந்தர்ப்பமேற்பட்டது. அங்ஙனமெழுத இயலாமையினால் பத்ரிகை மூலமாக இவ்விண்ணப்பம் வெளியிடலாகிறது. இங்ஙனமே இதர பாஷைகளிலும் வெளியாகும்

16—2—64 தேதி முதலாக 21–2–64 தேதியளவும் ஆறு நாட்கள் திருவல்லிக்கேணி ஸ்ரீ பார்த்தஸாரதி ஸந்நிதியில் அடியேனுடைய உபந்யாஸங்கள் ஏற்பாடாகியிருந்த விஷயம் ஆப்தர்களனைவரும் அறிந்ததேயாகும். அப்படியே ஐந்து நாட்கள் இடையூறொன்றுமின்றி நடைபெற்றது. ஆறாவது நாளன்று (டவுனில்) என்னுடைய ஜாகையிலிருந்து திருவல்லிக்கேணி ஸந்நிதிக்குப் புறப்பட உத்ஸாஹத்தோடிருக்கையில் மாலை 4-மணிக்குமேல் அசிந்திதமாக வொரு ஸம்பவம். ஹ்ருதய கோசம் துடிக்க வாரம்பித்துப் பொறுக்க முடியாத மார்புவலி யுண்டாயிற்று. உடனே உடல் முழுவதும் தண்ணீர் மயமாகி ஏகதேசமும் சூடு லேசமும் காணமுடியாதபடி ஜில்லிட்டது. என்னுடைய பெரிய மாப்பிள்ளை ஸ்ரீ. உ. வே. அக்காரக்கனி ஸம்பத்குமாராசாரியரும், ப்ரதிவாதி பயங்கரம் அனந்தாசாரியரும் அதே ஜாகையில் சிறிது வ்யவஹிதமானவிடத்தில் இருந்துவருகிறார்கள். அவர்களை அருகே யழைத்துச் செய்தி சொல்லவேணுமென்றிருந்தும் சிறிது தாமதித்தேன். ஏனென்னில், அன்று காஞ்சியில் தேவப் பெருமாள் தென்னேரி தெப்பவுத்ஸவத்திற்காகப் புறப்பட்டருளவேண்டிய நாள்; இரவு 10½, 11 மணிக்குமேல் புறப்பாடு தொடக்கமாகும்; அதற்குள் உபந்யாஸத்தை (6 to 8.) முடித்துக் கொண்டு புறப்பட்டுக் காஞ்சி சேரவேணுமென்கிற குதூஹலம் இருந்ததனால் அதற்கு ஏதேனும் பங்கம் விளையுமோ வென்கிற அதிசங்கையினால்.... பிறகு வேதனையின் அஸஹ்யதையினால் அவர்களையும் மற்றும் சில ஆப்தர்களையும் அருகே யழைக்க நேர்ந்தது. அப்போதைய நிலைமை எல்லார்க்குமே பயாவஹமாய் இருந்தபடியால் டாக்டர்களை அழைத்துவர வேண்டியதாக அவரவர்களுக்குத் தோன்றி ஒவ்வொருவர் ஒவ்வொரு பக்கம் செல்ல, வரிசையாக நான்கு டாக்டர்கள் வந்து பார்க்க நேர்ந்தது.

மேற் செய்திகளை விவரித் தெழுத அடியேன் விருப்பமில்லை. பயாவஹமாயிருந்த நிலைமை இரண்டொரு மணி காலத்தில் நீங்கிற்று. மனோவாக்காயங்களாகிற த்ரிகரணங்களுக்கும் இரண்டு மூன்று மாத காலமாவது விச்ராந்தி கொடுத்தே தீரவேணுமென்கிற கட்டளையை டாக்டர்களனைவரும் ஏகமுகமாகச் செய்திருக்கிறார்கள். 21—2—64 வெள்ளிக் கிழமை மாலை இந்த ஸம்பவம். மறுநாள் சனிக்கிழமை மாலை சென்னையிலிருந்து புறப்பட்டு ஸ்வஸ்தானம் வந்து சேர்ந்திருக்கிறேன்.

இடையில் ஒரு சிறிய விஜ்ஞாபனம். அடியேன் இருபது தடவைகளுக்கு மேலாக வடநாட்டுத் திருப்பதி யாத்திரை செய்திருக்கிறேனென்பதைப் பெரும்பாலும் ஆப்தர்கள்

அறிவர். ப்ருந்தாவனம் ஸேவிக்க ப்ராப்தமாகிற ஸமயங்களில் அங்கு ப்ரஹ்மோத்ஸவம் ஸேவிக்கவேணு மென்கிற ஆசை தோன்றியிருந்தது. ஆனால் அவ்வாசை இதுகாறும் நிறை வேறப் பெற்றதில்லை. இந்த ஸம்வத்ஸரம் 3- 3—64 to 12—3—64 அம்பஹோத்ஸவம் நிகழ்வதால் இந்த ஸமயத்தில் அஸௌகர்ய மொன்று மில்லாமைபற்றி 1—3—64ல் புறப் பட்டு அவ்விடம் விடைகொண்டு ஸேவிப்பதாக நிச்சயித்து ஆவச்யக ஸம்விதானங்களும் செய்யப்பட்டிருந்தன. அந்தப் பயணத்திற்குச் சிறிதும் அவகாசமில்லையாயிற்று. இதனால் வடநாட்டுப்பக்தர்கள் பலர்க்கும் அடியேனுடைய அநாரோக்யம் விரைவில் பரவும் படியா யிற்று. மற்றைத் திசைகளிலுமப்படியே. எல்லாருடையவும் மனத் தெளிவுக்காக இஃது எழுதலாகிறது. இதைப் பூர்த்தியாக வாசிக்கவேணுமென்று நான் கோரவேணுமோ?

அபரிமிதங்களான ஸ்ரீமுகங்களும் கடிதங்களும் வந்து குவிந்திருக்கின்றன. எல்லா வற்றையும் பூர்த்தியாகப் பார்க்கவும் வாசிக்கச் செய்து கேட்கவும் ஸௌகரியமில்லை. ஆதியுமந்தமும வாசித்தே பெரும்பாலும் ஸமாசாரம் தெரிந்து கொள்ளலாகிறது. முக்கிய மாகச் சிலர்க்கு ஸத்வரமாகவும் அத்வரமாகவும் பதில் தெரிவிக்கப்பட்டும் வருகிறது. "ந ஹி கச்சித் க்ஷணமபி ஜாது திஷ்டத்யகர்மக்ருத்" என்ற கீதாசார்யன் ஸூக்தியின்படி கரணங்களைக் கொண்டு எவனும் ஒரு நொடிப் பொழுதும் வாளாவிருக்கவில்லான் என்று பணித்திருப்பது பழுதாவதன்று. அஸ்வாஸ்த்யத்தின் எல்லையிலே கிடக்கும் சில நபர் களிடத்திலே அதற்கு வ்யபிசாரம் காணலாமெனினும் ஸாதாரணமாக நடையாடு மாற்றல் பெற்றவர்களிடத்திலே அந்த கீதாவசனம் பழுதுபடவில்லையே. இப்போதைய எம் முடைய நிலைமை அஸ்வாஸ்த்ய மென்றாவது ஸ்வாஸ்த்ய மென்றாவது நிலையிட்டுச் சொல்ல இயலாதது. தேஹத்தில் உபாதி யொன்று மிருப்பதாகத் தெரியாமையாலே அஸ்வாஸ்த்ய மென்பதற்கு இடமில்லை. * மருத்துவனாய் நின்ற மாமணிவண்ணனுடைய வேலைவனையும், அவனடியார்கள் திருவோலக்கத்திலே கூடிக்கலந்து பரிமாறும் பரம புருஷார்த்தத்தையு மிழந்து லௌகிக மருத்துவர்களின் கடினமான கட்டளைக்கு உட்பட்டிருக்க நேர்ந்திருப் பதனால் ஸ்வாஸ்த்ய மென்பதற்கும் இடமில்லையாயிருக்கின்றது.

காளிதாஸனுடைய சாகுந்தல நாடகத்தில், கண்வருடைய ஆச்ரமத்தில் வந்து சகுந்தலையை காந்தர்வ விவாஹம் செய்து கொண்டு ஸ்வஸ்தானம் சேர்ந்த துஷ்யந்த சக்ர வர்த்தி பக்கலிலே சகுந்தலையைக் கொண்டுபோய் விடும்படி இரண்டு சிஷ்யப் பிள்ளைகளை உடன் கூட்டியனுப்புகிறார் கண்வர். அவர்கள் துஷ்யந்த நகரத்தில் சென்று சேர்ந்தபோது ராஜ த்வாரத்தில் உட்புகுவாரும் வெளியே வருவாருமாயிருக்கிற ஜனஸமூஹங்களைக் கண்டு ஒரு சிஷ்யப்பிள்ளை சொல்லுகிறான்—* 𑌅𑌭𑍍𑌯𑌕𑍍𑌤𑌮𑌿𑌵 𑌸𑍍𑌨𑌾𑌤𑌃 𑌶𑍁𑌚𑌿𑌰𑌶𑍁𑌚𑌿𑌮𑌿𑌵 𑌪𑍍𑌰𑌬𑍁𑌦𑍍𑌧 𑌇𑌵 𑌸𑍁𑌪𑍍𑌤𑌮𑍍। 𑌬𑌦𑍍𑌧𑌮𑌿𑌵 𑌸𑍍𑌵𑍈𑌰𑌗𑌤𑌿𑌃 𑌜𑌨𑌮𑌿𑌹 𑌸𑍁𑌖𑌸𑌙𑍍𑌗𑌿𑌨𑌮𑌵𑍈𑌮𑌿 * என்கிறான். நன்றாக நீராடியிருப்பவன் உடம்பெல்லாம் எண்ணெயை வழிய விட்டுக் கண்கரித்திருக்குமவனைக் கண்டால் அருவருக்குமா போலவும், பரிசுத்தனாய்ப் பளபள வென்றிருப்பவன் பல்லும் தேய்க்காமல் காதிலே பூணூலைத் தொங்கவிட்டுக் கொண்டிருப்பவனைக் கண்டால் அரு வருக்குமா போலவும், நன்றாகக் கண் விழித்துக் கொண்டிருப்பவன் உறங்கு மூஞ்சியைக் கண்டால் அருவருக்குமா போலவும், தாராளமாக இங்கு மங்கு மெங்கும் ஸஞ்சரிப்பவன் நகரமாட்டாது கட்டுப்பட்டுக் கிடப்பவனைக் கண்டால் அருவருக்குமா போலவும்....... ....... என்று இங்ஙனே சில த்ருஷ்டாந்தங்களை யெடுத்துக் கூறுகின்றான். இதில் ஊயமாந்த

## ஸஹ்ருதய ஸுஹ்ருந்மணிகளுக்கு அடியேன் விண்ணப்பம்.

பதங்களுக்கு இலக்காயிருந்து மகிழ்ந்து கொண்டிருந்தவடியேன் இப்போது சில நாளாக த்விதீயாந்த பதங்களுக்கு இலக்காயிருக்கிறேனே என்னே! என நினைத்துக் கிடக்கிறேன்.

இந்த அநாரோக்ய ஸம்பவத்திற்கு ஒரு வாரம் முன்னே ஒரு பத்து நாள் ஆந்திர ப்ரதேஶ ப்ராந்தங்களில் ஸஞ்சரிக்க நேர்ந்தது. அப்போது குண்டூர் ஸமீபத்தில் சிலகலூரு பேட என்கிறவொரு நகரத்தில் ஒரு தேவாலயத்தில் ஒரு உபந்யாஸம் நடத்த நிர்ப்பந்தித்தார்கள். ஆலயமோ மிகப் பெரிது. 700 பேர்களுக்குமேல் கூடியிருக்கிறார்கள். என்ன விஷயம் கேட்க விருப்ப மென்றேன். 'ராமாயணமோ பாகவதமோ பகவத் கீதையோ எதுவுமே இதுவரையில் எங்கள் காதில் விழுந்தது கிடையாது; எதுவுமே கேட்டறியோம்; தங்களுக்கு ருசித்ததைச் சொல்லுங்கள்' என்றார்கள். இவர்களுக்கு எதைச் சொல்லுவது? இன்று இப்படியொரு ஸதவடீகலா டா? என்று நான் ஒன்றுந் தோன்றாமலிருக்கையில், வந்து உட்கார்ந்த பிறகு எதையாவது சொல்லித்தானே யாகவேண்டுமென்ற துணிந்து "ப்ராயோ ஹி அக்ருதக்ருத்யத்வாத் ம்ருத்யோருத்விஜதே ஜந:, க்ருதக்ருத்யா: ப்ரதீக்ஷந்தே ம்ருத்யும் ப்ரியமிவாதிதிம்." என்கிற மனுவசனத்தை யெடுத்துக் கொண்டு (ஆந்திர பாஷையில்) உபந்யஸிக்க ஆரம்பித்தேன். யாவரும் ஆபிமுக்யத்தோடு கேட்டுக் கொண்டிருந்தபடியாலே இரண்டு மணி காலம் சொல்லிப் போதுபோக்கலாயிருந்தது. இரண்டு மூன்று மாதங்களுக்கு முன்பு அடியேன் ஸம்ஸ்க்ருத பாஷையில எழுதி வைதிக மனோஹராவில் வெளியிட்டிருக்கிற உபய வேதாந்த ஸார்த்த ஸமுச்சய மென்கிற நூலில் 90 முதல் 100 வரையிலுள்ள பாராக்களில் இந்த ச்லோகத்தைப்பற்றி விவரித்திருப்பதை ரஸிக பண்டிதர்கள் காணவேணும். பக்தர்களுக்கு அது வொரு அரிய பெரிய விருந்து.

முக்கியமாக இந்த சுலோகத்தில் கூறப்படும் விஷயம் என்னவென்றால்; க்ருதக்ருத்யரல்லாதார்க்கே மரணபயமுண்டாகு மென்றும், க்ருதக்ருத்யரானவர்கள் மரணத்திற்கு நல்வரவு கூறுவர்களென்றும் சொல்லப்படுகிறது. செய்யவேண்டுமவற்றைச் செய்து முடித்தவர்களுக்கு க்ருதக்ருத்யர்களென்று பெயர். செய்யவேண்டுமவை எவை? என்று தெரிந்து கொள்ளவேண்டுவது அவசியமாகும். அது நன்றாகத் தெரிந்து கொள்ளப் பெற்றால் வெகுவாய் எல்லாருமே க்ருதக்ருத்யர்களாய் விடலாம். மரணத்திற்கு நல்வரவு கூறுமவர்கள் [அதனை அவாவோடு எதிர்பார்ப்பவர்கள்] பெரும்பாலும் இவ்வுலகில் துர்லபர்களாயிருப்பதனால் யாருமே க்ருதக்ருத்யர்களல்லர் என்று தான் நினைக்கவேண்டியதாகிறது. மேலே தெரிவித்த சிலகலூருபேடா வுபந்யாஸத்தில் ச்ரோத்தாக்களை ஒருவாறு த்ருப்தி செய்வித்துவிட்டேனெனினும் ஆத்ம த்ருப்தி ஏற்படவேயில்லை. "க்ருதக்ருத்யா: ப்ரதீக்ஷந்தே ம்ருத்யும்" என்றது உண்மையாவதற்கு என்ன வழியென்று அன்றிரவெல்லாம் இதுவே ஆலோசனையாகக் கிடந்தேன். இன்றளவும் இவ்வாலோசனைக்கு ஒரு முடிவு காண முடியவில்லை.

இப்போதைய அநாரோக்ய ஸமயத்தில் பலபல ஸ்ரீ முகங்களும் கடிதங்களும் வந்து குவிகின்றனவென்று கீழே விஜ்ஞாபித்தேனல்லவா? அவற்றில் மதிப்பாளர்களான பெரியார் எழுதும் கடிதங்களில் அடியேனை அக்ருதக்ருத்யனாகவே விசேஷித்துக் குறிப்பிடுகிறார்கள். உண்மையில் அடியேன் நினைத்திருப்பதுமிதுவே. அடியேனுடைய கடைசியான வடநாட்டுத் திருப்பதி யாத்திரை 1958-வது வருஷத்தில் நடைபெற்றது. அப்போது த்வாரகா

யாத்திரையினிடையில் நாதத்வாராவுக்குப் ஸித்தபூருக்கும் மத்தியில் நடுநிசியில் நடந்ததொரு ஸம்பவம் அப்போது ஸர்வஜகத் ப்ரஸித்தமாயிருந்தாலும் ஐந்தாறு வருஷமாய் விட்டபடியால் பலர்க்கு மறந்திருக்கும். கள்ளக்குறிச்சியில் வாழும் ஸ்ரீமான் உ. வே. (அட்வகேட்) தி. ஆராவமுததாஸாசாரியர் ஸ்வாமி ஸமீபத்தில் ஸாதித்திருந்த வொரு ஸ்ரீமுகத்தில் அந்த ஸம்பவத்தை நினைப்பூட்டிச் சில விஷயங்கள் எழுதியிருந்தார். அது அப்போது அம்ருதலஹரியில் வெளியிடப்பட்டிருக்கபடியால் 'பசித்தவன் பழங்கணக்குப் பார்க்கிறது' என்கிற கதையாய் அதை யெடுத்து வாசித்தேன். அது பழையகதையாகத் தோற்றுமல் இன்று நேற்றைய கதை போலவே தோன்றினபடியால் அதை இங்கே பிரசுரிக்கவும் ஆசை தோன்றியது. பிரசுரிக்கிறேன்.

## "அபம்ருத்யுவுக்குத் தப்பிப் பிழைத்த அதிசயம்".

திருநாடு சென்றவர்கள் மீள்வதில்லை யென்ற நூற்கொள்கைக்கு மாறாக அடியேன் மீண்டு வந்ததோர் அதிசய வார்த்தையை ஆப்தர்களறிய விஜ்ஞாபிக்கிறேன். நாதத்வாராவிலிருந்து ஆவணி மாதப் பிறப்பன்று (17—8—58) மாலை ஸபரிவாரனாய்ப் புறப்பட்டு ஸித்தபூரென்கிற மாத்ருகயா க்ஷேத்திரம் செல்லா நின்றேன். ஸாயம் ஆறரை மணிக்கு ரயில் ஏறியாயிற்று. எமக்கு ஸ்பெஷல் போகி வண்டி யிருந்தாலும் ஆக்ராவிலிருந்து மீட்டர் கேஜ் பாதைக்கு ஏற்பச் சிறு வண்டித் தொடர் அமைந்ததனால் அதில் பெருந்திரளோடு கூடியிருக்கப் பாங்கில்லாமல் ஸௌகரியத்தை யுத்தேசித்து வேறொரு வண்டியில் இருந்து வந்தேன். அதிலும் நம்மவர்கள் பலர் உடனிருந்தார்கள். அதில் ஜன ஸங்கம் அதிகமாக ஏற்பட்டதனால் நம்முடைய ஸ்பெஷல் வண்டிக்கே போய்ச் சேருவோமென்றெண்ணி அந்த வண்டியிலிருந்து இறங்கிவிட்டேன். அந்த ஸ்டேஷன் சிறியதானதயாலே நமது ஸ்பெஷல் வண்டித்தொடர் ப்ளாட்பாரத்தைக் கடந்து அப்பால் சிறிது தூரத்தில் (என்ஜின் பக்கத்தில்) நின்றிருந்தது. அவ்வளவு தூரம் நான் நடந்து செல்வதற்குள் வண்டி புறப்பட்டுவிட்டது. அப்போது இரவு பத்தே கால் மணி. எப்படியாவது நமது வண்டியில் ஏறிவிடவேணுமென்னும் ஆசையினால் சிறிது வேகமாகவே நடந்து சென்று வண்டியின் வெளியிலுள்ள கீழ்ப்படியின் மீதேறி இரும்புக் கம்பியைப் பிடித்துக் கொண்டேன். இதுவோ சிறு வண்டித் தொடர்; அதற்கேற்பப் படியும் மிகச் சிறிது. வண்டித் தொடரோ கனவேகமாக ஓடுகின்றது. நமது ஸ்பெஷல் வண்டிகள் நான்கில் ஏறக்குறைய எண்பது பேர்கள் சயனித்திருக்கிறார்கள். வெளிப் படியில் நின்றபடியே கதவைத் திறவுங்களென்று நான் கத்துகிறேன். உயிர்ப்பிச்சை கொடுங்களென்றும் கூச்சலிடுகிறேன். அந்த பயங்கரமான கூக்குரல் கேட்டுப் பலர் கண்விழித் தெழுந்து ஜன்னல் வழியாய் என்னைப் பார்த்துங்கூட ஒருவராலும் கதவைத் திறக்க முடியவில்லை. எதிர்ப்பக்கத்தில் மட்டும் திறக்கும் வழி வைத்துக்கொண்டு இந்தப் பக்கத்தைப் பூட்டியே யிருந்தபடியாலும், எளிதில் பேர்க்க முடியாத கனத்த மூட்டைகளை வழியடைய அடுக்கியிருந்தபடியாலும் கதவு திறக்க முடியாமலே போயிற்று. ஸ்டேஷன் விட்டு ஐந்தாறு மைல் தூரத்திற்கு மேல் வண்டி போய்க்கொண்டிருக்கிறது. அந்த ஸமயத்தில் வெளியில் நான் எப்படி நிற்கிறேன், எப்படி அங்கு வந்தேன் என்பது உள்ளிருப்பவர்களுக்குப் புரியவில்லை. எனக்கோ கையிலும் காலிலும் வலி மாண்டு விட்டது. கால் சரிவுற்றது, கையும் தளர்ந்து விட்டது. கீழே சரிந்து விழவேண்டிய நிலைமையாய் விட்டது. அந்த விதத்தில் கீழ்ப்பாகத்தை நோக்குங்கால் கிடுகிடு பாதாளமா யிருக்கின்றது. நானே புத்தி பூர்வமாகக் குதித்தாலும்,

அவசரத் சரிந்து விழுந்தாலும் ஒரு அஸ்திகண்டங்கூட ஒருவர் கையிலும் கிடைக்க வழி யிராது. பகவான் நமக்கு இப்படிப்பட்ட அபம்ருத்யுவைப்பட்டா தலையிலெழுதினனென்று எண்ணுதன பலவு மெண்ணியாயிற்று. த்வயாநுஸந்தானமும் ஆசார்ய பாதாரவிந்த த்யானமும் செய்தாயிற்று. ஒரு பணி யவகாசத்தில் க்ரமேண நினைத்தாக வேண்டிய பல பல விஷயங்களை ஒரே நிமிஷத்தில் நினைத்து விட்டேன். கடைசியான நினைவை பட்டும் இங்கு விஜ்ஞாபிக்கிறேன். வராஹ சரமச்லோகப்படி * அப்போதைக் கிப்போதே சொல்லி வைத்தே னென்றிருப்பார்க்கு அந்திமஸ்ம்ருதி ஆவச்யகமன்று என்று ஸம்ப்ரதாயார்த்த மிருந்தாலும் அந்திம க்ஷணத்தில் நமக்கு மணவாளமாமுனிகளின் திருவடி சிந்தனை ப்ராப்த மாகுமா வென்று அடியேன் அடிக்கடி நினைப்பதுண்டு. அந்த சிந்தனையோடு இப்போது நமக்கு அவஸானம் நேருகின்றதே யென்று ஒரு மஹத்தான ஸந்தோஷமுண்டாயிற்று. இன்னமும் ஒன்று நினைத்தேன்; (அதாவது) "க்ருதக்ருத்யா: ப்ரதீக்ஷந்தே ம்ருத்யும் ப்ரிய மிவாதிதிம்" என்று உள்ளது; மணவாளமாமுனிகளே! அடியேன் க்ருதக்ருத்யனாக இல்லையே! இன்னமும் எவ்வளவோ கர்த்தவ்ய சேஷமிருப்பதாக நினைத்திருக்கும்படியேனை இப்படி அபம்ருத்யுவுக்கு ஆளாக்கவோ திருவுள்ளமாயிற்று! என்று இததான் அந்திம ஸ்ம்ருதியாக நிகழ்ந்தது. அதே க்ஷணத்தில் ஒரு உபாயம ஸ்புரித்தது. "அபாயம் நேர்ந்தால் வண்டியை நிறுத்த சங்கிலியைப் பிடித்திழு" என்ற வண்டிதோறும் ப்ரசுரம் செய்யப் பட்டிருப்பது நினைவுக்கு வந்தது. உள்ளே யிருப்பவர்களை நோக்கி 'சங்கிலியைப் பிடித் திழுங்கள்' என்று கத்தினேன். நம்முடைய க்ரந்தமாலா ஏஜண்டாகிய சென்னை ஜி. ரங்கைய நாயுடு சங்கிலியைப் பிடித்திழுத்தும் வண்டி நிற்கவில்லை. வண்டியோ ஒரு நிமிஷத்தில் ஒரு மைல் ஓடுகின்றது. எப்படி நான் தரித்து நின்றேனென்பது எனக்கே தெரியவில்லை. ப்ரஹ்மாஸ்த்ரமும் வாய் மடிந்ததே யென்று துடிக்கிறேன். க்ருஷ்ணகிரி வெங்கடலக்ஷ்மி யம்மாளென்பவள் ஹா ஹா வென்று அலறிக் கொண்டே சங்கிலியைப் பிடித்துக் கொண்டு தொங்கலாடி நிற்க உடனே வண்டி நின்றது. என்னுடைய ஆவியும் நிலையில் நின்றது. இந்த அம்மாள் ப்ரதிவாதி பயங்கராசார்ய ஸமாச்ரயணம் பெற்றவளாகையாலே உயிர்ப் பிச்சை யளிக்கும் பாக்கியம் இவளுக்கு எட்டியதுபோலும். வண்டி நின்றவுடனே நான் கீழே யிறங்கி விட்டேன். விராஜா தீரத்தில் நின்று மிறங்கினேனென்பதில் ஐயமில்லை. சில அதிகாரிகள் ஓடி வந்து என்னை கார்டு வண்டியில் ஏற்றிவிட உடனே வண்டி புறப்பட்டு விட்டது. அடுத்த ஸ்டேஷனில் வண்டி நின்ற பிறகு ரயில்வே அதிகாரிகள் செய்ய வேண் டிய விசாரணையைச் செய்து தெளிவுடன் சென்றார்கள். மறு நாள் காலை எட்டு மணிக்கு ஸித்தூர் வந்து சேர்ந்தோம். பக்தன் பத்ரிகையாசிரியரான நண்பர் ஸ்ரீமான் M. O. அழகியசிங்காசாரியர் ஸ்ரீஜயந்தி மலராக வெளியிடப்படும் பக்தனுக்கு ஒரு வியாஸ மெழுதி யனுப்பவேணு மென்று அடிக்கடி கடிதமெழுதி வந்தார். இந்த ஸம்பவத்திற்கு முன்னே [நாதத்வாராவிலிருந்து புறப்பட்ட பின்பு] ரயில் வண்டியிலேயே அந்த வியாஸ மெழுத ஆரம்பித்து அதற்கு "பிறந்தவாறும் வளர்ந்தவாறும்" என் மகுடம் வைத்து இரண்டொரு பக்கமே யெழுதினேன். அப்போது நானேறி யிருந்த வண்டியில் போதுமான ஸௌகரியம் இல்லாதிருந்ததனால் எழுதுவதை நிறுத்தி காகிதச் சுருளை இடுப்பில் சொருகியிருந்தேன். மேலே விவரித்த ஆபத்தை அநுபவித்த காலத்தில் அந்த காகிதச் சுருளை இடுப்பிலேயே யிருந்தது. எண்ணுதன பலவு மெண்ணின காலத்தில் "வியாஸத்திற்கு மகுடம் வைத்ததற் கேற்ப நம்முடைய பிறந்தவாறும் வளர்ந்தவாறும் இப்படியா ஆயிற்று! என்கிற எண்ணமும்

நிகழ்ந்தது."....ஆக இவ்வளவும் பழைய வியாஸம். இனி, மேலே சில விஷயங்களை விண்ணப்பஞ் செய்து இந்த விஜ்ஞாபனத்தை முடித்துக் கொள்ளுகிறேன்.

தற்போது திருமலை திருப்பதியில் பெரிய ஜீயர் பதவியை அலங்கரித்தருளா நின்ற ஸ்ரீமத் பரமஹம்ஸேத்யாதி 'ஜீயர் ஸ்வாமி ப்ரத்யக்ஷ பரோக்ஷேவி அடிக்கடியருளிச் செய்வதொரு வார்த்தையுண்டு; "ஸமயே ப்ராப்தே என்னுடையவும் என்னைச் சேர்ந்தவர்களினுடையவும் ஆயுர் ஹாநதசைப் பகிர்ந்து கொடுக்கத் தடையில்லை" என்று. இதற்கு ஸ்வகீய பரமக்ருபா ப்ரகாசநம் தவிர வேறு பொருளில்லையானாலும் ஹ்ருதய பூர்வகமாக அருளிச் செய்யும் இவ்வார்த்தை கார்யகாரியானுக்கூட அடியேன் ஸ்வாத்மாவை க்ருத க்ருத்யனென்று அநுஸந்திக்க முடியாதவனாகவே யிருக்கிறேன். திருமங்கையாழ்வாருடைய திருமடல்களிரண்டும் இதர திவ்ய ப்ரபந்த விஜாதீயமாக அவதரித்தவை. சிறிய திருமடலில் மோக்ஷத்தை ஒரு புருஷார்த்தமாகவே பரிகணனைச் செய்யாமல் தர்மார்த்த காமங்கள் மூன்றேதான் புருஷார்த்தமென்று ஸாதித்து, மோக்ஷமென்கிற வொரு புருஷார்த்தமுண்டென்பது அவிவேகிகளின் வார்த்தையென்றும் ஸாதித்து, அப்படி அந்த புருஷார்த்தமுண்டென்று இசைந்தாலும் அது அல்ப புருஷார்த்தமே யொழிய உத்தம புருஷார்த்தமன்று என்றும் ["ஏரார் முயல்விட்டுக் காக்கைப் பின் போவதே" என்பதனால்] ஸாதித்தார். பெரிய திருமடலில், தர்மார்த்த காமங்களோடொப்ப மோக்ஷத்தையும் நான்காவது புருஷார்த்தமாகப் பரிகணனம் பண்ணினாராகிலும் அந்த புருஷார்த்தம் உண்டோ இல்லையோ? யார் கண்டார்? என்றே தலைக்கட்டிவிட்டார். உண்மையில் திருமங்கையாழ்வார் பரம ஆஸ்திகரே யொழிய நாஸ்திகரல்லர். திருமடல்களுக்கு முன்னும் பின்னுமுள்ள தம்முடைய திவ்யப் பிரபந்தங்களில் மோக்ஷபுருஷார்த்தத்தை ப்ரசம்ஸித்தவரே யொழிய இல்லைசெய்தவரல்லர். அன்னவர் திருமடல்களிரண்டிலும் இங்ஙனே யருளிச் செய்தது அர்ச்சாவதார ப்ரசம்ஸை யொன்றுக்காகவே யென்பதை அறியாதாரில்லை. இது நிற்க.

வடமொழி வேதமுங்கூட இங்ஙனே அதிவாதம் பண்ணியிருக்கக் காண்கிறோம். தைத்திரீயஸம்ஹிதை ஆறாவது காண்டம் உபக்ரமத்தில் "கோ ஹி தத்வேத யத்யமுஷ்மிந் லோகே ஸ்தி வா ந வேதி" என்று ஓதிவருகிறோம். மேலுலகில் ஒரு ச்ரேயஸ்ஸு உண்டோ இல்லையோ? யாரறிவார்? என்பது இந்த வேத வாக்கின் பொருள். திருமங்கையாழ்வார் போலே அர்ச்சாவதார ப்ரசம்ஸைக்காக ஓதினதன்றே இது. ஆயினும் ஏதோ வொன்றை ப்ரசம்ஸிப்பதற்காகவே இப்படியோதிற்று. ஆஸ்திகர்களான நாம் மோக்ஷ புருஷார்த்தத்தில் விப்ரதிபத்திலேசமுமுடையோமல்லோம்; ஸர்வாத்மநா நம்பியிருக்கிறோம். * ந ச புநராவர்த்ததே ந ச புநராவர்த்ததே * என்று உபநிஷத்தும் * அநாவ்ருத்திஶ்ஶப்தாத் அநாவ்ருத்திஶ்ஶப்தாத் * என்ற ஸூத்ரமும், "மீட்சியின்றி வைகுந்தமாநகர்" என்றும் "போயினர்பின்னை இத்திசைக்கென்றும் பிணைக் கொடுக்கிலும் போகவொட்டாரே" என்றும் ஆழ்வார் ஸ்ரீஸூக்திகளுமிருந்தாலும் இவற்றில் அடியேனுக்குத் தோற்றியதைச் சிறிது விஜ்ஞாபிக்கிறேன். முக்தர்களுக்குப் புநராவ்ருத்தியில்லையென்ற விஷயத்தில் சாஸ்த்ரமே ஒன்று காட்டியிருக்கிறது. (அதாவது) "இமாந் லோகாந் காமாந்நீ காமரூப்யநுஸஞ்சரந்" என்கிற தைத்திரீய உபநிஷத் வாக்யத்தை நம் ஸ்வாமி தாமே ஸ்ரீ பாஷ்யத்தில் ஜகத்வ்யாபாரவர்ஜாதிகரணத்தில் எடுத்துக் காட்டி "யேந யேந யாதி தேந தேந ஸஹ யாதி" என்ற ப்ரமாணத்திற்குச் சேர முக்தன் இவ்வுலக

களுக்கு ஸ்வாதந்த்ர்யேண வருதல் இல்லையாகிலும் பாரதந்த்ர்யேண வருவதுண்டு என்றே ஸித்தாந்தம் செய்தருளியுள்ளார். ஆழ்வார்களோ "மந்திபாய் வடவேங்கடமாமலை, வானவர்கள் சந்தி செய்ய நின்றான்" என்றும், "மண்ணிவிது போலு நகரில்லையென வானவர்கள் தாம் மலர்கள் தூய், நண்ணியுறைகின்ற நகர் நந்திபுரவிண்ணகரம் நண்ணுமனமே." என்றும் பலபல வருளிச் செய்யக் காண்கிறோம். நித்ய முக்தர்கள் திவ்ய தேசங்களிலே வந்து ஸேவிக்கையில் இப்படிப்பட்ட திவ்ய தேசம் துர்லபம் என்று சொல்லிக்கொண்டே ஸேவிப்பதாகவருளிச் செய்யக்காண்கிறோம். பட்டர் ஸ்ரீரங்கராஜஸ்தாநிலைய வர்ணிக்கும் சுலோகங்களில் ஒன்றில் "அஹ்ருதஸஹஜதாஸ்யா: ஸூரய: ஸ்ரஸ்தபந்தா: விமலசரமதேஹா [illegible] ஸ்ரயந்தே" என்று ஸுஸ்பஷ்டமாக வருளிச் செய்கிறார். இந்த ச்லோகத்தைச் சிறிது விவரிக்கக் கேளீர். [அஹ்ருதஸஹஜதாஸ்யாஸ் ஸூரய:] இது நித்ய ஸூரிகளைச் சொன்னபடி. [ஸ்ரஸ்த பந்தா:] இது முக்தர்களைச் சொன்னபடி. [விமலசரமதேஹா:] 'இனி இவர்களுக்கு தேஹ பரிக்ரஹம் கிடையாது' என்று அறுதியிட நின்ற முமுக்ஷுக்களைச் சொன்னபடி. ஆக நித்யர்களும் முக்தர்களும் முமுக்ஷுக்களும் மநுஷ்யதிர்யக்ஸ்தாவர ரூபங்களைப் பரிக்ரஹித்து திவ்ய தேசங்களில் வர்த்திப்பதாக இதனால் தெரிவிக்கப்படுகிறது.

பட்டர் கோஷ்டியில் பலகால் கேட்டுப் பழுத்த ஞானம் படைத்த கம்பர் தமது இராமாயணத்தில் அயோத்தியின் சிறப்பை வருணிக்கின்றவர் "எவ்வுலகத்தோர் யாவரும் தவஞ் செய்தேறுவானுதரிக்கின்ற, அவ்வுலகத்தோர் இழிவதற்கருத்தி புரிகின்ற தயோத்தி மாநகரம்" என்றார். எல்லா வுலகங்களிலுமுள்ளவர்களெல்லோரும் தவஞ் செய்து பெற விரும்பும் மோக்ஷலோகத்திலிருப்பவர்களும் அங்கு நின்றும் இறங்கி வந்து அயோத்தியில் வசிக்க ஆசைப்படுவதாகக் கூறினாராயிற்று இதில்.

நாச்சியார் திருமொழியில் (11—5) * நல்லார்கள் வாழும் நளிரரங்கநாகணையான் * என்றவிடத்து வியாக்கியானத்தில் பட்டருடைய ஐதிஹ்யமொன்றும், ஆளவந்தார் திருமகனார் சொட்டை நம்பியின் ஐதிஹ்ய மொன்றும் காண்கிறது. (பட்டருடைய ஐதிஹ்யமாவது)- "பட்டர் முதுகில் புண்ணாலே நொந்திருக்கச் செய்தே பெருமாள் அருள்பாடிட்டு, வாராய்! அஞ்சினையோ? என்று கேட்டருள, 'நாயந்தே! எனக்குச் செய்து தந்தருளாத தரமில்லை; இங்கேயிருக்கச் செய்தேயும் பரமபதம் என் சிறு முறிப்படி செல்லும்படி பண்ணியருளிற்று; அதிலொரு குறையுமில்லை. இங்கே குளிர்ந்த முகத்தையும் திருநாமத்தழகைப் பூ முறுவலையும் இழக்க வென்றால் அடியேன் அஞ்சமாட்டேனோ? என்றாராம்." (சொட்டை நம்பியின் ஐதிஹ்யமாவது—) இவருடைய சரம ஸமயத்திலே சிலர் வந்து நீர் நினைத்துக் கிடக்கிறதென்? என்று கேட்டார்களாம்; அதற்கு அவர் சொன்ன உத்தரம்;—ஆளவந்தார் ஸ்ரீ பாதத்தின் ஸம்பந்தம் பரமபத ப்ராப்தி பண்ணித்தந்தல்லது விடாது; அங்கே போனால் ஸ்ரீ வைகுண்ட நாதன் முகம் நம்பெருமாள் திருமுக மண்டலம் போலே குளிர்ந்திருந்ததில்லையாகில் முறிச்சுக் கொண்டு வருவதாக நினைத்திருந்தேன் என்றாராம்.

இப்போது இந்த விண்ணப்பத்தில் இந்த ப்ரஸ்தாவத்தை இவ்வளவு விரிவாகச் செய்துவருமடியேனுடைய எண்ணம் என்னவென்றால் மீளாவுலகமாகிய பரமபதத்திற்குச் சென்றாலும் ஸ்வாதீனமான புநராவ்ருத்தியில்லாமற்போனாலுங்கூட பகவதாஜ்ஞாமூலகமாகவோ பகவதநுவ்ருத்தி ப்ரயுக்தமாகவோ புநராவ்ருத்தியுண்டாகியே தீரும்; எவரெவர்களுக்கு எந்தெந்த திவ்ய தேசங்களில் பற்று அதிகமோ அவரவர்களை அந்தந்த திவ்ய தேசங்களின் ப்ராந்தங்களிலேயே ஜனிக்கச் செய்தருள்வனெம்பெருமான் என்பது விவக்ஷிதம்.

ஆழ்வார்கள் * இருள்தருமாஞாலத்துள் இனிப் பிறவி யான் வேண்டேன் * என்றும் * ஆதலால் பிறவி வேண்டேன் * என்றும் மறு பிறவி தவிரத் திருத்தியருளப் ப்ரார்த்தித்தாலும் ஆண்டாள் * எற்றைக்குமேழேழ் பிறவிக்கும் * என்றருளிச் செய்தபடி மேலும் பிறந்துகொண்டேயிருக்கவேணுமென்கிற ஆசையையே ஆவிஷ்கரித்தாள். உடனே "உன்றன்னோடுற்றோமேயாவோ முனக்கே நாமாட் செய்வோம்" என்பதனால், பிறக்க ஆசைப்படுவதன் ஹேதுவையும் விளக்கினாள். இந்த அபிப்ராயத்தையே வேதாந்த வாசிரியர் * [illegible] * என்கிற சுலோகத்தினால் ஒருவாறு காட்டியருளினார். இதில் * ஸம்ஸார ஏஷ பசவந்! அபவர்க்க ஏவ * என்றதற்கு இருவகையான கருத்து அடியேனுக்குத் தோன்றுகிறது. இவ்விருள் தருமா ஞாலத்தில் ஜிஹாஸையுண்டாகித் திருநாடு செல்லவேணுமென்கிற எண்ணமே தோன்றாது என்பது ஒரு கருத்து (2) அங்குச் சென்றாலும் அர்ச்சாவதாராநுபவங்களை விட்டு அங்கே யிருக்க மனம் விரும்பாதாகையாலே இந்நிலத்தையே மோக்ஷமாக நினைத்துப் பதறியோடி வந்திடுவேனென்பது மற்றொரு கருத்து. "வைகுண்டவாஸேபி ந மேபிலாஷ:" என்கிற ஸ்ரீ ஸூக்தியிலும் ஒரு மருமமுள்ளது. (அதாவது) இது இங்கேயிருந்து சொல்லுகிற வார்த்தையாகையாலே "வைகுண்டயானேபி ந மேபிலாஷ:" என்றே சொல்லியிருக்க வேண்டும். அப்படியிருந்தும் ஸ்வாமி 'வைகுண்ட வாஸேபி' என்றது என்ன திருவுள்ளத்தினாலென்னில்; பேரருளாளா! என்றேனுமொரு நாளில் என்னை நீ அங்கே கொண்டுபோகாதிருக்கப் போகிறதில்லை; கொண்டு போகத்தான் போகிறாய்; ஆனாலும் நான் அங்கே வஸிக்க விரும்பமாட்டேன் என்கிற திருவுள்ளத்தினாலாயிற்று (வாஸே) என்றது.

அர்ச்சாவதாரங்களில் (விசிஷ்ய) தேவப்பெருமாள் திறத்தில் ஈடுபாடு கொண்டவர்களின் அத்யவஸாயம் இப்படித்தானிருக்குமென்பதில் ஸந்தேஹமுண்டோ? திருநாட்டிலிருந்து திரும்பி இங்கே வந்துவிட்டாலும் வந்து சேர்ந்த மறுநாளே பழைய அநுபவங்களை அநுவர்த்திக்கச் செய்து கொள்ள முடியுமோ? அநுபவஸாமக்ரிகளை எவ்வளவோ அருமைப் பட்டன்றோ ஸம்பாதிக்கவேண்டியிருக்கும்.

அர்ச்சாவதாரங்களில் கைங்கரியம் அவரவர்களின் அதிகாராநுகுணமாக வாசிகமாகவும் காயிகமாகவும் ப்ராப்தமாகும். பெருமாளை யெழுந்தருளப் பண்ணுதல் குடை பிடித்தல் சாமரை வீசுதல் தீர்த்தம் கொணர்ந்து ஸமர்ப்பித்தல் பாகசாலையில் கைங்கரியங்கள் நிர்வஹித்தல் முதலிய பல காரியங்கள் காயிகத்தில் சேரும். வாசிக கைங்கரியத்தைப் பற்றி விவரிக்க அவசியமுண்டோ? இக் கைங்கரியத்திற்குரிய யோக்யதை ஸம்பாதிப்பதென்றால் இது லகுவான காரியமா? திருமங்கையாழ்வார் பதிகத்திற்குப் பலன் கூறுமொரு பாசுரத்திலருளிச் செய்கிறார் "வல்லரேன வல்லவர் வானவர் தாமே" என்று. 'இவை பத்தும் வல்லார்' 'இவையுமொருபத்தும் வல்லார்' என்றே பிறவிடங்களில் காண்கிறது. திருநாங்கூர்த் திருவெள்ளக்குளப்பதிக மொன்றில் மட்டும் 'வல்லரேன் வல்லவர்' என்றருளிச் செய்தார். 'வல்லரென்று சொல்லும்படியாக வல்லவர்' என்பதன்றோ இதன் பொருள். 'இவர் கற்ற கல்விகளில் எதைக் கேட்டாலும் கேட்டவாய் மூடுவதற்கு முன்னே மயங்காமல் தவறாமல் கங்காப்ரவாஹம்போல் சொல்லக் கூடியவரிவர்' என்று அபிமானித்துச் சொல்லும்படியாகக் கற்பதன்றோ கற்கையாவது. இங்ஙனே கற்று அநுபவத்திற்கு அதிகாரியாவதற்கு எத்தனை காலஞ் செல்லும்? எத்தனை ப்ரயாஸங்கள் படவேண்டும். இங்கு ப்ரயாஸங்கள் பட்டு ஈட்டின கல்விகளுக்கு அங்கு உபயோகமிருப்பதாகவும் தெரிய

வில்லையே. பிள்ளை லோகாசார்யர் ஸ்ரீவசந பூஷணத்தில் (450) "பாட்டுக் கேட்குமிடம்"
என்று பரமபதத்தை நிர்தேசித்தருளினர். ஆழ்வார் பாசுரங்களைக் கேட்குமிடமென்று
பொருளாயிருக்குமோ வென்று மூல மோதின காலத்திலே ப்ரமித்திருந்தேன்; மணவாள
மாமுனிகளின் வியாக்கியானம் "*ஹா தஜ்ஞாஉ ஹாயஹுாவு* என்கிறபடியே நிரந்தராநுபவ
பரரான நித்ய முக்தர் அநுபவத்துக்குப் போக்கு வீடாகப் பண்ணும் ஸாமகானம் கேட்கும்
ஸ்தலமான பரமபதம்" என்று அவதரித்துவிட்டது. திருக்கண்ணபுரம் விஷயமாகத்
திருமங்கையாழ்வார் பத்துத திருமொழிகள் (நூறு பாசுரம்) அருளிச் செய்தார். அவற்றுள்
இரண்டாவது திருமொழி *தெள்ளியீர்* என்பது. இத் திருமொழியின் இனிமை தனிப்
பட்டது. இதற்குப் பயனுரைக்கும் பாசுரத்தில் ஆழ்வார் *நீர்மலிவையத்து நீடு நிற்பார்
களே* என்று இம்மண்ணுலகில் நீண்ட கால வாழ்ச்சியைப் பலனாகக் கூறினர். வியாக்கி
யான சக்ரவர்த்தியான பெரியவாச்சான்பிள்ளை, இத்தனை சிறந்த திருமொழிக்குப் பலனாக
இந்த ஹேயவிபூதியில் வாழ்ச்சியையா சொல்லுவதென்று சங்கித்துக் கொண்டு, திருநாட்
டில் *தெள்ளியீர் திருமொழியின் அநுபவத்திற்கு ப்ராப்தியில்லையே; அது உள்ளது இந்
நிலத்திலேயாகையாலே இதற்குப் பாங்கானவிடத்தில் வாழ்ச்சியைப் பலனாகச் சொன்னது
பொருந்துமென்று ஸமாதானம் செய்தருளினர். ஆக இவ்விபூதியநுபவத்திற்கும் அவ்
விபூதியநுபவத்திற்கும் ஒரு சேர்த்தியுமில்லாமையாலே அவ்விபூதியில் வாஸம் ரஸிப்பது
அரிது என்றே எண்ண வேண்டியதாகிறது.

அன்பர்களே! இந்த வியாஸத்தில் நாம் எழுத நினையாதவை பலவும் எப்படியோ வந்து
புகுந்தன. ஆனாலும் இவை எழுத வேண்டியவைகளே யாம். இனி, இந்த வியாஸத்தின்
முக்கியமான விவக்ஷிதத்தை வெளியிட்டு உபஸம்ஹரிக்கிறேன். இந்த வியாஸத்தில் "க்ருத
க்ருத்யா: ப்ரதீக்ஷந்தே ம்ருத்யும் ப்ரியமிவாதிதிம்" என்கிற ப்ரமாணவசனமே பலகால்
தலைகாட்டுகின்றதென்பதை வாசகர்கள் அறிந்திருக்கிறீர்கள். இடையில் உதாஹரித்த
"அபம்ருத்யுவுக்குத் தப்பிப் பிழைத்த அதிசயம்" என்னும் வியாஸத்திலும் அந்த வசனமே
உயிர்நிலையாயிருக்கின்றது. "எப்போது நாம் க்ருதக்ருத்யராவோம்" என்கிற விசாரமும்
அடியேனுடைய நெஞ்சில் குடிகொண்டிருப்பதாக இந்த வியாஸத்தில் தெரிவித்திருக்
கிறேன். வேதாந்த தேசிகன் பணித்த ஸ்ரீமத் ரஹஸ்யத்ரயஸாரத்தில் (13) க்ருதக்ருத்யாதி
காரம் என்றே ஓர் அதிகாரம் அமைக்கப்பட்டுள்ளது. எம்பெருமான் பக்கலிலே தன்னுடைய
ரக்ஷாபரத்தை ஸமர்ப்பித்து நிர்விசாரனாயிருக்குமவன் க்ருதக்ருத்யனென்றும், அவனுக்கு
கர்த்தவ்ய லேசமொன்றுமில்லையென்றும் அந்த அதிகாரத்தில் தெரிவிக்கப்படுகிறது. இது
பரமார்த்தமானாலும் அடியேன் வரையில் க்ருதக்ருத்யத்வத்தை இவ்வளவு சுருங்க அநுஸந்
தித்து நிற்பேனல்லேன். அடியேனுடைய அதிகாரத்திற்கு அநுகுணமாகச் செய்ய நினைத்த
ஜகதுபகாரங்களைப் பூர்த்தியாகச் செய்து தலைக்கட்டினால்தான் க்ருதக்ருத்யத்வம் ஸித்திக்கு
மென்று உறுதி கொண்டவனடியேன். செய்ய நினைத்த ஜகதுபகாரங்கள் யாவை? அவை
எப்போது முடிவுபெறும்? என்று கேட்டால் இதில் இரண்டாவது வினாவுக்கு விடை கூறவறி
யேன். செய்திருக்கிற ஜகதுபகாரங்களை உலகமறியும்.

உலகமறிந்தாலும் நம்முடைய ஆனந்தத்திற்குப் போக்குவீடாக நாமும் நமது
கையால் இங்கு எழுதுகின்றோம். எட்டு வருஷங்களுக்கு முன்பு தானேயெழுதிய தன்சரிதை
என்று அடியேனெழுதி வெளியிட்டிருக்கும் புத்தகம் பெரும்பாலும் தென்னாடு முழுதும் பரவி
யுள்ளது. அதில் 272 ஆம் பக்கத்தில் ஸ்வகீயக்ரந்த ரசனைகள் என்று தொடங்கி 424 ஆம்
பக்கம் வரையில் அதைப்பற்றின விவரணமேயுள்ளது. ஆளவந்தார் தொடங்கி மணவாள

மாமுனிகளீறாகவுள்ள ஸகல பூர்வாசாரியர்களுமருளிச் செய்த ஸம்ஸ்க்ருத-மணிப்ரவாள-த்ராவிட க்ரந்தங்களைப் பெரும்பாலும் பரிஷ்கரித்துப் பல லிபிகளிலும் வெளியிட்டிருக்கிறேன். அடியேன் வெளியிடாத பூர்வாசார்ய க்ரந்தம் ச்ருத ப்ரகாசிகை போன்ற சிலவேயிருக்கும். அடியேன் வியாக்கியானம் செய்யாத பூர்வ க்ரந்தங்களும் சிலவே யிருக்கும். 'அஹதாம் ஸர்வோபி நிர்வாபித:'' என்று தேசிகன் பணித்த கணக்கிலே, தென்னிந்தியாவிலும் வட இந்தியாவிலும் ஆங்காங்கு தலையெடுக்கும் துர்வாதங்களை நிரஸித்து எழுதிய நூல்களும் அபரிமிதங்கள். இந்த வாத நூல்கள் அஸ்தானே என்றாவது அஸங்கதம் என்றாவது ஒரு ப்ராமாணிகரும் இதுவரையும் பகர்ந்ததில்லை. இப்போது வெளிவரும் இந்த ஸஞ்சிகையிலுங்கூட எம்பெருமான் இதற்கு அவகாசமளித்தருளினன். அதை மேலே காணலாம்.

ஆக இவ்வளவு கொண்டு ஸ்வாத்மாவை க்ருதக்ருத்யனாக அநுஸந்திக்கக் குறையேயில்லை. 'என்னளவு க்ருதக்ருத்யர் வேறொருவரில்லை' என்று கூட செருக்குக் கொண்டிருப்பதுண்டு. ஒவ்வொரு ஸமயத்தில் ஜகதுபகாரகமான க்ருத்யம் ஒவ்வொன்று தொடங்கும்போது 'இதைச் செய்து தலைக்கட்டினேனாகில் க்ருதக்ருத்யராவோம்' என்றே நினைப்பதுண்டு. அது தலைக்கட்டினவாறே வேறொன்றில் நெஞ்சு செல்லும்......இப்படியே மனோரத ப்ரவாஹங்களும் தத்கார்ய பாரம்பர்யங்களும் பெருகிச் சென்று கொண்டிருக்கின்றன. இரண்டு மூன்று ஸம்வத்ஸர காலமாய் ஒரு பெரிய காரியம் தொடங்கப்பட்டு நடைபெற்றுவருவதை உலகம் அறியுமாகிலும் விசிஷ்ய நினைப்பூட்டுகிறேன்

ஆழ்வார்களின் திவ்ய ஸூக்திகளான திவ்யப்ரபந்தங்களுக்குத் தமிழில் திவ்யார்த்ததீபிகை வெளியிட்டதுபோல ஸம்ஸ்க்ருத பாஷையிலும் ஹிந்தி பாஷையிலும் தெலுங்கு பாஷையிலும் டீகைகள் வெளியிட வேணுமென்கிற உத்ஸாஹமுண்டாகி இரவும் பகலும் இதுவே பெரிய காரியமாக நடந்து வருகிறது. தெலுங்கு டீகையைப்பற்றி இங்கு அதிகமாக விஜ்ஞாபிக்க விரும்பவில்லை. அது ஸாதாரண ப்ரக்ரியையில் நடந்துவருகிறது. ஸம்ஸ்க்ருத டீகையும் ஹிந்தீ டீகையும் மிகப் பெரிய காரியமாக நடந்து வருகிறது. அடியேன் ஸம்ஸ்க்ருத டீகையை எழுதிவருகிறேன்; அடியேனுடைய பெரிய மாப்பிள்ளை. ஸ்ரீ. உ. வே. அக்காரக்கனி. ஸம்பத்குமாராசாரியர் [அனேகபாஷா ப்ரவீணர்] ஹிந்தீ டீகையை எழுதி வருகிறார். இரண்டும் எழுதிவருவதோடு நிற்கவில்லை; கனவேகமாக அச்சாகியும் வருகின்றது. இதுவரையில் முதலாயிரம் நான்கு ஸம்புடமாகப் பூர்த்தியடைந்திட்டது. இரண்டாவதான பெரிய திருமொழியாயிரத்தில் இரண்டு ஸம்புடங்கள் வெளிவந்திருக்கின்றன. மூன்றாவதான இயற்பா ஆயிரத்தில் ஒரு ஸம்புடம் வெளிவந்துளது. திருவாய்மொழியாயிரமே இப்போது மிகப் பெரிய காரியமாக நடந்துவருகின்றது. ஒரு பெரிய ஸம்புடமாக முதற்பத்து முடிந்து வெளிவந்திருக்கின்றது. இரண்டாவது பத்தில் (12-3-64) தேதியாகிய இன்று அச்சாகி வருவது (5) * அந்தாமத்தன்பு செய்து * என்கிற திருவாய்மொழி. இப்பதிகத்தின் அவதாரிகையையும் முதற் பாசுரத்தின் டீகையையும் மட்டும் இதில் சேர்த்து உபஹரிக்கிறேன். நமது நாட்டினரும் இதன் வைசரியைச் சிறிது தெரிந்து கொண்டு ரஸிக்கட்டுமென்று. இப் பெரிய காரியம் தலைக்கட்டினாலொழிய அடியேனை க்ருதக்ருத்யனாகக் கருதகில்லேன். இதையே பேரருளாளனுடைய திருவடிவாரத்தில் அஞ்சலிபந்தத்துடன் விஜ்ஞாபித்து நிற்கிறேன்.

... ... ... *

अद्याप्यकृतकृत्यत्वान्न प्रतीक्षे हरेः पदम् । कृतकृत्यं विधायैव मां नयेद्वरद प्रभुः ॥

---

॥ श्रीरस्तु ॥

श्रीपरांकुश-परकाल-यतिवर-वरवरमुनीन्द्रेभ्यो नमः

# ॥ सहस्रगीत्याम् द्वितीयशतके-पञ्चमंदशकम्—अन्दामत्तन्बु ॥

अवतारिका—अधस्तान्मुनिवरस्य मनसि संजाता व्यथा स्ववाचा समुद्घाटयितुमशक्या जननीवाचा ह्युद्घाटनीया समभूत्। तदनु किं वृत्तमिति विमर्शे * गज आकर्षते तीरे ग्राह आकर्षते जले * इतिस्थिताया मवस्थित्यां यद्धि संपन्नम्, ननु तदेव सम्पन्नम। गजस्य तावत स्थले शक्तिः; ग्राहस्य तावज्जले शक्तिः। स जलं प्रत्याकर्षति हस्तिनम्; एष तु स्थलं प्रत्याकर्षति मकरम्। एवं नाम व्यपगतो बहुतिथः कालः। अन्ततो गजराजः * परमापदमापन्नः * इति वक्तव्यामवस्थामवजगाहे हन्त! सर्वात्मनाऽपि स्वप्रवृत्तिरस्य विरराम। तादृशीमेव हि दशामपेक्षते स्वयंरक्षादीक्षासमधिकसमिन्धानयशा स्स भगवान्। आर्तत्राणपरायणस्स सपदि कीदृशस्संवृत्तः? देवीहस्ताम्बुजेभ्य श्चरणकिसलये संवहद्द्वयोऽपहृतवान्; प्रत्यास्थदनन्तभोगम्; झटिति चलपुटे चक्षुषी व्यस्तृणीत; लक्ष्म्यास्स्तनकलशकनत्कुङ्कुमस्तोमपङ्कादाचिक्षेप च वक्षः। किं बहुना? गजपतिघुषिते दिव्ये धाम्नि स्थातुमशक्तो महतीं वैयाकुलीं विजगाहे। अतन्त्रितचमूपतिप्रहितहस्तः अस्वीकृतप्रणीतमणिपादुकः प्रस्थातुमुपचक्रम उत्थाय। 'किमेतदहह! किमिदं नाम बत!' इत्यन्तःपुरे च महती समुद्भूदाकुलता। अवाहनपरिष्क्रियं पतगराजमारुरोह। भगवदंघ्रिसंमर्दकिणाङ्कशोभी स च धन्यजन्मा विहगराजो भगवतस्संकल्पवेगमप्यतिशयानः छटछटायितपतत्रमूरुसन्नध्वानमतिलंघयति। भगवतो मनसि समुदिता त्वरा किमुपवर्ण्यताम् कथमुपवर्ण्यताम्! 'हे वैनतेय! मम मानसीं व्यथामजानन् किमित्येवं मन्दजवो व्रजसी' त्याक्रोशन् हुंकारशतमुपबृंहयति: आस्फालनसहस्रमातनुते; अंघ्रिप्रहतिततीं रवतारयति; अथाप्यनतिरिच्यमानरभसं तं तार्क्ष्यं कक्षे निक्षिपन् वात्याव्यालोलत्कमलतटाक ताण्डवभाजा चक्षुषा विहायसस्तल मुत्फुल्लपङ्कजवनमिवोपकल्पयन् स्रग्भूषाम्बरमयथायथं दधानो धिङ्माम्! धिङ्मामित्यात्मानमतिनरां गर्हमाणो ग्राहगजयोः स्पर्धास्पदं तटाकमुपससर्प क्षणेन। अवसन्नस्य गज तेस्सौन्दर्यमप्रमेयमनिमेषमवेक्षमाणः पयःपूरं प्रवाहयति पुण्डरीकविशालाभ्यां स्वविलोचनाभ्याम्। परामृशति व्रणकिणकर्कशं वेतण्डपादम्। क्षणार्धे तस्य व्यथां व्यपोहतोऽप्यच्युतस्य जलधितोऽप्यतिवेलमुज्जृम्भमाणां मानसीं वेदनां हन्त! वेद कः? को वा साक्षाच्चक्रे।

ततोऽप्यतिशयिनीं व्यथामधुना वकुलाभरणमुनीन्द्रस्त्वयं साक्षादकुरुत स्वविषयिणीम्। अधस्तनदशके चतुर्थ्यां गाथायां 'सततसन्नद्धपक्षिराजवाहन भो भगवन्!' इति ह्यंदसीयमाक्रन्दनं जननी न्यवेदयत्। परमचेतनस्स भगवान् तत्तात्पर्यं सुष्टु पर्यवमृशन् गजराजस्येव ममाप्यार्तिमतिशयिनी मवबुध्यमानस्तथैव हि समागत इति हर्षस्य परां कोटिमाटिटीके मुनिवरः। तत्तादृशहर्षपरिणामरूपमिदं दशकमानन्दसंदोहमयमनघभक्तिभाजाम्।

अस्माकं बाल्याधीतेषु सद्यो विस्मरणीयेषु च श्लोकसहस्रेषु कश्चिदयं श्लोकः कालिदासस्य स्मृतिपथमुपयाति विक्रमोर्वशीयनाटकस्थः—* नितान्तकठिनां रुजं मम न वेद सा मानसीम् * इति। एवं हि कवयो विशेषेषु विषयेषु निजां मधुरां वाचं विनियुञ्जाना विशेषज्ञा वो व्यतीनाः। न तादृशं दौर्भाग्यमस्मदीयानां पूर्वेषां पुरुषाणाम्। स्वानुभवस्य तत्परीवाहभूतवाग्विलसितस्य चाप्रतिद्वंद्वभावो ह्यद्वितीयोऽतिशयः प्रेमार्द्रविह्वलगिरामस्मदीयपूर्वपुरुषाणाम्। तदीयानां दिव्यवाचां सौवादवं साक्षादनुभवितुं भाग्यविकलानामपि वैदेशिकानां कथञ्चित्तदर्थानुभवमुत्पाद्य स्वीयं जन्म धन्यधन्यमातन्वानस्य मम भाग्यमस्मिन् स्थलविशेषे विशिष्यानुसंहितम्॥ .... *

(गाथा.) अन्दामत्तन्बु शेय्दु एन्नाविशेरम्मानुक्कु * अन्दाम वाण्मुडि शङ्गु आळिनूलारमुळ *

शेन्दामरैत्तडङ्कण् शेङ्कनिवाय् शेङ्कमलम् * शेन्दामरैयडिकळ् शेम्पोन् तिरुवुडम्बे ॥ १ ॥

**दिव्ये धाम्नीव मम कलेबरस्य सुषिरेऽपि सप्रेमभरं संश्लिष्टस्य परस्य पुंसो रमणीयस्रग्विभूषितो जाज्वल्यमानो मकुटो विराजते; शंखचक्रयज्ञोपवीतहाराश्च विभ्राजन्ते। दृशौ तावदरविन्दतटाकनिभे; पक्वफलोपमोऽधरश्च साक्षात्कमलम्; पादौ च पद्मनिभौ। दिव्यं च रूपं शुद्धजाम्बूनदप्रभम्॥**

अधस्तात् तृतीयदशकावसाने दिव्यधामनिकेतनैर्नित्यसूरिभिस्सह योगं खलु स्वयमकामयत मुनिसार्वभौमः; तामेव कामनां फलेग्रहिमातितंसुः परमः पुमान् दिव्यभूषणदिव्यायुधादिरूपान्तरमापन्नैस्तैस्स-ाथस्समेत्य संश्लिष्यतिस्म। तदेतदानन्दभूम्ना संप्रकाशयति। दिव्ये धाम्नीवेत्येतत् दिव्यधामनिकेतनेषु सूरिष्विवेत्यर्थकम्। तेषु यादृशो यावांश्च प्रेमभरः स्वस्य, तादृशं तावन्तं च स्वात्मविषये कृतवानित्यनुसन्धीयते। तदिदं कथमवगतं मुनिवरेणेति चेत्; तदीयदिव्यशुभविग्रहे विलोकितं प्रभापौष्कल्यं स्वयमेव ह्यवगमयितुमलम्। सोऽपि स्ववाचा समुद्घाटितवान् स्यादित्यत्रापि न विशयः। मुनिवरेणानेन सह संश्लेषतः पूर्वं भगवन्निर्विशेषमौज्ज्वल्यविहीना मलिनाश्च स्थिता भूषणायुधविशेषा अधुना भगवता समं विधूतमालिन्या विवृद्धौज्ज्वल्याश्च समभूवन्निति भगवान् रामानुजार्योऽनुजग्राहेति प्राहुराचार्याः। [**रमणीयस्रग्विभूषितो जाज्वल्यमानो मकुटो विराजते**] यद्यपि भगवान् किरीटमकुटचूडावतंसमकरकुण्डलग्रैवेयकहारकेयूरादिभिरनन्तैर्दिव्याभरणैस्सततमलंकृत स्वभावत एव विराजते, तथाऽपि तानि स्वस्य सन्तीति सत्यं सर्वज्ञोऽपि भगवान् न वेद; इदानीं मुनिवरस्तानि स्वयमनुभूय स्ववाचा कथयतीत्येतेनैव हेतुना सोऽपि सुव्यक्तं वेद। वस्तुमतामपि वस्तूनां कथनस्य द्वितयं हि प्रयोजनम्। अनुभोक्तुरनुभवः, अनुभुज्यमानाय व्यक्तिविशेषाय समुद्बोधनं चेति। अनन्तमहाविभूतिकाय भगवते तद्विभूत्येकदेशसमुद्बोधनं किं नाम फलं प्रसुवीतेति नाशङ्कनीयम्; भगवन्नामसु स्तवप्रिय इत्यपि ह्यन्यतमं नाम। जन्मदरिद्रानस्मादृशान् प्रति भवान् कोटीश्वर इति कश्चिदाह चेद्धन्त! कियन्तमानन्दमनुभवामः। वस्तुतोऽखिलाण्डकोटिब्रह्माण्डनायकस्य तस्य कतिपयैश्वर्यकीर्तनमात्रेणापि स सपदि समुल्लसितसर्वाङ्गो भवतीति सत्यमेतत्; अन्यथा स्तुतिलेशेन स कथं स्वकीयमौदार्यातिशयं प्रकाशयेत्। स हि स्वकीयस्तुतिनिरताय जनाय उभयविभूत्यैश्वर्यमपि हि प्रददाति। अस्यां हि गाथायाम मया संश्लिष्टस्य मत्प्रभोः किरीटोऽस्ति, शंखचक्रे स्तः, यज्ञोपवीतमस्ति, हारोऽस्ति इत्येवं मुनिवरवाचोविनिर्गमो न केवलं वक्तारं स्वात्मानमेव, नाप्यनुसन्धाननिरतानस्मादृशान्, परम् तदात्वे मुनिवरवाचा श्रुतवन्तम् अद्यापि तत्रतत्र दिव्यदेशेषु भक्तजनमुखतः शृण्वन्तं च भगवन्तमपि द्रवीकर्तुं प्रभवनीत्यत्र को वा सचेतनस्संशयीत।

अथ दिव्यावयवसुषमाविशेषमनुभुङ्क्ते [**दृशौ तावदरविन्दतटाकनिभे! इत्यादिना**] जन्मदरिद्रस्य निधिलाभे सति स किं कुर्वीत? न किमपि कुर्वीत; काचमात्रमपि नाददीत; निधिमेव मुहुर्मुहुर्वीक्षमाणोऽवतिष्ठेत; एवं भगवानपि त्रैलोक्यसम्राडपि सन् श्रीशठरिपुमुनिवरसधर्मव्यक्तिविशेषमन्यत्र कुत्राप्यनवेक्षितवान् अधुनैव दिव्यतिन्त्रिणीतरुमूले वीक्षितवान् 'उभय्यामपि विभूत्यामदृश्यो ह्येतादृशो व्यक्तिविशेष' इत्यवधायन् निष्पन्दस्तिमितस्मेरनेत्रः स्थूलस्थूलान् बाष्पबिन्दून्विकिरन्नवतस्थे; तादृशीं स्थितिं साक्षात्कुर्वन्मुनिवरः प्राह मृदुमधुरम् [**दृशौ तावदरविन्दतटाकनिभे**] इति। अथ च किमपि भाषितुमुत्सहतेस्म भगवान्। * अवाक्यनादरः * इति हि स्थितवान् स एष दिवि; विहाय तां मूकदशामत्रागतस्य तस्य स्वैरभाषणे कः प्रतिरोधः? न कोऽपि सत्यम्। अत एव किमपि किमपि भाषितुमुपक्रमते। वावदूकमग्रेमुनिवरस्य पुरतः किं नाम भाषितुं प्रभविष्णुरसौ। स्मेराधरस्फुरणमात्रमेवावलोकयन्मुनिवरः [**पक्वफलोपमेयोऽधरश्च साक्षात्कमलम्**] इति प्राह। अथ कटाक्षवीक्षणेन स्मितविलसितेन च क्रीतो मुनिवरः किमपि वक्तुमशक्नुवन् तस्य पादयोः पतन्नाचष्टे [**पादौ च पद्मनिभौ**] इति। अशेषैरमरैरन्यैश्चानवरतं प्रणतपादस्यापि भगवतः उभयविभूतिविलक्षणस्य शठरिपुमुनेरेकस्य प्रणामो ह्यलभ्यलाभः। तेन चात्यन्तमुज्ज्वलस्तप्तचामीकरनिकरवदवभासे; तदवेक्ष्य कथयति दिव्यं च रूपं तप्तजाम्बूनदप्रभमिति॥ *

Srimathe Ramanujaya Namah.



Sri Kanchee Maha Vidwan Jagadacharya Simhasanadhipathi

## P. B. Annangaracharya Swami's

# SEVENTY FOURTH BIRTHDAY CELEBRATIONS.

The Seventy-third birth day of Sri Swami is being celebrated this year at his residence in Kanchi from 20—3—1964 to 31—3—64. As usual, Vedas, Divya Prabandhas, Stotras, and Rahasyas will be chanted. Processions of the Veda Goshti and religious lectures will also be held. Astikas one cordially invited to attend the Celebrations.

P. B. RANGANATHAN.

श्रीमते रामानुजाय नमः। श्रीमद्वरवरमुनये नमः।

श्रीमद्वादिभीकरमहागुरवे नमः।

श्रीकाञ्ची प्रतिवादिभयङ्कर–जगदाचार्य सिंहासनाधीश

श्रीमदण्णङ्गराचार्य स्वामीजी का

# * ७३ तिरुनक्षत्रपूर्ति महोत्सवाह्वान पत्रिका *

——:*:——

माननीय बन्धु मित्र शिष्य सज्जनगणों! श्री स्वामीजी का जन्मनक्षत्र मीनमास का विशाखा है। जिसके उपलक्ष्य में आगामी मीनमास में २०–३–६४ से ३१–३–६४ तक चार वेदों का पारायण, दिव्यप्रबन्धपाठ, स्तोत्रपाठ, विद्वज्जनों का व्याख्यान इत्यादि समारोह समेत महोत्सव काञ्ची में होनेवाला है।

आप लोग उपस्थित होकर सहानुभूति ब्रह्मानन्दानुभव करना चाहिए।

इति शुभम्।

२०—२—६४,<br>श्रीकाञ्ची.

प्रतिवादि भयङ्कर. रङ्गनाथाचार्यः

ஸ்ரீ:

பேரருளாளன் பெருந்தேவித்தாயார் திருவடிகளே சரணம்.



ஆழ்வாரெம்பெருமானார் ஜீயர் திருவடிகளே சரணம்.

ஸ்ரீகாஞ்சீ ப்ரதிவாதிபயங்கரம்

அண்ணங்கராசார்ய ஸ்வாமியின்

# ரோபகிருது ௵ மீன விசாகோத்ஸவப் பத்திரிகை.

ஸ்ரீஸ்வாமியின் எழுபத்துமூன்றாவது திருநக்ஷத்திர பூர்த்தியை முன்னிட்டு
நாளது பங்குனி௴ 7௳ வெள்ளிக்கிழமை முதல்
18௳ செவ்வாய்க்கிழமை வரை

**20—3—64 to 31—3—64**

*ஸ்ரீ காஞ்சியில் ஸ்வாமியின் திருமாளிகையில்*

வேதபாராயணம் திவ்யப்ரபந்தஸேவை ரஹஸ்யாநுஸந்தானம்
ஸ்தோத்ரபாடம் வித்வான்களின் உபந்யாஸம்
இவை நடைபெறும்.
ஆப்தர்கள் அனைவரும் கூடியிருந்து சிறப்பாக நடப்பிக்கும்படி
ப்ரார்த்திக்கப்படுகிறார்கள்.
வேதபாராயண கோஷ்டிகள் கடந்த ஸம்வத்ஸரங்களிற்போலவே
ஸாமவேதம், சுக்லயஜுஸ், யஜுர்வேதம் க்ரமாந்தம்
திருவீதி வலத்துடன் நடைபெறும்.
வேதசாந்தியும் திவ்யப்ரபந்த சாற்றுமுறையும் 31—3—64.

இங்ஙனம்,

காஞ்சீபுரம்,
25—2—64.

ப்ரதிவாதிபயங்கரம் செல்வமணி என்கிற
*ரங்கநாத தாஸன்.*

**57. ஸோப்யகச்சந் மஹாதேஜாச் சபரீம் சத்ருஸூதந:,
சபர்யா பூஜிதஸ் ஸம்யக் ராமோ தசரதாத்மஜ:,**

ஸ: சபரீம் அப்யகச்சத்– சபரியைப்பற்றி முன்னம் தெரிவித்த தநுகபந்தனுடைய வாக்கில் 'அபிகச்ச' என்று வந்திருப்பதும், இங்கு 'அப்யகச்சத்' என்று ருஷிவாக்கில் வந்திருப்பதும் உற்று நோக்கத்தக்கவை. "ச்ரமணீம் தர்மநிபுணும் அவேக்ஷஸ்வ" என்றோ 'கடாக்ஷய' என்றோ கபந்தன் சொல்லியிருக்கலாம். இங்கும் 'ஸ ப்ராப சபரீம் ராம:' என்றோ "ஸ சபர்யாச்ரமம் ப்ராப" என்றோ சொல்லியிருக்கலாம். இங்ஙனன்றிக்கே 'அபிகச்ச' என்று அவன் சொன்னதும் 'அப்யகச்சத்' என்று ருஷி சொல்லுவதும் ஸாமான்யமானதன்று. ஒரு தேவதாவிசேஷத்தில் செய்யும் வழிபாடுதன்னையே அபிகமனம் என்று சொல்லுவது முறை. அந்தரங்க ப்ரதிபத்தி யோடு செய்யும் அணுகுதல் அபிகமன மெனப்படும். அத்தகைய வழி பாட்டுக்குரிய விலக்ஷண வ்யக்திவிசேஷம் சபரியென்பவள் என்று விளங்கிற்று. இங்கு மஹாதேஜா: என்றும் சத்ருஸூதந: என்றும் பெருமாளுக்கு இரண்டு விசேஷணங்களிட்டது பாதபூரணார்த்தமன்று, ஸாபிப்ராயம். சபரியின் ஆச்ரமத்தருகு எழுந்தருளும்போதே பெருமாளு டைய திருமுக மண்டலம் மிகவும் தேஜஸ்வியாயிற்றென்கிறது மஹாதேஜா: என்பதனால். சரம பர்வ நிஷ்டையைக் காணப்பெறுகிறோமென்கிற மகிழ்ச்சி முகத்திலே தெரியலாயிருந்தது. ப்ரதம பர்வ நிஷ்டர்களான பகவத் பக்தர்களைக் காண்பது அரிதன்று; சரமபர்வ நிஷ்டர் களெனப்படுகிற ஆசார்ய சுச்ருஷா நிரதர்களையும் ஆசார்யாபிமாந பாத்ர பூதர்களையும் காண்பது பெருந்தவப் பயனென்பர். இதற்கு மேல் சத்ருஸூதந: என்றது, அந்த சபரிக்கு ப்ராப்தி ப்ரதிபந்தகங்களாய்ச் சில விரோதிகளிருந்தனவாக அவளுடைய வாக்கில் நின்றுமே தெரிய வருவதனால்,அந்த விரோதி நிரஸநத்தைத் தம்முடைய கடாக்ஷவீக்ஷணத்தினால் செய்தருள்வதாக ஸங்கல்பித்தார் பெருமாள் என்று தெரிவிக்கின்றது.

இதற்குமேல் 'சபர்யா பூஜிதஸ் ஸம்யக் ராம:' என்றதைப்பற்றிச் சில ஆராய்ச்சிகள் செய்யப்ராப்தமாகிறது. ஸ்ரீ ராமாயணத்திலும் கம்ப ராமாயணத்திலும் பெருமாள் சபரியிடம் கலந்து பரிமாறின வரலாறு விசேஷித்துஸ்பஷ்டமாகக் கூறப்படவில்லையாயினும், இதர ராமாயணங்களிலுள்ளதைக் கொண்டோ, இவ்விடத்தில் "சபர்யா ஸம்யக் பூஜித:, " என்றிருப் பதை ஆழ்ந்து நோக்கியோ நம் ஆசார்யர்கள் அருளிச்செய்த விசேஷம் யாதெனில்; ஸ்ரீவசந பூஷணத்தில் (233) "பெருமாள் ஸ்ரீ சபரி கையாலே அமுது செய்தருளினார்" என்றவிடத்து வியாக்யானத்தில் மணவாள மாமுனிகள்– "ரகு குல திலகராய் ஆசாரப்ரதானரான பெருமாள் 'சபர்யா பூஜிதஸ் ஸம்யக் ராமோ தசரதாத்மஜ:' என்னும்படி வேடுவிச்சியோய்வைத்தே குரு சுச்ருஷையிலே பழுத்து ஜ்ஞாநாதிகையாய்த் தன் நாவுக்கு இனிதாயிருந்த பல மூலாதி களெல்லாம் இங்குத்தைக்கென்று ஸஞ்சயித்துக் கொண்டு வரவு பார்த்திருந்த ஸ்ரீ சபரி, தன் ஆதராநுகுணமாகத் தன் கையாலே அமுது செய்யப்பண்ண அதிஸந்துஷ்டராய் அமுது செய்தார்" என்றருளிச் செய்துள்ள ஸ்ரீ ஸூக்திகள் விசேஷித்து அநுஸந்திக்கத்தக்கவை. இதில் "தன் நாவுக்கு இனிதாயிருந்த" என்கிற வார்த்தையை மாமுனிகள் மூலப்ரமாண மொன்றின்றி யருளிச் செய்யார். "பூர்வே பூர்வேப்யோ வச ஏததூசு:" என்று வேதமோதின ப்ரபலப்ரமாணம் இருந்தே தீரும். இதையநுஸரித்தே கோவிந்த ராஜார்யரும் "ராமஸ் ஸமாக மிஷ்யதீதி ஸ்வாதூநி பலாநி ஆஸ்வாத்யாஸ்வாத்ய பரீக்ஷ்ய நிக்ஷிப்தவதீ இதி ப்ரஸித்தி:" என்றெழுதி வைத்துள்ளார். இப்பொருளெல்லாம் ஸம்யக் என்பதில் அடங்கியேயுள்ளது. இதுமே சரபங்க முனிவர் அகஸ்த்ய முனிவர் முதலானோர் செய்தது ஸாமாந்ய பூஜை; இதுவே பெருமாள் திருவுள்ளத்தால் ஸம்யக் பூஜை - என்னலாம்படியுள்ளது.

5

வேதாந்த வாசிரியர் தயாசதகத்திலே "நிஷாதாநாம் நேதா கபிகுலபதி: காபி சபரீ' என்று ஸ்ரீ ராமாவதாரத்தில் விசேஷாநுக்ரஹ பாத்ர பூதவ்யக்திகள் மூவரையெடுக்கின்றவர் குஹப் பெருமாளையும் சபரியையும் எடுத்திருக்கின்றார். இவ்விருவர்க்குமுள்ள வாசியைச் சிறிது ஆராய்வோம். சபரியிடத்தில் பெருமாள் இவ்வளவு கலந்து பரிமாறக் காரணமென்ன? என்று ஆலோசிக்கும்போது குஹனிடத்தில் பெருமாள் நடந்துகொண்ட விதமும் ஆலோசிக்கப்படவேண்டும். குஹன் சில உணவுப் பொருள்களைக் கொணர்ந்து கொடுத்து இவற்றைத் திருவுள்ளம் பற்றியருள வேணுமென்று வேண்ட, அதற்குப் பெருமாள் கூறின மறுமொழி (அயோ. 50) ''யத் த்விதம் பவதா கிஞ்சித் ப்ரீத்யா ஸமுபகல்பிதம், ஸர்வம் தத் அநுஜாநாமி ந ஹி வர்த்தே ப்ரதிக்ரஹே. அச்வாநாம் காதநோஹமர்த்தி நாந்யேந கேநசித். ஏதாவதாத்ர பவதா பவிஷ்யாமி ஸுபூஜித:'' என்பது. நான் இந்த வனவாஸத்தில் யாரிடத்திலும் ஏதும் பெற்றுக்கொள்வதில்லையென்று விரதம் கொண்டிருக்கிறேன்; நான் எந்த ரதத்தில் வந்தேனே அந்த ரதம் இன்னும் அயோத்திக்குத் திரும்பிப் போகாமையினாலே தேர்க் குதிரைகள் விடாய்த்திருக்கின்றன; அவற்றுக்கு வேண்டிய உணவுகளையே நான் விரும்புபவன் என்று சொல்லி அவற்றைத் தாம் கைப்பற்றாமலேயிருந்துவிட்டார் பெருமாள். இங்குப் பெருமாள் "ந ஹி வர்த்தே ப்ரதிக்ரஹே'' [நான் தானம் வாங்கக்கூடாதென்று வைத்துக்கொண்டிருக்கிறேன்.] என்பது அவசியம் சொல்லியாக வேண்டிய வார்த்தையோ? குஹன் மதுபர்க்கம் முதலிய சிலவுணவுப் பொருள்களைக் கொணர்ந்து கொடுக்கவந்தானேயல்லது தனதான்ய வஸ்த்ராதிகள் எதுவும் கொடுக்க வந்திலன்; அவற்றைக் கொடுக்கவந்தால் அப்போது நான் ப்ரதிக்ரஹம் பண்ணுவதில்லை, என்று சொல்லி மறுக்க நியாயமுண்டு. தேன் முதலிய காட்டுணவுப் பொருள்களையே கொடுக்கவந்தபோது "ந ஹி வர்த்தே ப்ரதிக்ரஹே'' என்று சொல்லி மறுத்ததானது அவசியம் ஆராயத்தக்கதன்றோ? குஹனிடம் இப்படிச் சொன்னவிவரே சபரியிடம் மறுத்துக் கூறாமல் "அர்ச்சிதோஸ்மி த்வயா பக்த்யா'' என்று சொல்லி அவளுடைய ஸமர்ப்பணையை உகந்து ஏற்றுக்கொண்டார்.

கீழே நாமெடுத்துக் காட்டியுள்ள ஸ்ரீ வசன பூஷண வியாக்கியான ஸ்ரீஸூக்தியில் ''குரு சுச்ருஷையிலே பழுத்து ஜ்ஞாநாதிகையாய்'' என்று மாமுனிகள் மருமமாக வருளிச் செய்திருப்பது உயிரான வார்த்தை. சபரியிடம் மிகச் சிறந்ததொரு தருமம் குருசுச்ருஷையென்பதிருந்தது. இதைக் கபந்தன் பெருமாளுக்குத் தெரிவித்தனன். "ச்ரமணீ சபரீ நாம காகுத்ஸ்த சிரஜீவிநீ, த்வாம் து தர்மே ஸ்திதா நித்யம்'' என்றும், "ச்ரமணீம் தர்மநிபுணாம் அபிகச்ச'' என்றுமுள்ள கபந்தனது வார்த்தைகளில் தர்ம சப்தத்தினால் விவக்ஷிதம் குரு சுச்ருஷையேயாகும். பெருமாளும் சபரியைக் கண்டவுடனே க்ஷேமம் வினவுகையில் ''கச்சித் தே குருசுச்ருஷா ஸபலா சாருபாஷிணி'' என்று உன்னுடைய குருசுச்ருஷை நிறைவேறியதா? என்று கேட்டிருக்கிறார். அவளும் தான் செய்த குரு சுச்ருஷையைப் பற்றி ஆனந்தமாக விடை கூறியிருக்கிறாள்; 'இங்கு என்னுடைய பணிவிடையைக் கொண்ட ஆசாரியர்கள் திருநாடு சென்றிருக்கிறார்கள்; அவர்களின் திருவடி வாரம் சென்று சேர எனக்கு அநுமதி தந்தருளவேணும், என்றும் கோரியிருக்கிறாள். இத்தகைய தருமம் குஹனிடத்தில் இல்லாமை பற்றியே அவன் தந்த வுணவுகளைத் திருவுள்ளம் பற்றவில்லை என்பர் பேராசிரியர்கள். ஆர்ஜவமே வடிவெடுத்த பெருமாள் குஹனிடத்தில் "ந ஹி வர்த்தே ப்ரதிக்ரஹே'' என்று சொன்னது கபடந்தானே, இது கூடுமோ? என்கிற சங்கையொன்று சேஷித்து நிற்கிறது. கேண்மின்; இந்த வார்த்தைக்கு 'நான் யாரிடத்திலும் எதுவும் பெற்றுக்கொள்ள மாட்டேன்' என்றே பொருள்படவேணுமென்கிற நிர்ப்பந்தமில்லை; 'உன்னிடத்தில் வாங்கிக் கொள்ள எனக்கு விருப்பமில்லை' என்று சொல்லுவதாகவும் பொருள்படும். அப்படி விருப்பமில்லாமைக்குக் காரணம் கீழே நாம் விவரித்ததே.

வேதாந்தவாசிரியர் ஸங்கல்ப ஸூர்யோதயத்தில் ஆருவது அங்கத்தில், விவேகன் ஆனந்தமாகப் பாடுவதாய் வைத்து அற்புதமான வொரு சுலோக மியற்றியுள்ளார்; "பகவதி பரத்வாஜே புக்திஸ் ததா சபரீகரே" என்பது அதன் முதற்பாதம். "ஜயதி லகிதோத்துங்கா வ்ருத்திர் தசாஸ்யரிபோரிதி" என்பது கடைப்பாதம். பெருமாளுடைய நடவடிக்கைகளை விமர்சித்துப் பார்த்தால் ஏற்றமான சரிதை ஒரு புறம், அதற்குப் பிரதிகோடியான தாழ்வான சரிதை மற்றொருபுறம் காண நின்றதே! என்கிறுர். விச்வாமித்ர முனிவர் பக்கலிலே பணிந்து நின்றுரென்று ஒருபுறம்; குரக்கரசனுன ஸுக்ரீவனிடத்திலே பணிந்து நின்றுரென்று மற்றொரு புறம், பரசுராமனுடைய தவத்தைச் சிதைத்தாரென்று ஒருபுறம்; ஒரு க்ஷுத்ர ஜந்துவான காக்கையின் கண்ணைச் சிதைத்தாரென்று மற்றொரு புறம். மஹர்ஷியான பரத்வாஜருடைய ஆச்ரமத்திலே அமுது செய்தாரென்று ஒருபுறம்; வேடுவிச்சியான சபரியின் கையாலே அமுது செய்தாரென்று மற்றொரு புறம். ஹாஹா! இவையென்ன சேராச் சேர்த்திகள்! என வியந்து கூறுகிற படி. இத்தால் சபரி கையாலே அமுது செய்தருளினது பரத்வாஜாச்ரமத்திலமுது செய்ததோடொக்க மதிக்கத்தக்கதென்று காட்டினபடி.

58. பம்பாதீரே ஹநுமதா ஸங்கதோ வாநரேண ஹ.

பிராட்டியைப் பறிகொடுத்துப் பெரிய வுடையாரையும் ஸம்ஸ்கரித்து "ராஜ்யாத் ப்ரம்சோ வநே வாஸோ நஷ்டா ஸீதா ஹதோ த்விஜ:, ஈத்ருசீயம் மமாலக்ஷ்மீர் நிர்தஹேதபி பாவகம்." என்று பரிதபித்துக்கொண்டே பம்பைக் கரையேறப் போந்த பெருமாள் அந்த பம்பாஸரஸ்ஸின் ஸந்நிவேசங்களைக் கண்டு பொறுக் கொணுத் துயரத்தில் ஆழ்ந்திருந்தார். இந்நிலைமையில் இவர் தேறுவதெங்ஙனேயோ? என்று அனைவரும் வயிறு பிடிக்க வேண்டியிருந்தது. அப்போது விதிவசமாக மாருதாத்மஜரான திருவடி அங்கு நேர்பட்டார் என்று சொல்லுகிற மஹர்ஷி "ஹநுமதா ஸங்கதோ வாநரேண ஸ:" என்று சொல்லாமல் 'வாநரேண ஹ' என்றுர். (ஹ) என்றது ஸந்தோஷக்குறிதைவாதீனமாகப் பெருமாளுடைய உயிர் பிழைத்தது! என்று ஸந்தோஷம் பொங்கிச் சொல்லுகிற வார்த்தை. "காட்டிலே வழிபறியுண்டவர் தாய் முகத்திலே விழிக்குமாபோலே" என்பது ஆசாரியர்களின் அருளிச் செயல். அதாவது, ஒருவன் காட்டிலே வழி போகும் போது கள்ளர் கையிலகப்பட்டு ஸர்வஸ்வத்தையும் பறிகொடுத்துவிட்டு வருந்தா நிற்கையில் தாய் வந்து முகங்காட்டினுல் ஆச்வஸிக்க நேருமாபோலே வழிபறியுண்ட பெருமாள் ஆச்வஸிக்கப் பாங்காகத் திருவடி வந்து முகங்காட்டினுரென்கை. மேலுதாஹரித்த ஆசார்ய ஸ்ரீஸூக்தியை வடமொழியில் மொழி பெயர்த்த கோவிந்தராஜார்யர் "சோரை: வநே அபஹ்ருதஸர்வஸ்வஸ்ய ஸ்வஜநீமுகாவலோகநவத் அதீவ ஆச்வாஸநமிதி முநேர் ஹர்ஷ:" என்றெழுதியிருந்தார். (ஸ்வஜநீமுக) என்பது(ஸ்வஜநமுக) என்று அச்சில் விழுந்திருக்கின்றது. இந்தமாறுபாட்டில் பொருள் சிதையவில்லையென்று நினைக்கலாமாகிலும்(ஸ்வஜநீமுக) என்றே ஆசிரியர் எழுதினதென்று தத்துவமுணரவேணும். ... ... ...

59. ஹநுமத் வசநாச் சைவ ஸுக்ரீவேண ஸமாகத:,
ஸுக்ரீவாய ச தத் ஸர்வம் சம்ஸத் ராமோ மஹாபல:

அடுத்த சுலோகத்தில் பெருமாளுக்கும் ஸுக்ரீவ மஹா ராஜர்க்கும் அக்நி ஸாக்ஷிகமாக நட்பு நடந்தமை கூறப்படுகிறது. பெருமாள் ஸுக்ரீவனை சரணுகதி செய்ததாகவும் சொல்லப் படுகிறது. இதைக் கொண்டு சிலர் பெருமாள் பக்கலிலே குறை நினைப்பதுண்டு. ஸுக்ரீவனோடு ஸக்யஞ்செய்து வாலியை வதைத்தாரே, அது அவ்வளவு பொருத்தமான காரியமன்று; ராவண ஸம்ஹாரத்திற்குத் துணை தேடுகிற பெருமாள் அந்த ராவணனை வாலில் சுழற்றியுதறின மஹா

வீரனான வாலியைத் துணை கொண்டு அநாயாஸமாக ஸமீஹிதம் பெறலாமாயிருக்க, துர்ப்பலனான ஸுக்ரீவனைத் துணை கொண்டது உசிதவேதியின் செயலாக இல்லையே யென்று சங்கிக்கவேண்டாதபடி இங்கு "சம்ஸத் ராமோ மஹாபல:" என்றது. சம்ஸத் – அசம்ஸத் என்றபடி. லங்ருபம்; ஆர்ஷப்ரயோகம். [மஹாபல:] பெருமாள் ராவணஸம்ஹாரத்தைத் திருவுள்ளத்தில் நினைத்தவரேயல்லர். அது செய்ய வேண்டினும் இதராபேக்ஷமான மிடுக்கில் குறையற்றவர். சரித்திரங்களைப் பார்க்கும்போது, இராவணன் ஆயிரந்தோள்வீரனை கார்த்தவீரியனிடத்தில் பங்கப்பட்டவன். அந்த கார்த்தவீரியனோ * கோக்குல மன்னரை மூவெழுகால் ஒரு கூர்மழுவால் போக்கிய தேவனான பரசுராமனிடத்தில் பங்கப்பட்டவன். அந்தப் பரசுராமனோ * என்வில்வலிகண்டு போவென்றெதிர்வந்து தன்வில்லினோடும் தவத்தை யெதிர் வாங்கப்பெற்றுப் பெருமாளிடத்தில் பங்கப்பட்டவன் என்பதை நன்கறிகின்றோம். இப்படிபட்ட மஹாவிரஸார்வபௌமரான பெருமாள் * பொல்லாவரக்கனைக்கிள்ளிக் களைந்தானென்று ஆண்டாளருளிச் செய்தபடி இராவணனை அவலீலையாக முடிக்கவல்லவரென்பது நிஸ்ஸந்தேஹமும் நிர்விவாதமுமான விஷயம். ஆகவே ஸுக்ரீவனைத் துணை கொண்டானென்பது அஸம்பாவிதம். தீநபந்து வென்றும் தீநதயாளுவென்றும் முறையிடப்படுகிற தமது பெருங்குணத்தை உலகில் விளக்கிக் காட்டவேண்டியே பெருமாள் ஸுக்ரீவனைப் பரிகிரஹித்தது. "கலையுங் கரியும் பரிமாவும் திரியுங் கானம் கடந்து போய்ச், சிலையும் கணையும் துணையாகச் சென்றான் வென்றிச் செருக்களத்து" என்று திருமங்கையாழ்வாரருளிச் செய்தபடி பெருமாளுக்குத் தமது சிலையுங்கணையுமே துணையல்லது வேறெதுவும் துணையன்று. ஆழ்ந்து பார்க்கில் அந்த சிலையும் கணையுங் கூடத்துணையல்ல; விபீஷண பரிக்ரஹப்ரகரணத்தில் "அங்குல்யக்ரேண தாந் ஹந்யாம் இச்சந் ஹரிகணேச்வர!" என்று ஸுக்ரீவனையே நோக்கிப் பெருமாள் பணித்ததை ஆராயுமிடத்து இது நன்கு விளங்குமன்றோ. இச்சந் என்றதற்குப் பொருள் ஸங்கல்பமாதரேண என்பதேயன்றோ? இவ்விஷயங்களையெல்லாம் ஹ்ருதயத்திலடக்கியாயிற்று இங்கு [ராமோ மஹாபல:] என்றது.

85. அபிஷிச்ய ச லங்காயாம் ராக்ஷஸேந்த்ரம் விபீஷணம்,
க்ருதக்ருத்யஸ் ததா ராமோ விஜ்வர: ப்ரமுமோத ஹ.

இந்தச்லோகத்தில் ஸ்ரீ விபீஷணாழ்வானுடைய பட்டாபிஷேகமும், அதனால் பெருமாளடைந்த திருவுள்ளவுகப்பின் மிகுதியும் பேசப்படுகின்றன. மேல் யுத்த காண்டத்தில் விபீஷணனுக்கு முடி சூட்டிய வரலாறு இரண்டிடங்களில் வான்மீகி முனிவரால் கூறப்பட்டுள்ளது. விபீஷணன் அரக்கர் நால்வருடன் ஸ்ரீராம ஸன்னிதானம் வந்து சேர்ந்து, ஸுக்ரீவாதிகளின் வாதவிவாதங்கள் முடிவுபெற்று, பெருமாள் அவனை ஸ்வீகரித்தருளினது (யுத்) பதினெட்டாம் ஸர்க்கத்தில் சொல்லித் தலைக்கட்டப்பட்டது. அடுத்த பத்தொன்பதாவது ஸர்க்கத்தில் – விபீஷணாழ்வானைப் பெருமாள் அழுந்தக் கட்டியணைத்து மகிழ்ந்து 'ஸமுத்ரத்தில் நின்றும் தீர்த்தம் கொணர்ந்து இவ்விபீஷணனை ராக்ஷஸ ராஜனாக எனது விருப்பத்தின்படி அபிஷேகம் செய்வாயாக' என்று இளையோனுக்கு நியமித்து நடத்திவைத்ததாகச் சொல்லப்பட்டது. மேலே ராவணவதமாகி அவனுக்கு தஹனச் சடங்கும் நடந்தேறிய பின்னர், நூற்றுப்பதினைந்தாம் ஸர்க்கத்தில் – விபீடணனை இளையபெருமாள் சீரிய சிங்காசனத்தில் அமர்த்தி மறுபடியும் பட்டாபிஷேகம் செய்து வைத்ததாகவும் சொல்லப்பட்டுள்ளது. ஸுக்ரீவ மஹாராஜர்க்கு வாலிவதமான பிறகு கிஷ்கிந்தா ராஜ்யாபிஷேகம்; விபீஷணனுக்கு முன்னும் பின்னுமாக இருமுறை. இதைப்பற்றிப் பிறகு விமர்சிப்போம். ப்ரக்ருதம் 'அபிஷிச்ய, ச லங்காயாம்' என்கிற சுலோகத்தினால் கூறப்படுகிற அபிஷேகம் முடிவாக நடந்ததைமட்டும் தெரிவிப்பதாகும். அதிலும் சிறிது வேற்றுமையுள்ளது. அதாவது, பிராட்டி அக்னிப்ரவேசம் பண்ணித் தன்னுடைய பரிசுத்தியை மூதலித்துப் பெருமாளருகே சேர்வதற்கு முன்னமே

விபீஷணபட்டாபிஷேகம் நடைபெற்றுவிட்டதாக மேலே கதாஸந்தர்ப்ப முள்ளது. இங்கு ஸீதாஸமாகம மெல்லாம் முடிந்த பிறகு அது நடைபெற்றதாகச் சொல்லப்படுகிறது. இந்த பௌர்வாபர்யம் கணிசிக்கத் தக்கதன் றென்று கொள்க. இருமுறை நடந்த பட்டாபிஷேகத்தை ஒருசேரச் சொல்லி முடித்தா ரென்றும் கொள்ளக் கடவது.

விபீஷணாழ்வான் வந்து சேர்ந்த வுடனே நடத்திய பட்டாபிஷேகத்தைப் பற்றிக் கூரத்தாழ்வான் அதிமாநுஷஸ்தவத்திலே சில கேள்விகள் கேட்கும் முகத்தினால் வெளியிட்டருளின தொரு தத்வார்த்தத்தை விவரிப்போமிங்குச் சிறிது. (ச்லோ 24) "அப்திம் ந தேரித ந ஜிக்யித ராக்ஷஸேந்த்ரம் நைவாஸ்ய ஜஜ்ஞித யதா ச பலாபலம் த்வம், நிஸ்ஸம்சயஸ் ஸபதி தஸ்ய பதேப்யஷிஞ்சஸ் தஸ்யாநுஜம் கதமிதம் ஹி விபீஷணஞ்ச" மநுஷ்ய பாவனை ஒரு புறமிருக்கச் செய்தேயும் பரத்வைகாந்திகமான ஸத்யஸங்கல்பத்வத்தையும் இடையிடையே வெளியிட்டருளினமையுமுண்டு என்று காட்டுவது இங்கு ப்ரதான விவக்ஷிதம். இராமபிரானே! கடலைக் கடக்க வேண்டிய காரியம் பலீய:ஸ்ஸாக இருந்தது; அதனைக் கடந்து இலங்கைக்குச் சென்றாலும் வரபல புஜபலங்களாலே அப்ரத்ருஷ்யனான இராவணனை ஜயிக்க வேண்டிய காரியம் அதற்கு மேலே பிரபலமாயிருந்தது. இருக்கச் செய்தேயும், கடலைக் கடவாமலும் இலங்கையர் கோனை வெல்லாமலும், அவன் வெல்லக் கூடியவன் தானோ வென்று அவனுடைய பலாபலங்களை விசாரித்துத் தெரிந்து கொள்ளாமலும் அவனுடைய ஸ்தானத்திலே அவன் தம்பியான விபீஷணாழ்வானை அபிஷிக்தனாக்கினது என்னதைரியங் கொண்டு? என்பது கேள்வி. இது பெருமாளையே நோக்கிக் கேட்டிருப்பதால் அவர்தாமே விடையருளிச் செய்ய வேணு மென்பது திருவுள்ளம் போலும். இது ஜ்ஞாதப்ரச்நமே யொழிய அஜ்ஞாத ப்ரச்நமன்றாதலால் ஆழ்வான் திருவுள்ளத் திலுறையும் விடையை விளக்குவோம்.

பெருமாள் கடலருகில் வந்து சேர்ந்தவுடனே இக்கடல் கடந்து செல்வது எங்ஙனே யென்று மிகவும் விசாரமுறுவதாகக் காட்டியது ஒரு புறமிருப்பினும், "தபஸா ஸேதுபந்தேந ஸாகரோச்சோஷணேந வா, ஸர்வதா ஸுஸமர்த்தோஸ்மி ஸாகரஸ்யாஸ்ய லங்கநே" என்று தமக்குக் கடல் கடத்தல் மிக வெளிதே யென்றும் காட்டியிருப்பதனாலும், ராவணனையும் வென்ற கார்த்தவீரியனையும் வென்ற பரசுராமனையும் வென்ற தமக்கு ராவணஜயம் ஒரு பொருளோ வென்று மதித்திருக்கையாலும் கடல் கடத்தலும் ராவணஜயமும் செய்து விட்டதாகவே திருவுள்ளமென்னக் குறையில்லை. விபீஷணனுக்கு முதல் மகுடாபிஷேகம் நடத்திவைக்கும் ஸமயத்தில் அவனை நோக்கி "ஆக்க்யாஹி மம தத்வேந ராக்ஷஸாநாம் பலாபலம்" என்று, அரக்கர்களின் பலாபலங்களை உள்ளபடி சொல்லுமாறு கேட்டிருக்கிறார் பெருமாள். இதனால் தமது திருவுள்ளத்தில் ஒரு புறம் விசாரமுமிருப்பதுபோல் தோன்றநின்றாலும், இக்கேள்வி அந்யார்த்த மென்பதை நம் ஆசார்யர்கள் மருமமறிந்து விளக்கியுள்ளார்கள்.

எங்ஙனேயென்னில், ஸ்ரீவசன பூஷணத்தில் (228) "விபீஷணனை ராவணன் *குலபாம்ஸநம் * என்றான்; பெருமாள் இக்ஷ்வாகுவம்ச்யராக நினைத்து வார்த்தையருளிச் செய்தார்" என்று பிள்ளை லோகாசார்யருடைய ஸ்ரீஸூக்தி. இதில் ராவணன் குலபாம்ஸந மென்றானென்றதின் பொருள் அனைவர்க்கும் அநாயாஸ விதிதம். பெருமாள் இக்ஷ்வாகுவம்ச்யராக நினைத்து வார்த்தையருளிச் செய்தது எங்கேயென்பதை மணவாளமாமுனிகளின் வியாக்கியானங் கொண்டே யறியவேண்டும். மாமுனிகளின் ஸ்ரீஸூக்தி வருமாறு: — "இக்ஷ்வாகுகுலநாதரான பெருமாள் இவனை ஆதரபூர்வகமாக அங்கீகரித்தவனந்தரம் *ஆக்க்யாஹி மம தத்வேந ராக்ஷஸாநாம் பலாபலம்* என்று, ராக்ஷஸருடைய பலாபலமிருக்கும்படியை நமக்குச்

சொல்லுமென்கையாலே இவனை ராக்ஷஸஜாதீயனாக நினையாதே திருத்தம்பிமாரோபாதியாக அபிமானித்து வார்த்தையருளிச் செய்தாரென்கை" என்று. உண்மையில் பெருமாள் இங்கு ராக்ஷஸஜாதீயனை நேரே நோக்கியருளிச் செய்யும் வார்த்தையில் "யௌஷ்மாகாணாம்" என்றோ "த்வதீயாநாம்" என்றோ சொல்லியிருக்கவேண்டுமேயல்லது இங்ஙனம் சொல்லியிருப்பது பொருந்தாதன்றோ. பஞ்சவடியில் வந்த சூர்ப்பணகை "விபீஷணஸ்து தர்மாத்மா ந து ராக்ஷஸசேஷ்டித;" என்றவள் ராக்ஷஸஜாதீயத்வத்தையிசைந்து ராக்ஷஸசேஷ்டையில்லை யென்றாள். பெருமாள் ராக்ஷஸஜாதியையே தொலைத்துப் பேசினாராயிற்று. ஏவஞ்ச * ஆக்ய்யாஹி * இத்யாதி ப்ரக்ருதச்லோகமானது பலாபல ஜிஜ்ஞாஸையினால் தோன்றியதன்று; விபீஷணனுக்கு இக்ஷ்வாகுவம்ச்யத்வத்தை ஸ்தாபிக்கத் தோன்றியதத்தனை என்றதாயிற்று.

எடுத்துக்கொண்ட அதிமாநுஷ ஸ்தவச்லோகத்தை இனி முடிப்போம், [நிஸ்ஸம்சயஸ் ஸபதி தஸ்ய பதே விபீஷணம் கதம் அப்யஷிஞ்ச:] என்கிற வினாவோடே தலைக்கட்டியுள்ளார் ஆழ்வான். ஸத்யகாமத்வ ஸத்யஸங்கல்பத்வங்களை தேவரீர் மறைத்துக் கொண்டு அவதரித்ததாகக் காட்டினாலும் கீதையிலே "ப்ரக்ருதிம் ஸ்வாம் அதிஷ்டாய ஸம்பவாமி" என்றருளிச் செய்தபடி அஜஹத்ஸ்வபாவராயே அவதரித்தீராகையாலே நாம் நினைத்ததை நினைத்தபடியே பத்தும் பத்தாகச் செய்து தலைக்கட்டவல்லோமென்கிற துணிவு கொண்டே முந்துறமுன்னம் அவனுக்கு அபிஷேகம் செய்தருளினீரென்பது ஆழ்வானுடைய திருவுள்ளத்திலோடிக்கிடக்கும் ஸமாதானம். இங்குச் சிலர் சொல்லுவதொன்றுண்டு; விபீஷணனுக்கு அபயமளித்து அவனைத் தன்பக்கலிலே அழைத்துவரும்படி மஹாராஜர்க்கு நியமித்தபோது 'விபீஷணோ வா ஸுக்ரீவ! யதிவா ராவணஸ் ஸ்வயம்" என்று.'என் கண்ணுக்குப் புலப்படாதே கடக்க நின்று அபயம் வேண்டினவன் விபீஷணனன்றிக்கே மாறு வேடம் பூண்ட ராவணனே யென்று தெரிந்தால் அவனையும் விடாதே தாராளமாகக் கொணர்வாயாக' என்று நியமித்தவராகையாலே லங்கேச்வரனான ராவணனைப் பரிக்ரஹிப்பதிலும் பெருமாளுக்கு நப்பாசையுள்ளதாகத் தெரியவருவதால் ஏதோ வ்யாஜமாத்ரத்தையே நோக்கி அங்கீகரித்தருளுகிற தம்முடைய ஸ்வபாவ விசேஷத்தினாலே ஒருகால் அவனை அநுக்ரஹிக்க நேர்ந்து விட்டால் விபீஷணன் அவனுக்கு அடிமைப் பட்டிருக்க நேர்ந்து விடுமோ வென்று சங்கித்து அதற்கு இடமறும்படி முன்னடியே விபீஷணனுக்கு முடிசூட்டிவிட்டாரென்று. இங்ஙனே சொல்லுவதில் அநௌசித்ய மொன்றுமில்லை. "செல்வ விபீடணற்கு வேறாக நல்லானை" என்று திருமங்கை யாழ்வாரருளிச் செய்தபடி விபீஷணாழ்வான் பக்கலிலே பெருமாளுக்குத் தனிப்பட்டதோர் அன்பு அபலபிக்க வொண்ணாததாகையாலே அவனாலே ஸ்ரீரங்கஸ்ரீ ஸம்ருத்தமாக வேணு மென்றும். "மின்னிலங்குபூண் விபீடண நம்பிக்கு, என்னிலங்குநாமத் தளவுமரசென்ற" என்று பெரியாழ்வாரருளிச் செய்தபடியே அவனுக்கு சிரஞ்சீவி பதவியையளித்து *மன்னுடைய விபீடணற்கா மதிளிலங்கைத் திசைநோக்கி மலர்கண் வைத்து மகிழுவேணு மென்றும் பெருமாளுக்குத் திருவுள்ள மிருந்த தென்னத் தட்டில்லை. ஆக, ஸத்பாத்ர ஸார்வபௌமனான விபீஷணாழ்வான் பக்கலிலே காட்டியருளின விசேஷாபிமானம் மிகப் பொருந்து மென்றதாயிற்று.

இனி *அபிஷிச்ய ச லங்காயாம்* என்கிற ப்ரக்ருதச்லோகத்தினுள்ளிறங்கிச் சில ரஸவிசேஷங்களையநுபவிப்போம். இதில் உத்தரார்த்தத்தில் ஒவ்வொரு பதமும் மதிப்பிலாத மாணிக்கம். [ க்ருதக்ருத்யஸ்ததா ராமோ விஜ்வர: ப்ரமுமோத ஹ ] ராம: ததா க்ருதக்ருத்ய:, ததா ராமோ (பபூவ); ததா விஜ்வர: ; ததா ப்ரமுமோத; இத்தனைக்கும் மேல் (ஹ) என்பதொன்று. இவ்வளவுக்குஞ் சேரப் பூர்வார்த்தம் எப்படியிருக்கவேணுமென்னில்; "விநிஹத்ய ச லங்காயாம் ராவணம் ராக்ஷஸேச்வரம்" என்றிருந்தால் நன்றாம். அறுக்கவறுக்க அடுத்தடுத்து முளைத்தெழுந்த தலைகளை வெட்டி வீழ்த்தி அவனையுயிர் மாய்த்துப் பெருமாள் க்ருதக்ருத்யரானார்.

உள்ளம் பூரித்தார் - என்றால் இது பொருந்தும்; விபீடணன் தலையிலே முடியை வைத்து க்ருதக்ருத்யரானாரென்பது என்னே? க்ருதக்ருத்ய : என்று யாரைச் சொல்லுகிறது? க்ருதானி க்ருத்யானி (ஸகலானி) யேந ஸ:— க்ருதக்ருத்ய:; செய்யவேண்டிய காரியங்களையெல்லாம் செய்து தலைக்கட்டினவர் யாவரோ, அவரையாயிற்று க்ருதக்ருத்யரென்பது. காடேறப்போந்த பெருமாள் மீண்டு திருவயோத்திக் கெழுந்தருளித் தாம் திருவபிஷேகம் கண்டருளினாலன்றோ க்ருதக்ருத்யராவது. அதற்கு முன்னமே க்ருதக்ருத்யரானார், விஜ்வரரானார், ப்ரமுதிதரானா ரென்கை கூடுமோவென்று சங்கிக்க நேரும். இங்கே நம்பிள்ளையருளிச் செய்வதொரு இன்சுவைப் பொருளுண்டு; அதாகிறது, பரதாழ்வான் முடி சூடமாட்டேனென்று இருய்த்தது போல இவனும் இருய்க்கில் செய்வதென்? முடிக்கு இருய்ப்பது இக்ஷ்வாகு வம்ச்யர்களுக் கெல்லாம் பணியாயிற்றே; இவனும் இக்ஷ்வாகு வம்ச்யனுய்விட்டபடியாலே அவ்விருய்ப்பு இவனையும் தொடருமோவென்று அஞ்சியிருந்தார் பெருமாள். இவன் இருய்க்காதே எளிதாக இசைந்து நின்றபடியாலே திருவுள்ள முகந்து "இதாநீம் க்ருதக்ருத்யோஸ்மி" என்றார் பெருமாள். அதை மஹர்ஷி 'க்ருதக்ருத்யஸ் ததா ராம:' என்று அனுபாஷித்தார் என்று. இது ரஸோக்தியின் பாற்படும். சாஸ்த்ரார்த்தமிருந்தபடி கேளீர். விபீஷணாழ்வான் விஷய மொன்றேயன்று; "ய: சுச்சிதேவ யதி கிஞ்சந ஹந்த ஜந்துர் பவ்யோ பஜேத பகவந்த மநந்ய சேதா:, தம் ஸோயமீத்ருச இயாநிதி வாப்யஜாநந் ஹை வைநதேயஸமமப்யுரரீகரோஷி." என்று ஆழ்வானருளிச்செய்தபடியே இன்றாக ஒருவன் வந்து அடிபணிந்தாலுங்கூட அவன் திறத்திலே எம்பெருமான் காட்டியருளும் அன்பு அப்ரமேயமாய் அவனுடைய காரியத்தைத் தன் காரியமாக நினைத்து உகப்பது எம்பெருமானுடைய இயல்பாதலால் அது இவ்விடத்திலே விளங்கிற்றாயிற்று. தன் காரியம் தலைக்கட்டி அதனால் தன்னைக்ருதக்ருத்யனாக நினைக்குமவன் காபுருஷனல்லனே? தன்னை யடுத்தவனுடைய காரியத்தைத் தன் காரியமாகக்கொண்டு அது தலைக்கட்டினவாறே தன்னை க்ருதக்ருத்யனாக நினைப்பவனேயாயிற்று உண்மையில் க்ருதக்ருத்ய னாவான். "ப்ராயோ ஹ்யக்ருதக்ருத்யத்வாத் ம்ருத்யோருத்விஜதே ஜந:, க்ருதக்ருத்யா: ப்ரதீக்ஷந்தே ம்ருத்யும் ப்ரியமிவாதிதிம்." என்று ப்ரஸித்தமான மநுமஹர்ஷிவசனத்திலுள்ள அக்ருதக்ருத்ய-க்ருதக்ருத்ய சப்தங்களை இங்கு ஸ்மரிக்கலாகாது. "விது: க்ருஷ்ணம் ப்ராஹ்மணாஸ் தத்வதோ யே தேஷாம் ராஜந் ஸர்வயஜ்ஞாஸ் ஸமாப்தா:" இத்யாதிப்படியே க்ருதக்ருத்யர் களாக மதிக்கப்படுகிற பரமைகாந்திகளின் தன்மை நம்போலியர்க்கு அநுகரணீயமாகு மத்தனை. நம்மாழ்வார் திருவாய்மொழியில் வானமாமலைப் பதிகத்திலே "செய்த வேள்வியர் வையத் தேவர்" என்று கொண்டாடின அதிகாரிகள் பகவத் விஷயத்திலே செய்யவேண்டுவன வெல்லாம் செய்து தலைக்கட்டி மார்பிலே கைவைத்துறங்குமவர்கள். ஸ்தோத்ர ரத்நத்தில் (18) *வசீ வதாந்ய: * இத்யாதிச்லோகத்தில் க்ருதீ என்பதற்கு வியாக்யான மியற்றா நின்ற வேதாந்தவாசிரியர் 'க்ருதீ- ஆச்ரித ரக்ஷணேந க்ருதக்ருத்ய:; ததுக்தம் * அபிஷிச்ய * இத்யாரப்ய *க்ருதக்ருத்யஸ் ததா * இதி" என்று பணிந்தது இங்குக் குறிக்கொள்ளத் தக்கது. ஆக, ஆச்ரிதரக்ஷணத்தைத் தன்பேறாக நினைத்து அதைத் தலைக்கட்டி யுகப்பவன் க்ருதக்ரு த்யனென்றதாகிறது. பகவத் கீதை ஒன்பதாமத்யாயத்தின் முடிவிலுள்ள * மந்மநா பவ மத்பக்த: * என்னும் சுலோகபாஷ்யத்தின் தாத்பர்ய சந்திரிகையில் "ஆச்ரிதஸம்ரக்ஷணம் ஸ்வலாபம் மத்வா ப்ரவர்த்ததே" என்றருளிச் செய்திருப்பதும் இதனைக் கணிசித்தேயாம்.

[ததா ராம:] ராம: என்பதை விசேஷ்யவாசகபதமாகக் கொள்வது மட்டுமல்லாமல் 'ததா ராமோ பபூவ' என்று தனிவாக்யமாக்கி இதையு மொரு லாபமாக வைத்துப் பேசுவர்கள் ரஸிகர்கள். 'ரமயதீதி ராம:' என்றும் 'ரமதே இதி ராம:' என்றும் இரண்டுபடியாக வ்யுத்பத்தி யுண்டே. இரண்டாவது வ்யுத்பத்தி இங்கு மிகப் பொருந்தும். "குஹேந ஸஹிதோ ராம:" என்றவிடத்தில் 'குஹேந ஸஹிதஸ்ஸந் ராமோ பபூவ' என்றும் யோஜிப்பதுண்டே, அதுபோல,

விபீஷணனுக்கு அபிஷேகமான பின்பே தம்மை ராமனுக நினைத்தாராயிற்று பெருமாள். [ததா விஜ்வர:] கார்யே காரணேபசாரநீத்யா ஜ்வரகார்யமான துக்கத்தில் ஜ்வரசப்தோபசாரமிருந்தபடி. ஸஹஸ்ரநாமத்தில் (அநிர்விண்ண:) என்ருெரு திருநாமமுண்டு. இங்கு நிர்வேதத்தின் அத்யந்தாபாவம் கொள்வதைவிட ப்ரத்வம்ஸாபாவம் கொள்வது சிறக்குமென்பர் ரஸிகர்கள். நமக்கு நேரும் சோகங்கள் கர்மாதீனம். அவனுக்கு நேரும் சோகம் க்ருபாதீனம். அடியார் குறையுற்றிருக்குமன்று தான் குறையற்றிருந்தானென்கை ஒரு பொருளன்றே. திருவாய்மொழியில் *துயரறு சுடரடி * என்றவிடத்தில் "துயரறுக்குஞ்சுடரடி யென்று பொருள் கொள்வர் முன்னோர்; துயரறுஞ் சுடரடியென்பர் எம்பெருமானுர்; அதாவது அடியார்கள் துயர்தீரத் தான் துயர்தீர்ந்தானுயிருக்கிறபடி" என்றதற்கும் நிதானமிதுவேயாகும். விபீஷணுழ்வான் மகுடாபிஷேகத்தைத் தனக்கொரு புருஷார்த்தமாக நினைத்திருந்த தில்லையாகிலும் ஏற்கெனவே ஒருகால் கடற்கரையிலே இது செய்யப் பட்டிருந்ததே யாகிலும் நாகபாசபந்த காலத்தில் "யந்மயா ந க்ருதோ ராஜா ராக்ஷஸாநாம் விபீஷண:, தச்ச மித்த்யா ப்ரலப்தம் மாம் ப்ரதக்ஷ்யதி ந ஸம்சய:" என்னும்படி தம் திருவுள்ளம் தபித் திருந்த துண்டாகையாலே அந்த தாபம் தீர்ந்தபடி சொல்லிற்று. தாபம் தீர்ந்தவளவேயன்று [ப்ரமுமோத] ஸந்தாபம் நடையாடியிருந்த விடங்களடங்கலும் ஸந்தோஷம் குடிபுகப் பெற்ற தென்கை. "ப்ராப்தாவும் ப்ராபகனும் ப்ராப்திக்கு உகப்பானுமவனே" என்கிற ஸ்ரீவசந பூஷண திவ்யஸூக்தி இங்கே நினைக்கத்தகும். ஸஹஸ்ரநாமத்தில் "பரர்த்தி: பரமஸ்பஷ்டஸ் துஷ்ட: புஷ்டச் சுபேக்ஷண:, ராம:" என்றவிடத்தில் துஷ்ட:– ஸந்தோஷித்தவர்; தசரதாத்மஜத்வலாபத்தாலே ஸந்தோஷித்தவர்" என்று பட்டர் பாஷ்யமருளிச் செய்கிருர். இதன்படி அவதரித்தவன்றே ஸந்துஷ்டராயிருந்தாலும் [ததா ப்ரமுமோத] அது ஸாமாந்ய ஸந்தோஷம்; இது விசேஷஸந்தோஷமென்கிறது. [ஹ] 'ப்ரமுமோத' என்பதனுலே காட்டின ஸந்தோஷம் பெருமானைச் சேர்ந்தது; (ஹ) என்பதனுலே காட்டப்படும் ஸந்தோஷம் மஹர்ஷியைச் சேர்ந்தது. கதை சொல்லிப் போருமளவேயன்றிக்கே அநுபவத்தில் ஆழங்காற்பட்ட படி. ... ...

84, தேவதாப்யோ வரம் ப்ராப்ய ஸமுத்தாப்ய ச வாநராந்,
அயோத்யாம் ப்ரஸ்திதோ ராம: புஷ்பகேண ஸுஹ்ருத்வ்ருத:.

மேல் யுத்த காண்டத்தில் நூற்றிருபதாம் ஸர்க்கத்தில் ஒரு சிறு கதை காணப் படுகிறது. (அதாவது) பெருமாள் தேவேந்திரன் முன்னே கைகூப்பி நிற்க, இந்திரன் பெருமானை நோக்கி ஏதாவது வரம் வேண்டிக் கொள்ளுமாறு கூற, பெருமாள் "யதி ப்ரீதிஸ் ஸமுத்பந்நா மயி தே விபுதேச்வர!, வக்ஷ்யாமி குரு மே ஸத்யம் வசநம் வததாம் வர!. மம ஹேதோ: பராக்ராந்தா யே கதா யமஸாதநம், தே ஸர்வே ஜீவிதம் ப்ராப்ய ஸமுத்திஷ்டந்து வாநரா:" என்று வரம் வேண்டிக் கொண்டதாக. போர்க்களத்தில் மாண்டொழிந்த வானர வீரர்களனைவரும் பிழைத்தெழுந்து மக்கள் மனைவியரோடு கூடிக் களிக்குமாறு வரமளிக்க வேணுமென்று வேண்டிக் கொள்ள, அப்படியே இந்திரன் வரமளிக்க, ஸகல வாநரவீரர்களும் உறங்கி யெழுந்தாப் போல் எழுந்து திரளில் சேர்ந்து கொண்டதாகக் கூறப்பட்டுள்ளது. அதற்கு இணங்க இங்கு ஸம்க்ஷேபத்தில் "தேவதாப்யோ வரம் ப்ராப்ய ஸமுத்தாப்ய ச வாநராந், அயோத்யாம் ப்ரஸ்திதோ ராம:" என்றுள்ளது. இங்ஙனே மற்ருெரு வரமும் பெற்றதாக மேலே கதையுள்ளது. அதைப் பற்றி அடுத்த படியாக எடுத்துக் கொள்ளுவோம். போர்க்களத்தில் மாண்டொழிந்த வானர வீரர்களையெல்லாம் பெருமாள் வரம் வேண்டிப் பிழைப்பித்ததாகச் சொல்லப் படுகிறவிதனில் சில விவக்ஷிதங்களுண்டு. "தத் ஸர்வம் தர்மவீர்யேண யதாவத் ஸம்ப்ரபச்யதி" என்று தேவதாப்ரஸாதம் பெற்று அவதரித்ததும் "ந தே வாகந்ருதா காவ்யே காசிதத்ர பவிஷ்யதி" என்று ப்ரக்க்யாதி பெற்றது மான ஸ்ரீராமாயணத்தில் விப்லவமோ உபப்லவமோ சங்கிப் போமல்

வோம். “ஆத்மாநம் மாநுஷம் மந்யே” என்ற மநுஷ்ய பாவனைக்குச்சேரப் பெருமாள் அநுஷ்டித்தவற்றில் நாம் ஆழ்ந்து உண்மையும் காணவேண்டி யிராநின்றது. எங்கும் ஸ்ரீராமாயணம் ஸேவிப்பவர்கள் தனியன்களில் சேர்த்து ஒரு பெரியச்லோகம் அநுஸந்தித்து வரக் காண்கிறோம். (அதாவது) “வைதேஹீஸஹிதம் ஸுரத்ருமதலே ஹைமே மஹாமண்டபே மத்யேபுஷ்பக மாஸநே மணிமயே வீராஸநே ஸுஸ்திதம்; அக்ரே வாசயதி ப்ரபஞ்ஜநஸுதே தத்வம் முநிப்ய: பரம் வ்யாக்க்யாந்தம் பரதாதிபி: பரிவ்ருதம் ராமம் பஜே ச்யாமலம்” என்பது. பரதாழ்வான் முதலானோர் அனைவரும்புடைசூழ, திருவடி எதிரேயிருந்து ஸ்ரீராமாயணம் ஸேவிக்க, அங்குத் திரண்டிருந்த மஹர்ஷிகளுக்குப் பெருமாள்தாமே [தத்வம் முநிப்ய: பரம் வ்யாக்க்யாந்தம்] சிறந்த தத்துவார்த்தத்தை யெடுத்துரைத்ததாக இதில் சொல்லப்படுவது வ்யக்தம். இதனால் ஸ்ரீராமாயணத்தில் மேலெழக் கிடைக்கும் பொருளிற்காட்டிலும் சீரிய ஆழ் பொருள் இருப்பதாகவும் அதனைப் பெருமாள்தாமே பிரவசனம் செய்தருளினதாகவும் அறிகிறோம். அதனையே நம் ஆசாரியர்கள் பரம்பரையாகக் கேட்டுணர்ந்து க்ரந்தங்களிலும் பொறித்து வைத்துள்ளார்கள். ப்ரக்ருதத்தில், தேவதைகளின் அழுகையைத் தீர்க்கவந்து அவதரித்து “மரவடியைத்தம்பிக்கு வான்பணயம் வைத்துப் போய் வானோர்வாழச் செருவுடைய திசைக் கருமம் திருத்திவந்துலகாண்ட திருமால்” என்கிற படியே அவர்களின் குறைகளைத்தீர்த்து வாழ்வித்த பெருமாள் அவர்களிடம் வரம் வேண்டி வானரமுதலிகளை வாழ்வித்தா ரென்கை கதைப் போக்கில் கிடந்தாலும், தத்துவமுணர்ந்த கூரத்தாழ்வான் ஸ்ரீஸூக்தியொன்றை இங்கு நாம் காணவேண்டியது அவசியமாகும். ஸுந்தரபாஹுஸ்தவத்தின் முடிவில். “லங்காயுத்த ஹதாந் ஹரீந் த்விஜஸுதம் சம்பூக தோஷாந்ம்ருதம் ஸாந்திபந்யபிஜம்ம்ருதம் த்விஜஸுதாந் பாலாம்ச் ச வைகுண்டகாந், கர்ப்பஞ்ச ஆர்ஜுநிஸம்பவம் வ்யுததரஸ்ஸ்வேநைவ ரூபேண” என்கிற ஸ்ரீஸூக்தி நமக்குத் தஞ்சம். க்ருஷ்ணாவதாரத்தில் செய்தருளின ஸாந்திபநிபுத்ரஸஞ்ஜீவநம் வைதிகபுத்ராநயநம் முதலானவை எப்படி ஒரு வரப்ரஸாதத்தினாலன்றிக்கே ஸ்வரூப சக்திவிசேஷ நிபந்தனமாகவேயாயிற்றோ, அப்படியே லங்கா யுத்த ஹதர்களான வாநர வீரர்களின் ஸஞ்ஜீவனமும், என்று ஸ்பஷ்டமாகக் காட்டியருளியுள்ளார் ஆழ்வான். இவ்வவதாரத்தில் இது மட்டுமேயன்று; உத்தர ஸ்ரீராமாயணத்தில் “செறிதவச் சம்புகன் தன்னைச் சென்று கொன்று செழுமறையோனுயிர்மீட்டு” என்று குலசேகராழ்வாருமருளிச்செய்கிறபடி நடந்தேறின ப்ராஹ்மண புத்ரஸஞ்ஜீவனமும் ஒரு வரப்ரஸாதத்தாலன்றிக்கே பெருமாளுடைய சக்திவிசேஷத்தினாலேயே நடந்திருக்கிறது. இதையும் மேலெடுத்த சுலோகத்தில் “த்விஜஸுதம் சம்பூகதோஷாந்ம்ருதம்” என்று காட்டியுள்ளாராழ்வான். ஆகவே போர்க்களத்தில் மாண்ட வானரவீரர்கள் பிழைத்தெழுந்தது பெருமாளுடைய அநுக்ரஹமே யென்னத் தட்டில்லை. ஆனால் ஸ்ரீராமாயணம் கூறியுள்ளது அபரமார்த்தமா? என்று கேட்கலாகாது; இங்குள்ளதை ஆராய்வோம். இந்திரனை நோக்கிப் பெருமாள் தாமாக ஒரு வரம் கோரினவரல்லர்; அவன் தானாகவே “ப்ரீதியுக்தாஸ் ஸ்ம தேந த்வம் ப்ரூஹி யந் மநஸேப்ஸிதம்” என்றான். (அதாவது) ‘ராமா! உன் மீது எமக்குப் பரமப்ரீதியுண்டாகியிருக்கிறது; நெஞ்சிலுள்ளதை எம்மிடம் வேண்டிக்கொள்’ என்றான். அம்பரீஷன் தவம்புரியா நிற்க, ஸர்வேச்வரன் இந்திரவேஷம் பூண்டு சென்று ‘உனக்கு வேண்டியவற்றை வேண்டிக்கொள்’ என்ன, [நாஹமாராதயாமி த்வாம் தவ பத்தோயமஞ்ஜலி:] நான் உன்னையாராதிக்குமவனல்லேன் காண்; என்னை ஸமாதிபங்கம் பண்ணாதே போ; உன்னைக்கும்பிடுகிறேன் – என்று அம்பரீஷன் விடைகூறினதாக ஸ்ரீ விஷ்ணுதர்மத்திலே காணாநின்றோம். அங்ஙனே சொல்லுமவரல்லரே பெருமாள். பார்வதிபதி திருமழிசைப்பிரான் திருமுன்பே வந்து நின்று ‘உமக்கு வரமளிக்க வந்தேன் என்று கூற, அப்போது அவர் தாம் ஒரு கந்தையைத் தைத்துக்கொண்டிருந்தவராகையாலே ‘ஊசி செல்லும் வழியிலே

7

நூல்தானும் செல்லுமாறு வரமளிக்கவல்லீரோ?' என்றுரென்று கேட்டிருக்கிறோம். அவ்வண்ணமேயாயிற்று இங்குப் பெருமாளுடைய வரப்ரார்த்தனையும். யாவச்சக்தி தம்முடைய ப்ரபாவத்தை மறைத்துக்கொள்ளத் திருவுள்ளம்பற்றிய பெருமாள் தாமே இந்திரன் வாக்கிலே புகுந்து வரம் வேண்டச் சொல்லுவித்தார் என்பதே தத்துவமாக இருக்க வடுக்கும். இது ஆழ்வான் ஸ்ரீ ஸூக்தியால் விளைந்த தெளிவு என்று கொள்க.

இந்த ப்ரஸங்கத்திலே மற்றொரு வரத்தின் தத்துவமு முணரவேணும். அப்போது பெருமாள் இந்திரனை நோக்கி "அகாலே சாபி புஷ்பாணி மூலானி ச பலானி ச, நத்யச் ச விமலாஸ் தத்ர திஷ்டேயுர் யத்ர வாநரா:," என்று, வானர முதலிகளுள்ள விடங்களில் அகாலத்திலுங்கூட புஷ்ப மூல பல ஜலங்கள் ஸம்ருத்தமாயிருக்க வேணுமென்று வரம் வேண்டினதாகக் கூறப்படுகிறது. மேலே பரத்வாஜ மஹர்ஷியின் ஆச்ரமம் சென்ற போது அங்கு அம்முனிவர்தாமும் "அஹமப்யத்ர தே தத்மி வரம்" என்று, தாமும் பெருமாளுக்கு வரமளிக்க விரும்புவதாகக் கூற, "அகாலபலினோ வ்ருக்ஷாஸ் ஸர்வே சாபி மதுஸ்ரவா:, பலாந்யம்ருத கல்பானி பஹூநி விவிதானி ச; பவந்து மார்க்கே பகவன்! அயோத்யாம் ப்ரதி கச்சத:" என்று, பெருமாள் தாமெழுந்தருளும் வழி யடங்கலும் ஸுபிக்ஷமாக விளங்கவேணுமென்று வரம் வேண்டினதாகக் காண்கிறது. இதைப் பற்றியும் கூரத்தாழ்வானுடைய ஸ்ரீ ஸூக்தி [அதிமாநுஷஸ்தவே-30.] "வம்சம் ரகோரநுஜிக்ருக்ஷுரிஹாவதீர்ணோ திவ்யைர் வவர்ஷித ததாத்ர பவத்குணௌகை:, த்வத்ஸந்நிதி ப்ரபவ சைத்ய ஜுஷோ யதா ஹி வ்ருக்ஷாச் ச தாந்திமலபந்த பவத்வியோகே" என்பது காணத்தக்கது. ஸ்ரீ ராமலக்ஷ்மண ஸீதைகளை ச்ருங்கி பேரபுரத்தளவிலே விட்டுத் திரும்பின ஸுமந்திரர் "விஷயே தே மஹாராஜ! ராமவ்யஸநகர்சிதா:, அபி வ்ருக்ஷா: பரிம்லாநா: ஸபுஷ்பாங்குர கோரகா: என்று தொடங்கிப் பெருமாளைப் பிரிந்த துக்கத்தினால் கோஸல தேசமடங்கலும் படும் பாட்டைக் கூறினதை யெடுத்துக் காட்டி, பிறகு மீண்டு திருவயோத்திக் கெழுந்தருளும் போது ஸந்தோஷாதிசயத்தினாலேயே வழியடங்கலும் செழித்து விளங்கினதாகவும் காட்டியுள்ளாராழ்வான். அவ்விடத்து அடியேனுடைய தத்வார்த்த சிந்தாமணி வியாக்கியானத்தில் எழுதி வெளியிட்டுள்ளவற்றை இங்கு உதாஹரித்து நிற்கிறேன்; — "இப்படியாகில் ராவணவதாநந்தரம் பரத்வாஜாச்ரமத்துக் கெழுந்தருளின பெருமாளை நோக்கி அபேக்ஷிதமான வரத்தை வேண்டிக் கொள்ளென்று ருஷி சொல்ல, வ்ருக்ஷங்களெல்லாம் தளிரும் முறியுமாகவேணுமென்று பரத்வாஜரிடத்தில் வரங்கேட்டதாகவும், அவரும் 'ததாஸ்து' என்றதாகவும், பின்பு அப்படியே யானதாகவும் சொல்லுகிற விது கூடுமோ? என்னில், அவாப்தஸமஸ்தகாமனை நோக்கி வரம் வேண்டிக் கொள்ளென்று விதித்தால் மஹர்ஷியின் முகம் கோணுமைக்கு ஏதேனு மொன்றை வேண்டிக் கொள்ள வேணுமிறே........ தோற்றின தொன்றைக் கேட்டு வைத்தாராயிற்று."

90. ராமஸ் ஸீதா மநுப்ராப்ய ராஜ்யம் புநரவாப்தவாந்,
ப்ரஹ்ருஷ்டமுதிதோ லோகஸ் துஷ்ட: புஷ்டஸ் ஸுதார்மிக:

திருவாய் மொழியில் (7—10—1.)* இன்பம் பயக்க வெழில் மலர் மாதருந்தானும் இவ்வேழுலகை இன்பம் பயக்க இனிதுடன் வீற்றிருந்து ஆள்கின்ற வெங்கள் பிரான் * என்ற விடத்திற்குப் பொருத்தமாக இந்தச்லோகத்தையுதாஹரித்து நம்பிள்ளையருளிச் செய்தருளின ஸ்ரீஸூக்தியையே இங்கெடுத்துக் காட்டி நிகமிக்கலாகிறது. :"மாதாபிதாக்களிருவரும் சேர விருந்து பரியப் புக்கால் ப்ரஜைகளுக்கு ஒரு குறையும் பிறவாதிறே, ஆக இருவருமான சேர்த்தியாலே தங்களுக்கு ஆனந்த முண்டாக, அச்சேர்த்தியைக் காண்கையாலே லோகத்துக்கு ஆனந்தமுண்டாக, ப்ரஜைபால் குடிக்கக் கண்டு உகக்கும் தாயைப்போலே இவர்களுக்குண்டான ப்ரீதியைக் கண்டு திவ்யதம்பதிகள் தாங்கள் இனியராயிருப்பர்களாயிற்று:"... ... (90)

ஸ்ரீ ராமாயண கௌஸ்துபத்தில் ஸம்க்ஷேபராமாயணம் முற்றுப்பெற்றது.

ஸ்ரீ:

ஸ்ரீமதே ராமாநுஜாயநம:

# நித்யவிபூதி லீலாவிபூதி ஸம்வாதங்கள்

**— ஸ்ரீ காஞ்சீ. பிரதிவாதி பயங்கரம் அண்ணங்கராசாரியர் —**

நித்யவிபூதியில் ஸ்ரீ ஸேநாபதி யாழ்வான் பரவாஸுதேவனை யனுகித் தலை வணங்கிக் கை கூப்பி நின்று ஒரு விண்ணப்பம் செய்யலுற்றான்; ஸ்வாமிந்! தேவரீர் ஸர்வாவஸ்தோசித ஸர்வ கைங்கர்ய நிரதரான திருவனந்தாழ்வானைப் பலவாண்டுகட்கு முன்பு நிலவுலகத்திற்குப் போகவிட்டு முதலில் பகவத் ராமாநுஜ ரூபத்தாலும், பிறகு யதீந்த்ர ப்ரவண ரூபத்தாலும் அனேக திவ்ய ஸூக்திகளை அவதரிப்பித்து ஸம்ஸாரி சேதநர்களை வாழ்வித்தமை திருவுள்ளத்தில் நினைவிகரு குமே; அவ்விரு திருமூர்த்திகளும் திருத்திப் பணிகொள்ளப்பெற்ற நிலவுலகில் கலியின் கொடுமையினால் உபய வேதாந்த ஸித்தாந்தங்களில் சில விப்லவங்கள் நேர்ந்து வருவதாகத் தெரிகின்றமையால் அத்திருவனந்தாழ்வானை மீண்டும் நில வுலகேறப் போகவிட்டு, ஏதேனும் புநருத்தாரங்கள் செய்யவேண்டி யிருந்தால் செய்து மீளும்படி நியமித்தருளலாமே—என்று. இங்ஙனே ஸேநாபதி விஜ்ஞா பிக்கக் கேட்ட பரவாஸுதேவன் திருவனந்தாழ்வானை விளித்து 'நம் ஸேநாபதி யாழ்வான் இங்ஙனே விஜ்ஞாபிக்கின்றான்; இஃது எனக்கும் யுக்தமாகவும் ஆவச்யக மாகவும் தோன்றுவதால் நீர் நமது கட்டளையைச் சிரமேற்கொண்டு ஸபரிவாரராய் லீலா விபூதிக்குச் சென்று திசைக்கருமம் திருத்தி வருவது நல' மென்று சோதிவாய் திறந்து பணிக்க, அங்ஙனமேயாகுக வென்று விண்ணப்பஞ்செய்து தெண்டனிட்டு, ஆழ்வான் ஆண்டான் எம்பார் பட்டர் நஞ்சீயர் நம்பிள்ளை முதலான பல ஸூரிகளை யும் உடன் கூட்டிக்கொண்டு இவ்விபூதிக்கு வந்து சேர்ந்து திருவல்லிக்கேணியிலே பெரிய திருவோலக்கமாகவிருந்து ஆழ்வானையும் ஆண்டானையும் சில ஸ்தல விசே ஷங்களுக்குப் போகவிட்டு ஆபாதசூடம் அநபாயியான நம் தர்சனத்தின் பரிஸ்திதி ஆங்காங்கு எங்ஙனேயுள்ளதென்று தெரிந்து வாருமென்று கட்டளையிட, அவ்விரு வரும் ஆராமஞ் சூழ்ந்தவரங்கம் முதலான பல தலங்களுக் கெழுந்தருளி சாக்ஷாஷ மாகவும் ச்ராவணமாகவும் பல விஷயங்களைத் தெரிந்துகொண்டு மீண்டு வந்து சேர்ந்து எம்பெருமானார் திருவடிகளிலே விண்ணப்பஞ் செய்ததாவது;—

ஸ்வாமிந்! எந்த திவ்ய தேசஞ் சென்று ஸேவித்தாலும் "ஸர்வதேச தசாகா லேஷு அவ்யாஹத பராக்ரமா, ராமாநுஜார்ய திவ்யாஜ்ஞா வர்த்ததாம் அபி வர்த்ததாம். ராமாநுஜார்ய திவ்யாஜ்ஞா ப்ரதிவாஸர முஜ்ஜ்வலா, திகந்தவ்யாபிநீ பூயாத் ஸா ஹி லோக ஹிதைஷிணீ." என்றும், "அடியார்கள் வாழ அரங்கநகர் வாழச் சடகோபன் தண்டமிழ் நூல் வாழ" என்றும், "ஆழ்வார்கள் வாழி அருளிச் செயல் வாழி, தாழ்வாதுமில் குரவர் தாம் வாழி—ஏழ்பாருமுய்ய அவர்களுரைத்த வைகள் தாம் வாழி, செய்யமறை தன்னுடனே சேர்ந்து" என்றும், "அறுசமயச் செடியதனை யடியறுத்தான் வாழியே, அடர்ந்துவரும் குதிட்டிகளை அறத்துறந்தான் வாழியே, செறுகலியைச் சிறிதுமறத் தீர்த்துவிட்டான் வாழியே, தென்னரங்கர் செல்வம் முற்றும் திருத்திவைத்தான் வாழியே, மறையதனில் பொருளனைத்தும் வாய்மொழிந்தான் வாழியே, மாறனுரை செய்த தமிழ் மறை வளர்த்தோன் வாழியே, அறமிகுநற் பெரும்பூதூரவதரித்தான் வாழியே, அழகாரு மெதிராச ரடியிணைகள் வாழியே" என்றும் செவி குளிரக் கேட்கலாயிற்று. ஸ்வாமியின் விபவ காலத்திற்

காட்டிலும் இப்போதைய பரிஸ்திதி மிகமிக அபிநந்தநீயமாகவே காண்கிறது. ஒரு குறையுமில்லை. ஆனால் ஸ்வாமி கண்டித்தொழித்த மதங்களும் அறவே நசித்துப் போகாமல் ஆங்காங்கு தலைவிரித்தாடுவதும் காண்கிறது; திருவுள்ளமறிவது" என்று விண்ணப்பஞ் செய்து நின்றார் கூரத்தாழ்வான். பிறகு முதலியாண்டானை நோக்கி "நீர் கண்டவதிசயங்களையும் சொல்லிக் காணீர்" என்று எம்பெருமானார் நியமித்தருள, "ஆழ்வான் ஸாதித்தவை யெல்லாம் யதார்த்தமே. ஸூர்ய சந்திராதிகளும் பல பல வித்யுத்தீப ப்ரதிபாதிகளும் பிரகாசித்துக் கொண்டிருக்கச் செய்தேயும் இருள் அறவே ஒழிந்து விட்டதாகச் சொல்ல முடிகிறதில்லையே. அது, தான் செங்கோல் செலுத்தக் கூடிய விடங்களிலே தன் ப்ராபவத்தைக் காட்டி நிற்குமத்தனை யன்றோ? நம்மாழ்வாரும் திருவிருத்தத்தில் "காலை வெய்யோற்கு முன் ஓட்டுக்கொடுத்த கங்குல் குறும்பர், மாலை வெய்யோன் பட வையகம் பாவுவர்" என்று அருளிச்செய்த விஷயந்தானே இது." என்று விஜ்ஞாபித்தார் ஆண்டான்.

இவற்றைத் திருச்செவி சாற்றியருளின எம்பெருமானார் ஸாதித்தருளினதாவது,—நம்மாழ்வார் "திரியுங் கலியுகம் நீங்கித் தேவர்கள் தாமும் புகுந்து பெரிய கிதயுகம் பற்றிப் பேரின்ப வெள்ளம் பெருக" என்றும், "ஐயமொன்றில்லை அரக்கரசுரர் பிறந்தீருள்ளீரேல் உய்யும் வகையில்லை தொண்டீர்" என்றும் அருளிச்செய்த பின்பும் அரக்கரசுரர் போல்வார் தலைகாட்டநேர்ந்து, தலைகாட்ட நேர்ந்ததுமட்டு மன்றிக்கே தலைவிரித்தாடவும் நேர்ந்தகாலத்து நாதமுனிகள் ஆளவந்தார் போல்வார் திருவவதரித்து பஹுமுகமான பரித்ராணங்கள் செய்திருக்கவும் இன்னமும் மாயாவாதங்கள் மடியாதிருக்கின்றன வென்றால் இது ஸஹ்யமாக இல்லையே" என்று.

அதன்மேல் ஆழ்வானும் ஆண்டானும் விஜ்ஞாபித்ததாவது, தைத்திரீய யஜுஸ்ஸம்ஹிதையில் இரண்டாவது காண்டத்தில் ஐந்தாவதான விச்வரூபப்ரச்நத்தில் தேவேந்திரனுக்கு ப்ரஹ்ம ஹத்யாசாபம் நேர்ந்ததாகவும் அதைப் போக்கிக் கொள்ள அவன் இந்நிலவுலகத்தே வந்து பூமியினிடத்திலும் வ்ருக்ஷங்களினிடத்திலும் வேண்டிக் கொண்டதாகவும், அப்போது பூமி, தன்னை யாரேனும் பள்ளம் வெட்டினாலுங் கூட ஒரு வருஷத்திற்குள் பழையபடியே மேடாகி விடவேணுமென்று வரம் வேண்டிப் பெற்றதாகவும், வ்ருக்ஷங்களும் தங்களை வெட்ட வெட்ட மேன்மேலும் பணைக்கும்படி வரம் வேண்டிப் பெற்றதாகவும் ஓதிக் கிடக்கின்றதன்றோ; இதே போல துர் மதங்களும் துர் தைவங்களினிடத்தில் வரம்வேண்டிப் பெற்றிருக்கக்கூடும். எம்பெருமானுடைய ஸங்கல்பம் அப்படியுமன்றோ காண்கிறது. ஆகவே அதற்கு நாம் செய்யக்கூடிய பிரதீகாரமில்லையே. அன்றியும், காஷ்ட லோஷ்டங்கள் இன்றிக்கே எங்கும் ஸுவர்ணரஜதங்களே யிருந்துவிட்டால் அவற்றுக்கு மேன்மை யில்லையே; மாகந்த மந்தார ஸஹகார தருக்களே எங்கும் மலிந்திருக்கக் காண்கின்றோமில்லையே. காளிதாஸன் "மத்யே தபோதநாநாம் கிஸலயமிவ பாண்டுபத்ராணும்" என்றாப் போலே கிஸலயம் சில ஊழிலைகளினிடையே விளங்குவது தானே அழகு என்று. (ஆழ்வானும் ஆண்டானும் விண்ணப்பம் செய்தார்கள்.)

இங்ஙனம் விஜ்ஞாபிக்கக் கேட்டருளின ஸ்வாமி ராமாநுஜர் 'ஆகில் நாம் வந்த வழியே மீளவேண்டியது தானே? நமக்கு இங்குக் கர்த்தவ்ய மொன்றுமில்லையே; திவ்ய தேசங்களை ஸேவித்துக் கொண்டே மீளலாமன்றோ' என்று ஸாதிக்க, உடன் வந்த அடியார்களான ஆசாரியர்கள் யாவரும் திருவடி தொழுது "ஸ்வாமிந்! *போயினர் பின்னை இத்திசைக்கென்றும் புணைக்கொடுக்கிலும் போகவொட்டாரே* என்று பெரியாழ்வார் அருளிச்செய்தபடி அவ் விபூதியில் நின்றும் இவ் விபூதிக்கு நாம் வர ப்ரஸக்தியே யில்லாமலிருக்க, அப் பரந்தாமன்தானே திருவுள்ளமுவந்து விடை தந்து நம்மை இங்கு அனுப்பியிருக்க, விரைந்து செல்லவேண்டிய அவசியம் என்னே? ஸ்ரீபாஷ்ய பகவத் விஷயாதி க்ரந்தங்களைக் கசடறக்கற்று வல்லவர்களான

வித்வான்கள் இந்நிலத்தில் பலருளராகத் தெரியவருவதால் அவர்களை இங்கு வரவழைத்து ஒரு பெரிய ஸதஸ்ஸு கூட்டி, அவரவர்கள் உபயவேதாந்த விழுப்பொருள்களை எவ்வாறு கிரஹித்திருக்கிறார்களென்பதை நாமறிந்து ஸந்தோஷித்துச்செல்வது நலமென்று தோன்றுகின்றது. பூர்வ பக்ஷிகளுக்கும் செய்தியறிவித்து அவர்களையுமழைப்பித்துப் பரஸ்பரம் வாதவிவாத கேளிகளை நடப்பித்தும் மகிழ்ச்சி கொள்ளலாமானல் அப்படிக்கும் திருவுள்ள முகந்தருள்வது. இந்த திவ்ய தேசத்திலும் ப்ராந்தங்களிலும் உபயவேதாந்தநிர்வாஹதுரந்தரர்களாகப்பலர் விளங்குகின்றனர்; அவர்களை அந்தேவாஸிகளோடுகூடவும் நம்மிடம்வரவழைத்து விஷயங்கள்சொல்லும்படி செய்து கேட்டருளத் திருவுள்ளமாயின் நியமித்தருள்வது'' என்று விண்ணப்பஞ் செய்ய, ததாஸ்து என்று ஸ்வாமி நியமித்தருள, சில பல வித்வான்கள் அந்தே வாஸிகளுடன் வந்துசேர்ந்து ஸபரிவாரரான ஸ்வாமி யெம்பெருமானுரைத் திருவடிதொழுது கையுமஞ்ஜலி புமாய் நிற்க; அவர்களது ஸ்ரீவைஷ்ணவலக்ஷணஸம்பத்தியின்வைலக்ஷண்யத்தை ஸ்வாமி கடாக்ஷித்தருளி மிகவுகந்து "நீங்கள் ச்வேதத்வீபத்தில் நின்றும் போந்தீர்களோ? அன்றி ஆழ்வார் திருவருளால் இவ்விடந்தானே ச்வேதத்வீபமாக மாறிவிட்டதோ? உங்களுடைய விலக்ஷண திவ்ய விக்ரஹ வீக்ஷணந்தானே பரம புருஷார்த்தமன்றோ? உங்கள் திருவுருவத்தையே கண்டு கொண்டிருக்கலாம் போலிராநின்றதே; பரமஸந்தோஷம்! செவிக்குணவும் கிடைக்கட்டும்'' என்று ஸாதித்து ஸ்ரீபாஷ்யத்தில் சதுஸ் ஸூத்ரியின் ப்ரமேயத்தை உபபாதிக்கும்படி நியமித்தருளினர். இன்றே முடித்துவிட வேணுமென்கிற நிர்ப்பந்தமில்லை. யதாவகாசம் க்ரமேண நடைபெறலாம்; இஃது ஒன்றேபன்று; மற்றும் பல பல அருமருந்தன்ன விஷயங்களும் கேட்க ஆசையுண்டு என்று நியமித்தருள, முந்துற முன்னம் ஒரு அந்தேவாஸி விஜ்ஞாபிக்கத் தொடங்கினர். (16—2—64ல்) .... .... *

ஸாக்ஷாதுபஸ்திதாநாம் ஸ்ரீமத்ராமாநுஜார்யவர்யாணும் .
ஆஜ்ஞாமவதம்ஸயதா தாஸேநைதந் நிவேத்யதே கிஞ்சித்.

வேதம் கர்ம காண்டமென்றும் ப்ரஹ்ம காண்டமென்றும் இரு வகுப்பாகவுள்ளது. பூர்வ பாகம் கர்மகாண்ட மென்றும், உத்தரபாகம் ப்ரஹ்ம காண்டமென்றும் வழங்கப்படும். உபநிஷத்துக்களையே ப்ரஹ்ம காண்டமென்பது. பகவானுக்கு ஆராதந ரூபங்களான யஜ்ஞம் முதலிய கர்ம விசேஷங்களை விரிவாகக் கூறும் வேதபாகம் கர்ம காண்டமென்றும், அந்த கருமங்களினல் ஆராதிக்கப்படுகின்ற பகவானுடைய ஸ்வரூப ரூபகுணங்களை விரிவாகக் கூறும் வேதபாகம் ப்ரஹ்ம காண்டம் (அதாவது உபநிஷத்து) என்றும் சொல்லிற்றுயிற்று. கர்மகாண்டத்தில் தோன்றும் சங்கைகளைப் பரிஹரிப்பதற்காக ஜைமிநி யென்னும் மஹர்ஷி யெழுந்து பதினறு அத்யாயங்களோடு கூடிய ஒரு சாஸ்த்ரத்தை யியற்றினர். அதற்குப் பூர்வ மீமாம்ஸை யென்று பெயர். இதில் பன்னிரண்டு அத்யாயங்களே ஜைமினி மஹர்ஷியால் இயற்றப்பட்டவை யென்றும், மேல் நான்கு அத்யாயங்கள் காசக்ருத்ஸ்நரென்பவரால் இயற்றப்பட்டவை யென்றும் ஒருபக்ஷமுண்டு. இதைப்பற்றி இங்கு விசாரம் அநபேக்ஷிதம். "ஜைமிநீயம் ஷோடச லக்ஷணம்'' என்பது பொதுவான வார்த்தை. வ்ருத்தி க்ரந்தத்தில் பதினறு அத்யாயங்களும் ஜைமிநி ப்ரோக்தமென்று கூறப்பட்டுள்ளது. (லக்ஷணமென்று அத்யாயத்துக்குப் பெயர்.)

ப்ரஹ்ம காண்டமென்னும் உபநிஷத்பாகத்தில் தோன்றும் சங்கைகளைப் பரிஹரிப்பதற்காக வ்யாஸ மஹர்ஷியெழுந்து நான்கு அத்யாயங்கள் கொண்டவொரு சாஸ்த்ரத்தை இயற்றினர். அதற்கே சாரீரக மீமாம்ஸை யென்று பெயர். உத்தர மீமாம்ஸை யென்றும் வழங்குவர். ப்ரஹ்ம ஸூத்ரம் என்பதும் இதனையே. ஒவ்வொரு அத்யாயத்திலும் நான்கு பாதங்களுள்ளன. ஆகவே பதினறு பாதங்கள்

கொண்டது சாரீரக மீமாம்ஸை யென்றதாயிற்று. இதில் ஒவ்வொரு விஷயத்தைப் பற்றி சர்ச்சை செய்து நிர்ணயிக்கும் பகுதிக்கு அதிகரணமென்று பெயரிடப்பட்டுள்ளது. அப்படிப்பட்ட அதிகரணங்கள் இந்த மீமாம்ஸையில் நூற்றைம்பத்தாறு உள்ளன. சில அதிகரணங்களில் ஒரே ஸூத்ரமிருக்கும். பல அதிகரணங்களில் பல ஸூத்ரங்களிருக்கும். மொத்தம் ஸூத்ரங்களின் லக்கம் ஐந்நூற்று நாற்பத்தைந்து என்று கணக்கிடப்பட்டிருக்கின்றது. ஆக, நான்கு அத்யாயங்களையும் பதினாறு பாதங்களையும் நூற்றைம்பத்தாறு அதிகரணங்களையும் ஐந்நூற்று நாற்பத்தைந்து ஸூத்ரங்களையும் கொண்டது ப்ரஹ்ம ஸூத்ர சாஸ்த்ர மென்றதாயிற்று.

தத்வ ஹித புருஷார்த்தங்களை நாம் தெரிந்துகொள்வதற்கு உபநிஷத்துக்களே ஸாதனமாகும். அவ்வுபநிஷத்துக்களின் பொருள்களை ஸம்சய விபர்யயமற நிஷ்கர்ஷித்து விளக்கக் கூடியது இந்த ப்ரஹ்மஸூத்ர சாஸ்த்ரமே யாதலால் வேதாந்திகளுக்கு இதுவே புகலாயிற்று. ப்ரஹ்மஸூத்ரமென்கிற சாரீரக மீமாம்ஸையின் பொருளை நிஷ்கர்ஷமாகவும் நிஷ்கல்மஷமாகவும் தெரிந்து கொண்டவர்களே வேதாந்திகளென்றும் ப்ரஹ்ம ஜ்ஞானிகளென்றும் சொல்லத் தகுதியுடையார். மஹர்ஷி ப்ரணீதங்களான ஸூத்ரங்களின் பொருளை நம் போல்வார் சிறிதும் அறியகில்லார்களாதலால், நம் போன்ற அல்ப மதிகளிடத்தில் பரம கருணை கொண்ட பூருவர்கள் அந்த ஸூத்ரங்களின் அர்த்தத்தை விளக்கி பாஷ்யங்களை இயற்றியுள்ளார்கள். த்வைதம், அத்வைதம் விசிஷ்டாத்வைதம் என மூன்று மதங்கள் உலக ப்ரஸித்தமாக வழங்குமவை. இம்மூன்று மதங்களிலும் பாஷ்யங்கள் அவதரித்துள்ளன. அத்வைத மதத்திற்காக ஆதி சங்கராசார்யர் பாஷ்யம் இயற்றினர். த்வைத மதத்திற்காக ஆனந்ததீர்த்தர் (மத்வாசார்யர்) பாஷ்யமியற்றினர்.

விசிஷ்டாத்வைத மதத்திற்காக பகவத் ராமாநுஜாசார்யரென்கிற ஸ்வாமி [தேவரீர்] ஸ்ரீபாஷ்ய மருளிச் செய்தது. வட இந்தியாவில் அதிக ப்ரஸித்தி பெற்றுள்ள வல்லபமதம் நிம்பார்க்க மதம் முதலிய மதங்களுக்காகவும் பாஷ்யங்கள் தோன்றியுள்ளன. சைவமதத்திற்காக நீலகண்ட பாஷ்யம் தோன்றியுள்ளது. இப்படி மற்றும் பல பாஷ்யங்களிருந்தாலும் மதத்ரயபாஷ்யமென்று மூன்று பாஷ்யங்களே நமது நாட்டில் குலாவப் பட்டுலாவுவன. விசிஷ்டாத்வைதிகளென்றும் ஸ்ரீவைஷ்ணவர்களென்றும் பகவத்ராமாநுஜ தர்சநஸ்தர்களென்றும் வழங்கப் படுகின்ற நமக்கு ஸ்வாமியின் ஸ்ரீபாஷ்யமே ஜீவாது வென்பது சொல்லாமலே விளங்கும். உபநிஷத்துக்களின் உண்மைப்பொருளை விளக்கி ஸூத்ர காரருடைய உள்ளத்திற்கு அநுகுணமாக நிஷ்பக்ஷபாதமாய் நிருமிக்கப்பட்டது ஸ்ரீஸ்வாமியினுடைய பாஷ்யமே யென்று மேனாட்டுப் புலவர்களும் மெச்சியுள்ளார்கள்.

அந்த ஸ்ரீ பாஷ்யத்தின் உண்மைப் பொருளானது ச்ருதப்ரகாசிகை முதலிய வியாக்கியான நூல்களின் உதவியினால் உணரப் படவேண்டும். அதற்கு ஸாமான்ய சாஸ்த்ரங்களின் உதவி இன்றியமையாதது. அப்படிப்பட்ட சாஸ்த்ரஜ்ஞர்கள் நெடுநாள் குருகுல வாஸம் செய்து ஸ்ரீபாஷ்யத்தை யதிகரித்து பாஷ்யாதிகாரிகளென்று பேர் பெற்றுச் சிறந்த வேதாந்திகளாகித் தத்வ ஹித புருஷார்த்தங்களைத் தெளிவாக உணர்ந்து நிரதிசயானந்த சாலிகளாகின்றனர். அவ்வளவு அதிகாரம் வாய்க்கப் பெறுதவர்களையும் கைவிடமாட்டாத கருணைமிக்க நம் பூருவாசாரியர்கள் திவ்ய ப்ரபந்த தத்வ்யாக்யானங்களையும் ரஹஸ்ய தத்வ்யாக்யானங்களையும் மற்றும் பல திவ்யக்ரந்தங்களையு மருளிச்செய் துள்ளார்களாதலால் ஸ்ரீபாஷ்யத்தில் நேராக அவகாஹிக்க மாட்டாதவர்களும் இழவாமல் அதில் விவரிக்கப்பட்டுள்ள தத்வ ஹித புருஷார்த்தங்களை ஸதாசார்ய ஸகாசத்தில் உணரப் பெறுகின்றார்கள். அன்னவர்களது ஞானத்திலும் ஒரு குறையில்லை. குறையில்லை யென்பது மாத்திரமேயல்லாமல் ஸ்ரீபாஷ்யாதிகாரிகளைக் காட்டிலும் மிக விசதமான ஞானத்தெளிவு பெற்றவர்க

ளாகவும் விளங்குகின்றார்கள். நிற்க. ஸ்ரீபாஷ்யாநுஸாரேண இந்த விஜ்ஞாபனத்தைத் திருச்செவி சாற்றியருளவேணும் [என்று கூறி விஜ்ஞாபிக்கிறார் உபந்யாஸகர்.]

## 1. अथातो ब्रह्मजिज्ञासा ॥ அதாதோ ப்ரஹ்மஜிஜ்ஞாஸா.

அத—கர்ம விசாரம் செய்து முடிந்த பிறகு, அத:—கர்ம விசாரம் முடிந்த காரணத்தினாலேயே, ப்ரஹ்மஜிஜ்ஞாஸா—இச்சைக்கு இலக்கான ப்ரஹ்ம விசாரம் (செய்யத்தக்கது) என்று ஸூத்திரத்தின் மேல் பொருள் அறிக. கர்ம விசாரத்தைச் செய்து முடித்தவர்கள் அந்தக் கருமங்களினுடைய அற்பமும் அஸ்திரமுமான பலன்களில் நசையொழிந்து மோக்ஷபுருஷார்த்தத்தை விரும்புபவர்களாதலால் அப்படிப் பட்டவர்களுக்கு ப்ரஹ்ம விசாரம் செய்யத் தக்கது என்றதாயிற்று. நன்றாக வேத மோதின வொருவர் ஜைமினி மஹரிஷியின் கர்ம மீமாம்ஸையில் சொல்லப்பட்ட ந்யாயங்களினால் ஜ்யோதிஷ்டோமம் முதலிய யஜ்ஞங்களின் (கருமங்களின்) தன்மை இன்னபடிப்பட்டது, அவற்றை யியற்றவேண்டிய விதமின்னது, அவற்றின் பலனான ஸ்வர்க்கம் முதலியவற்றின் ஸ்வரூபமும் இத் தகைத்து என்று இவ் விஷயங்களை அறுதியிடப் பெற்ற பின்பு ஸ்வர்க்கம் முதலிய அந்தப் பலன்கள் நச்வரங்கள் என்று தெரிந்துகொண்டதன் பலனாக அவற்றைப் பெறவேணுமென்கிற விருப்பம் தொலைந் தொழியப் பெறுகின்றார். பரப்ரஹ்ம ப்ராப்தியாகிற மோக்ஷ புருஷார்த்தத்தில் மேலெழுந்தவொரு உணர்ச்சியிருப்பதனால் இதனைப்பெறவேணுமென்கிற விருப்பமும் அவர்க்கு உண்டாகின்றது. இப்படி ப்ரஹ்ம ப்ராப்தியில் விருப்பமுண்டான வாறே. அந்த ப்ரஹ்மத்தின் ஸ்வரூபம் இப்படிப்பட்டது, அதனைப் பெறுதற்கு உபாயமின்னது, பெற்று அனுபவிக்கும் பலன் இன்னபடிப் பட்டது என்றித்தகைய விஷயங்களை நிர்ணயிக்க வேண்டுமாதலால் இந்த நிர்ணயம் ப்ரஹ்ம மீமாம்ஸையிற் சொல்லப்பட்டுள்ள நியாயங்களினாலேயே விளையக்கூடியது என்க.

இங்கே கூரத்தாழ்வான் கேட்டருளுகிறார்;—*அதாதோ ப்ரஹ்மஜிஜ்ஞாஸா* என்கிற இந்த ஸூத்திரத்திற்கு இவ்வளவே விஷயமாயிருக்க. இங்கு ஸ்ரீபாஷ்யம் மிக மிக வளர்ந்திருக்கின்றதே; அவ்வளவு விரிவுக்கு விஷயமென்ன? என்பதை ஆராய்ந்து சொல்லவல்லீரோ? என்று. அதற்குமேல் அந்த வக்தா விஜ்ஞாபிக்கிறார்;-

இந்த ஸூத்ரத்தில் மூன்றே பதங்கள் உள்ளன. (अथ) என்கிற முதல் பதத்திற்கு 'அதற்குப் பிறகு' என்று அர்த்தம். எதற்குப் பிறகு? என்கிற கேள்வி உடனே உண்டாகின்றது. 'கர்மவிசாரம் செய்து முடிந்த பிறகு' என்று அர்த்தம் சொன்னேன். பிறர் இங்ஙனே அர்த்தம் கொள்ளாமல் வேறு அர்த்தம் கொள்ளுகின்றனர். ஸாதன சதுஷ்டய ஸம்பத்தியின் ஆநந்தர்யமே அத சப்தார்த்தமென்று சங்கர பாஷ்யத்திலுள்ளது. அது பொருந்தாதென்று மறுக்க அவசியம் ஏற்பட்டது. ப்ரஹ்மத்தின் ஸ்வரூபத்தைப்பற்றிப் பிறர் கூறுவதும் அவசியம் மறுக்க வேண்டியதாயிற்று. இவ்விரண்டு விஷயங்களிலும் ப்ரஸக்தாநுப்ரஸக்தமாகப் பல பல விஷயங்கள் பெருகினபடியால் இவ்விடத்து ஸ்ரீபாஷ்யம் மிக வளர்ந்தது—என்று விஜ்ஞாபித்து விரிவை விடுத்து ஸூத்ரத்தின் மேல் இங்குத் தோன்றியுள்ள பூர்வ பக்ஷத்தையும் ஸித்தாந்தத்தையும் ஸாரமாக விஜ்ஞாபிக்கிறேன் என்று தொடங்கி விண்ணப்பிக்கிறார் உபந்யாஸகர்.

இவ்வதிகரணத்தின் பூர்வபக்ஷம் வருமாறு:—கர்ம மீமாம்ஸையில் அர்த்த வாதாதிகரணத்தில் "ஆம்நாயஸ்ய க்ரியார்த்தத்வாத் ஆநர்த்தக்யம் அததர்த்தாநாம் தஸ்மாதநித்யமுச்யதே" என்கிற வொரு ஸூத்திரத்தினால் ஒரு பூர்வ பக்ஷம் கிளப்பப் பட்டது. அதாவது-வேத ஸாமாந்யமும் ஏதேனுமொரு கார்யத்தைச் செய்யவேண்டியதாக வுணர்த்தித் தீரவேண்டிய நிர்ப்பந்தமுடையது; அதைச் செய் இதைச் செய் என்று கர்த்தவ்யார்த்தங்களை நியமேந போதிப்பதே வேதங்களின் க்ருத்யம்,

அர்த்தவாத ரூபங்களான வேத வாக்யங்களானவை கர்த்தவ்யார்த்த மொன்றையும் போதிக்காமையினாலே அப்படிப்பட்ட வாக்யங்களுக்கு ப்ராமாண்யம் ஸம்பவிக்கமாட்டாது. (இதைச் சிறிது விவரிக்கிறேன்) "வாயவ்யம் ச்வேதமாலபேத பூதிகாம:" என்பது ஒரு வேத வாக்கியம். இதில் ஒரு கருமம் கர்த்தவ்யமாக விதிக்கப்பட்டிருக்கிறது. இதற்கு அடுத்த வாக்யம் 'வாயுர்வை க்ஷேபிஷ்டா தேவதா' என்பது, முன் சொன்ன கருமத்தில் ஆராத்யமான வாயு தேவதையின் ஒரு பெருமையைப் புகழ்ந்து கூறுவது இந்த வாக்யம். "வாயு மிகவும் சீக்கிரமாகப் பலனளிக்க வல்ல தேவதை" என்பது இந்த வாக்யத்தின் அர்த்தம். இப்படிப்பட்ட வாக்யங்களுக்கு அர்த்தவாத வாக்யமென்று பெயர். இவற்றில் கர்மவிதி ஒன்றுமில்லாமையால் இவை விதி வாக்யங்களல்ல. விதிவாக்யமாயிருந்து கொண்டே ப்ராமாண்யம் பெறவேண்டியது முறைமையாயிருக்க யத்கிஞ்சித் கர்த்தவ்யார்த்த போதகத்வ ராஹித்யத்தாலே விதி வாக்யமாக மாட்டாத அர்த்த வாத வாக்யங்கள் ப்ராமாண்யம் பெறமாட்டா—என்கிற பூர்வபக்ஷம் *ஆம்நாயஸ்யேதி (மேலே காட்டின) ஸூத்ரத்தினால் கிளப்பப்பட்டது.

பிறகு "விதிநா து ஏகவாக்யத்வாத் ஸ்துத்யர்த்தேந விதீநாம் ஸ்யு." என்கிற ஸூத்ரத்தினால் இதற்குப் பரிஹாரம் சொல்லப்பட்டது. எங்ஙனே யென்னில், அர்த்தவாத வாக்யங்கள் ஒரு காரியத்தைச் செய்யும்படி விதிக்காமற் போனாலும் ஸமீபத்திலுள்ள விதி வாக்யத்தில் விதிக்கப்பட்டதொரு க்ரியையில் அந்வயிக்கின்ற புகழ்ச்சியைத் தெரிவிப்பதனால் அந்த விதிவாக்யத்தோடு கூட ஏக வாக்யமாக நின்று ப்ராமாண்யம் பெறத் தட்டில்லை யென்று ஸித்தாந்தம் செய்யப்பட்டது ஜைமினி மஹர்ஷியால். ஆக, விதி வாக்யங்களுக்கோ அவற்றுக்கு சேஷபூதங்களான வாக்யங்களுக்கோ ப்ராமாண்யமுண்டே யல்லது வேறு வகையான வாக்யங்களுக்கு ப்ராமாண்யம் கிடையாது. உலகத்திலும் முதன் முதலாகச் சிறுவர்களுக்கு வ்ருத்த வ்யவஹாரத்தினாலேயே சக்தி க்ரஹணமுண்டாகிறது. [சக்திக்ரஹணமாவது-இந்த பதத்திற்கு இன்னது அர்த்த மென்கிறவுணர்ச்சி] வ்யுத்பந்நனானவொருவன் வேறொரு வ்யுத்பந்நனை நோக்கி 'காமாநய' என்கிறான். அதைக் கேட்ட அவன் ஒரு கோவைக் கொண்டு போகிறான். மறுபடியும் அவன் 'காம் நய. அச்வம் ஆநய' என்கிறான். அதைக் கேட்ட அந்த வ்யுத்பந்நன் கோவைக் கொண்டுபோய்க் கட்டிவிட்டுக் குதிரையைக் கொண்டு வருகிறான். இவற்றைக்கண்டு கொண்டிருந்த வொரு சிறுவன் (காம்) என்பதற்கு இன்னது பொருள் (ஆநய) என்பதற்கு இன்னது பொருள் (நய) என்றதற்கு இன்னது பொருள்; அச்வமென்றதற்கு இன்னது பொருளென்று அங்கு நடந்த காரியங்களினால் தெரிந்து கொள்ளுகிறான். 'கோ' பதமானது கொண்டுவருதல் கொண்டுபோதல் என்கிற இரண்டு க்ரியைகளிலும் அந்வயிக்கின்ற வஸ்துவை போதிப்பதனாலே பசுவைச் சொல்லுகின்றது, ஆநய என்கிற பதம் கொண்டுவருவதாகிற க்ரியையைச் சொல்லுமது என்றிப்படி அந்தந்த பதங்களுக்கு சக்தியை க்ரஹிக்கின்றான். எங்கும் இப்படிப்பட்ட வ்யவஹாரங்களினாலேயே அவ்வோ பதங்களுக்கு அவ்வோ அர்த்தங்களில் சக்தி க்ரஹண முண்டாகிறது. ஆகவே இப்படிப்பட்ட வ்யவஹாரங்களெல்லாம் ஏதேனுமொரு கார்யார்த்த பரங்களாகவே காணப்படுதலால் உலகில் எல்லாப் பதங்களும் யத்கிஞ்சித் கர்த்தவ்யார்த்த பரங்களே யென்று நிச்சயிக்கிறான். ஆக இப்படிப்பட்ட வ்யுத்பத்திக்கு இணங்க எல்லாப் பதங்களும் கார்யார்த்த பரங்களே. இப்படி லௌகிக பதங்கள் கார்ய பரங்களென்று தேறினால் 'ய ஏவ லௌகிகாஸ்த ஏவ வைதிகா:' என்கிற ந்யாயத்தாலே வைதிக பதங்களும் கார்ய பரங்களேயாகும். (கார்ய பரங்களான வாக்யங்களுக்கே ப்ராமாண்யமுண்டு என்றபடி) ஏவஞ்ச, கார்ய ரூபமல்லாத பரப்ரஹ்மத்தினிடத்தில் வேதாந்த வாக்யங்களுக்குத் தாத்பர்யமிருக்க முடியாமையினாலே வேதாந்த விசார ரூபமான ப்ரஹ்மவிசார சாஸ்த்ரம் ஆரம்பிக்கத் தக்கதன்று—என்று பூர்வபக்ஷம் ப்ராப்தமாயிற்று.

இதற்குமேல் ஸித்தாந்தம் வருமாறு:—சிறுவர்களுக்கு முதல் வ்யுத்பத்தி வ்ருத்த வ்யவஹாரத்தினாலேயே உண்டாகிறது என்பது பிசகு; இது எல்லாருடையவும் அநுபவத்திற்கு விருத்தமானது. உலகில் அவரவர்களுக்கு முதல் வ்யுத்பத்தி உண்டாகிற விதம் வேறுவகையாகவே அநுபவ ஸித்தமாகவுள்ளது. எங்ஙனே யென்னில், தந்தை தாய் முதலியவர்கள் தம்தம் சிறுவர்களுக்கு வ்யுத்பத்தியையுண்டு பண்ண வேண்டி கண்ணிற் காணும் பல பல பொருள்களை விரலால் சுட்டிக் காட்டி 'இதோ சந்திரன், இதோ கிளி, இதோ குதிரை, இதோ மாமா' என்றிப்படி ப்ரயோகித்து வருகிறார்கள். சிசுக்களும் பூர்வஜன்ம வாஸனையினால் காலக்ரமேண அவ்வோ பதங்களுக்கும் அவ்வோ அர்த்தங்களுக்குமுள்ள ஸம்பந்தத்தைத் திடமாக வுணர்ந்து வ்யுத்பத்தி பெறுகின்றன. ஒரு கார்யத்தில் அந்வயித்த வஸ்துவிலேயே முதன் முதலாக சக்தி க்ரஹணமுண்டாகிற தென்றதற்கு முரணாக ஒரு கார்யத்திலும் அந்வயியாத வஸ்துவிலேயே முதன் முதலாகப் பதங்களுக்கு சக்திக்ரஹண முண்டாகின்றதென்று மூதலிக்கப்பட்டது.

கார்யபரமான வாக்கியத்திலிருந்தே சக்திக்ரஹண முண்டாகிறதென்பதும் மிகவும் தவறு. 'தேவதத்தா! உனக்குப் பிள்ளை பிறந்தது' என்பதாக ஒரு வாக்கியத்தை எடுத்துக் கொள்வோம். இது ஸித்தார்த்தபரமான வாக்கியமேயொழிய 'காம் ஆநய, காம் நய' இத்யாதி வாக்யங்கள்போலே கார்யபரவாக்கியமன்று. இந்த வாக்கியத்தினாலும் சிறுவர்களுக்கு வ்யுத்பத்தி விளையக் காணுகின்றோம். தேவதத்தனுக்குப் பிள்ளை பிறந்தவுடனே வேறோரிடத்திலிருந்த அவனுக்கு இதைத் தெரிவிப்பதற்காக ஏவப்பட்ட வொருவன் 'தேவதத்த! புத்ரஸ் தே ஜாத:' என்கிறான். அவ்யுத்பந்நனான வொருவன், தேவதத்தனுடைய க்ருஹத்தில் அவனுக்குப் பிள்ளை பிறந்ததையும் அதைத் தெரிவிப்பதற்காக வொருவன் ஏவப்பட்டதையும் அவன் கூறினதைக் கேட்டு தேவதத்தனுக்கு முக விகாஸ முண்டானதையும் நோக்கி "புத்ரஸ் தே ஜாத:" என்ற வாக்கியத்திற்கு இன்னது பொருளென்று உணரப் பெறுகிறான்- ஆகவே கார்யபரமான வாக்கியத்திலிருந்தே சக்திக்ரஹண மென்கிற நியதி இல்லையென்றதாயிற்று. சில விடங்களில் ஸித்தபரமான வாக்யத்திலிருந்தும் கார்ய அநந்விதவஸ்துக்களில் சக்திக்ரஹண முண்டாகிறது; சில விடங்களில் கார்யபர வாக்யத்திலிருந்தும் உண்டாகிறது—என்று லோகாநுபவத்தினால் ஸித்திக்கிறபடியால் ப்ராபாகரர்கள் ஸகல பதங்களும் கார்யார்த்தபரங்களென்று கூறுவது யுக்தியற்றதென்று தேறிற்று. ஆகவே வாக்கியங்களுக்கு ஸித்தரூபமான ப்ரஹ்மத்தில் தாத்பர்யம் ஸம்பவிக்கலாமாகையாலே தத்விசார சாஸ்த்ரம் ஆரம்பிக்கத் தக்கதேயென்று ஸித்தாந்தமானதாக முடிந்தது.

இங்கு இப்படிப்பட்ட பூர்வபக்ஷம் தோன்றி இதற்குப் பரிஹாரம் செய்வதாகிற விஷயம் இந்த ஸூத்ரத்தில் எங்ஙனம் கிடைக்கிறதென்று கேள்வி தோன்றும். கார்யத்தில் அந்வயியாத ப்ரஹ்மமாகிற ஸித்த வஸ்துவை ஜிஜ்ஞாஸ்யமாக இங்குக் கூறியிருப்பதனால் இதிலிருந்து இந்தப் பூர்வ பக்ஷ ஸித்தாந்தங்கள் நிர்ணயிக்கப்படக் குறையில்லை. வேதாந்த வாக்கியங்களெல்லாம் கார்ய பரங்களாய்க் கொண்டு ப்ராமாண்யம் பெறுமேயல்லது ஸித்தபரங்களாய்க் கொண்டு ப்ராமாண்யம் பெறமாட்டாதென்கிற வாதம் ஸமஞ்ஜஸமாயிருந்தாலன்றோ வேதாந்த வாக்யங்களினால் ஸித்தரூபமான ப்ரஹ்மத்தை விசாரிப்பது கூடாதென்று சொல்ல நேரும்.

முதலில் அடியேனெடுத்துக் காட்டிய பூர்வ மீமாம்ஸா ஸூத்ரங்களிரண்டினால் தேறின வர்த்தம் இப்போது விரோதிக்கிறதாக இனி நினைக்கக்கூடும். கார்ய பரங்களல்லாத ஸித்தபர வாக்கியங்களுக்கு ஸ்வாதந்த்ர்யேண ப்ராமாண்யம் அஸம்பாவித மென்றன்றோ அங்கு ஸித்தாந்தம் செய்யப்பட்டிருக்கிறது—என்று சங்கிக்க நேரும். இந்த சங்கை வேண்டா. எல்லா வேத வாக்கியங்களும் கார்ய பரங்களாய்க் கொண்டே ப்ராமாண்யம் பெறுமென்று பூர்வபக்ஷி சொன்னதை அப்படியே

ஒப்புக்கொண்டு அப்யுபகம்ய வாத முறையில் பரிஹாரம் காட்டினார் ஜைமினிமஹர்ஷி
அதுவே அவருடைய அபிப்ராய மென்பது கிடையாது. கார்யபரமல்லாத அர்த்
வாத வாக்கியங்களும் விதி சேஷமாய்க் கொண்டு ப்ராமாண்யம் பெறுகின்றன
வென்று சொன்ன வளவால் ஸித்தபர வாக்யங்களுக்கு ப்ராமாண்யமே கிடையா
தென்று சொன்னபடி யாகாது. ஆகவே இந்த ஸூத்ரத்தில் செய்யப்படு
ஸித்தாந்தமானது அர்த்தவாதாதிகரண ஸித்தாந்தத்திற்கு விருத்தமன்று.

இதில் (அத அதः) என்கிற இரண்டு பதங்களினால் கர்ம விசாரத்திற்குப் பிற
கர்ம விசாரம் முடிந்ததென்கிற காரணத்தாலேயே, ப்ரஹ்ம விசாரம் செய்யதக்
தென்று கிடைப்பதனால் ப்ரஹ்மவிசாரத்தைக் குறித்துக் கர்ம விசாரம் நியமே
பூர்வவ்ருத்தமென்று தேறுகின்றது. இதைப் பற்றியும் சிறிது விவரிக்க விரும்பு
கிறேன். வேதமோதின வொரு புருஷன் வேதவாக்யங்களில் கர்ம பலத்தைப் பற்
யும் ப்ரஹ்மஜ்ஞான பலத்தைப் பற்றியும் ஸ்திரமென்று சிலவிடங்களிலும் அஸ்தி
மென்று சிலவிடங்களிலும் மேலெழுந்த வாரியாக வுணர்ந்து இவற்றில் எது
உண்மை யென்று நிர்ணயம் தெரிந்து கொள்ள விரும்புகிறான். அந்த விருப்பத்தி
னால் அதை நிர்ணயித்துத் தரக்கூடிய சாஸ்த்ரங்களில் ப்ரவர்த்திக்கிறான். கர்
பலனைப் பற்றின வுண்மையை நிச்சயித்துத் தரவல்ல சாஸ்த்ரங்களில் முந்து
முன்னம் ப்ரவர்த்திக்கிறான். அநாதிவாஸனையினால் கருமங்களைச் செய்வது எ
தென்று பொதுவாகத் தோன்றியிருக்கும். ப்ரஹ்மஜ்ஞானத்தில் அப்யாஸமில்லா
மையினாலே அது துஷ்கரமென்றும் தோன்றியிருக்கும். ஆகவே எளிதான
உபாயத்தினால் அபிமதம் கைபுகுவதாயிருக்க அரிதான உபாயத்தில் ப்ரவ்ருத்
ஸம்பவிக்க மாட்டாதாகையாலே ப்ரஹ்மஜ்ஞானத்தின் பலனைப்பற்றி நிர்ணயிக்
வேணுமென்கிற விருப்பம் தடைபட்டு, கருமபலனைப் பற்றி நிர்ணயிக்க வேணு
மென்கிற விருப்பமே தலையெடுத்திருக்கும். இங்ஙனம் முன்னம் கருமவிசாரம் செய்
வளவில் கருமபலன்கள் அஸ்திரம் என்கிற நிச்சயமுண்டாகிறது. இப்படி நிச்ச
முண்டானவளவில், கர்ம விசாரேச்சை தொலைந்ததாகிறது. இந்த கர்ம விசாரே
சையே முன்பு ப்ரஹ்ம விசாரேச்சைக்கு இடையூறாயிருந்ததனால் இந்த ப்ரதிபந்தக
தொலையவே ப்ரஹ்ம விசாரத்தில் இச்சையும் அதில் ப்ரவ்ருத்தியும் அடுத்தபடியாக
உண்டாகிறது. எனவே, ப்ரஹ்ம விசாரத்தைக் குறித்து கர்ம விசாரம் நியமே
அபேக்ஷிதமென்றதாகிறது. இதுவே பூர்வ வ்ருத்தமாக இருக்கத் தக்கதாதலா
(அத அதः) என்ற பதங்களுக்கு முன்னம் கூறிய பொருளே பொருத்த முடைத்
தென்றதாயிற்று.

ஜிஜ்ஞாஸாதிகரண ஸ்ரீபாஷ்யத்தின் ப்ரமேயத்தை இங்ஙனே ஸம்க்ஷேப
மாகவும் ஸாரமாகவும் விண்ணப்பம் செய்யக் கேட்டருளின எம்பெருமானார் மிகவும்
திருவுள்ளமுகந்து "இந்நிலத்தில் இக்காலத்தில் இவ்வண்ணமாக ஸாரத்தை
க்ரஹித்துத் தரித்து நிஷ்கல்மஷமாக உபபாதிப்பது அதிசயிக்கத் தக்கதே" என்
றருளிச்செய்து மேல் அதிகரணங்களைப்பற்றியும் விஜ்ஞாபிக்குமாறு நியமித்தருள,
அடுத்த ஜந்மாத்யதிகரணத்தின் பிரமேயத்தையும் விஜ்ஞாபிக்கிறார்.

(2) உலகில் ஒன்றைத் தெரிந்துகொள்ள வேணுமானால் லக்ஷணத்தை முன்
னிட்டே தெரிந்து கொள்ள வேண்டியிருக்கிறது. அப்படியே பரப்ரஹ்மத்தைத்
தெரிந்துகொள்ள வேணுமானாலும் ஒரு லக்ஷணத்தை முன்னிட்டே தெரிந்துகொள்
வேண்டும். நாம் கண்ணால் காணக்கூடிய பொருள்களுக்கே லக்ஷணம் கூறமுடியுமே
யல்லது கண்ணுக்குப் புலப்படாத பொருளுக்கு லக்ஷணம் கூறமுடியாது. பரப்ரஹ்
மமோ கண்ணுக்குப் புலப்படாததே யன்றிப் புலப்படுமதன்று. ஆகவே அதற்
ஒரு லக்ஷணம் கூற இயலாதபோது அது தெரிந்து கொள்ள முடியாததென்று தேறு
வதால் அந்த ப்ரஹ்மத்தைப் பற்றின விசாரம் எப்படி செய்ய ப்ராப்தமாகும்
என்று ஆக்ஷேபம் தோன்ற. அவ்வாக்ஷேபத்தைப் பரிஹரிக்க ஜந்மாத்யதிகரண

இதன் தொடர்ச்சி பக்கம் 9-24 மேலே காண்க.

# அன்பர்களுக்கு அறிவிப்பு

திருவல்லிக்கேணி ஸ்ரீபார்த்தஸாரதி ஸன்னிதியில் 16—2—64 தேதி முதலாக் நடந்த உபந்யாஸங்களில் ஸ்ரீ பாஷ்ய விசேஷார்த்தங்கள் என்பதுபற்றி இரண்டுநாளும், கீதாபாஷ்ய விசேஷார்த்தங்கள் என்பதுபற்றி இரண்டுநாளும் உபந்யாஸம் நடந்தேறியது. ஸத்ஸம்ப்ரதாயார்த்த விசேஷங்கள் என்பதுபற்றி இரண்டுநாள் நடக்க விருக்கையில் ஒருநாள் மட்டுமே நடந்ததென்பது நிற்க. இவ்வுபந்யாஸங்களை ஒரு நவீன முறையில், வாசிப்பவர்களுக்கு ருசிகரமான வைகரியில் வெளியிடவேணு மென்கிற ஆசைதோன்றி "நித்யவிபூதி லீலாவிபூதி ஸம்வாதங்கள்" என்று மகுடம் வைத்து எழுதத் தொடங்கினேன். இதைப் பூர்த்தியாகவே யெழுதி முடித்து இந்த ஸஞ்சிகையில் வெளியிட ஆசை கொண்டிருந்தேன். 21—2—64 வெள்ளிக்கிழமை மாலை அஸ்வாஸ்த்யம் ஏற்படுகிற க்ஷணத்திலும் இந்த வியாஸமேதான் எழுதிக் கொண்டிருந்தேன். முதலிரண்டு நாளைய உபந்யாஸங்கள் மட்டுமே ஒருவாறு எழுதி முடிக்கப்பட்டபடியால் அவ்வளவே இதில் வெளியாகியுள்ளது. சேஷமும் க்ரமேண வெளிவரும். ... .... .... .... .... *

## கடிதங்கள் 1.

'Ananda Vardhini' 78, Santhome High Road,
Madras-4, 21—2—64.

Dr. V. RAMA IYENGAR, டாக்டர் V. ராமையங்கார், சென்னை.

ஸ்ரீமதேராமாநுஜாயநம:

ஸ்ரீமான் உ. வே. P. B. A. ஸ்வாமி ஸந்நிதியில் அடியேன் தாளும் தடக்கையும் கூப்பி அநேக தெண்டன் ஸமர்ப்பித்த விண்ணப்பம். உபயகுசலோபரி. இன்று ஸ்வாமி அனுப்பிய புஸ்தக Bundle கிடைக்கப்பெற்றேன். திறந்து பார்த்ததும், ஒரு புறம் மிக்க மகிழ்ச்சி. மற்றொருபுறம் மிக்க துயரமடைந்தேன். அடியேன் செலுத்தியது அதிக சொற்பம். ஸ்வாமி கருணை கூர்ந்து அனுப்பியது விசேஷப்ரதிபலன். ஏகதேச ஸாம்யமும் இல்லையே. தவிர இவ்வளவு ஒப்பற்ற புஸ்தகங்களை ஒரு ஆயுட் காலத்தில் எழுதி, அச்சிட்டு தலைக்கட்ட முடியுமா? என்று ப்ரமித்தேன். இந்த அசாதாரணமான காரியத்தை ஸாதிக்க பகவானின் பரிபூர்ண அருளும், அளவிட முடியாத பாண்டித்தியமும் இருந்தால் தான், இம்மாதிரி முயற்சியே செய்ய முடியும். ஸ்வாமி எழுதிய புஸ்தகங்களை அடுக்கினாலேயே ஒரு பெரிய Library ஆய்விடுமே. என்னைப் போன்றவர்களுக்கு இவைகளைப் படித்து கிரஹிக்க ஒருஜென்மம் போரவே போராது. நான்கு ஜென்மத்திலும் படித்துப் பூர்த்தி செய்ய முடியாதே! மேலும், ஸ்வாமி வெளியிட்டருளின ஸகலநூல்களையும் அனுப்பாமல் எனக்கு உபயோகப்படு மளவுபார்த்து அனுப்பியுள்ளதாகத் தெரிந்து கொண்டேன். மற்றும் ஸம்ஸ்க்ருதம் முதலிய பாஷைகளிலும் ஸ்வாமி வெளியிட்டருளி யுள்ள நூல்கள் இவற்றுக்கும் மேலானவை யென்று கியாடலாகுகளினால் தெரிந்து கொள்ளுகிறேன். தமிழ்நூல் களும் மணிப்ரவாள நூல்களும் அடியேனுக்குக் கிடைத்துள்ள வரையில் நவநிதிகளுக்கும் மேலானவை யென்றே மதிக்கிறேன். ஸ்வாமி செய்திருக்கிற இந்த அரிய பெரிய ஜகதுபகாரத்தை இதுகாறும் அநுபவிக்காமலே வாழ்நாளைக் கழித்து விட்டேனே என்று வருந்தினேன். ஒரு பெரிய மேதாவி சொன்னான் "நல்ல மேலான தத்துவ புஸ்தகங்களைப் படிக்காவிட்டாலும், அவைகளை சிரத்தையுடன் வாங்கி ஆதரித்துக் கண்ணுற்று மனம் கலங்கினால் கூட, பலன்களை அப் புத்தகங்கள் அளிக்கும்" என்று உறுத்தி அழுத்திச் சொன்னான்.

இந்த மேதாவி மொழிந்ததை நான் நம்புகின்றேன். நம் முன்னோர்கள் நம் பூர்வாசாரியர்கள் எல்லோரும் ஒன்று சேர்ந்து ஏகமனதாய் அநுக்ரஹித்து அவர்கள் தவப்புதல்வனாகத்தான் ஸ்வாமி அவதரித்திருக்க வேண்டும். கலவி அளவற்றது என்கிறார்கள். ஸ்வாமி அந்த அளவற்ற கல்விகளை, சாஸ்திரத் துறையில் இறங்கி அவைகளை எல்லாம் கசடறக்கற்று, ஜீரணம் செய்து கொண்டு, சாரங்களை யெல்லாம் தெளிவுபட மற்றவர்களுக்கு உஜ்ஜீவிக்க, வாரி இறைத்திருக்கின்றீரே! ஸ்ரீ வைஷ்ணவவுலகம் தேவரீருக்கு என்ன கைம்மாறு செய்ய முடியும்? வாழி, வாழி பல்லாண்டு வாழி, பல்லாயிரத்தாண்டு வாழி என்று வாயை பொத்திக் கொண்டு ஸ்வாமி திடகாத்திரராய் என்றும் விளங்க வேண்டும் என்று மனப்பூர்வமாக பகவானை ப்ரார்த்திப்பது தவிர என்னைப் போன்ற பாமரர்கள் வேறு என்ன செய்ய முடியும்? இக் கடிதம் எழுதுவதற்குக் கூட எனக்கு யோக்யதை இல்லை. எனினும் அன்புக்கு ஒரு தனி சலுகை. இந்தச் சலுகைதான் என்னை தேவரீருக்கு இக் கடிதத்தை எழுதத் தூண்டியது. க்ஷமித்தருள வெண்டும். ஸ்வாமியின் அந்தரங்க ஹ்ருதயத்தில் நாங்களும் இடம்பெற வேண்டும்.

ஸ்வாமியின் அற்புத ஸேவை எந்நாளும் எக்காலத்திலும் வேர் ஊன்றி, இந்த புண்ய பூமியில் பிரகாசித்துக் கொண்டே இருக்கும். இதற்கு ஐயமில்லை.

த. ஸ. வி. தாஸன். ராம அய்யங்கார்.

குறிப்பு:—ஸ்ரீமான் டாக்டர், V. ராமையங்கார் எனக்கு இக்கடிதம் எழுதிய போது 21—2—64ல் எனக்கு நேர்ந்த அஸ்வாஸ்த்யத்தை அறிந்திலர். அதை அறிந்தபின் அவர் ஒரு நீண்ட கடிதமெழுதி யுள்ளார். அவர் அன்பில் சிறந்தவர் என்பதற்குமேல் டாக்டர்களில் தலைவராயுமிருப்பதால் இரண்டு முறைமைக்குஞ் சேர அவர் எழுதி யிருந்ததைப் பார்க்க என் இதயத்தில் ஒரு அதிர்ச்சி ஏற்பட்டது. அனுட்டிக்க முடியாதவதனை வெளியிட்டுக் கொள்ளவேண்டாவென்று நிறுத்தி விட்டேன். அவருடைய அபரிமிதமான அன்புக்கு உகந்தேன். P. B. A.

## கடிதம் 2

M. Sudarsanam Iyengar, Timber Merchant,
41, Edward Elliots Road, Mylapore, Madras 4, 2nd March, 1961.

ஸ்ரீமான். M. ஸுதர்சனமையங்கார் ஸ்வாமி மயிலாப்பூர்.

ஸ்ரீமத் வேதமார்க்க இத்யாதியாய் எழுந்தருளி யிருக்கும் ஸ்ரீ. உ. வே. P. B. அண்ணங்கராச்சாரியார் ஸ்வாமி ஸந்நிதியில் அடியேன் சுதர்ஸன தாஸன் அநந்தமான தெண்டன் சமர்ப்பித்து வரையும் விகிதம்:

நம் வைஷ்ணவ ஸம்ப்ரதாயத்திற்கு ஒப்பற்ற ஸேவை செய்துவரும் ஸ்வாமிகளது பத்ரிகையான "ஸ்ரீராமாநுஜன்" ப்ரதி மாதமும் வருகை தந்து அடியோங்களை மகிழ்வித்து வருகிறது. இதற்கு அடியேனது மனப்பூர்வமான க்ருதஜ்ஞதையைத் தெரிவித்துக் கொள்ளுகிறேன்.

தை மாத சஞ்சிகையில் "ஸ்ரீராமாநுஜன்" பதினைந்து பிராயங்களை முடித்து பதினாறும் பிராயத்தில் அடியிடுவதாக அறியலாயிற்று. இந்த சுப சந்தர்ப்பத்தில் அடியேனும் கிஞ்சித் கைங்கர்யத்தை ஜீவியச் சந்தாதாரனாகச் சேருவதன் மூலம் செய்ய விரும்புகிறேன். அதற்காக ரூ. 100க்கு செக் ஒன்று இதிலடக்கம் அனுப்பி யிருக்கிறேன்; பெற்றுக்கொண்டு அடியேனை ஜீவியச் சந்தாதாரனாக அங்கீகரிக்க வேணுமாய் பிரார்த்திக்கிறேன்.

ஸ்ரீமத் பரமஹம்ஸேத்யாதி திருக்குடந்தை யாண்டவன் விஷயமாக வெளி வந்துள்ள கட்டுரையை வாசித்து மிகவும் மகிழ்ந்தேன். திருவரங்கம் பெரிய கோயிலில் ஆண்டவன் ஆஸ்தானத்தின் ஸுப்ரஸித்தியைப் பற்றியும் ஆஸ்தானத்தை ஏற்கெனவே அலங்கரித்திருந்த ஸ்வாமிகளைப் பற்றியும் விளக்கமாக எழுதியதுடன், தற்போது அலங்கரித்துவரும் ஸ்வாமிகளின் பெருமை, திறமை, பாண்டித்யம், உதாரமான திருவுள்ளம் இவைகளைப்பற்றி தேவரீருக்கே உரித்தான அழகிய பாணியில் எழுதியிருப்பது அடியோங்களது உள்ளங்களுக்கு ரொம்பவும் உகப்பாக உள்ளது.

இந்த ஆண்டு, சென்னை தியாகராயநகர் சாரதா வித்யாலய ஹாலில் 12-1-64 கூட்டிய திருப்பாவை வித்வத் ஸதஸ்ஸைப் பற்றிய கட்டுரை ரொம்பவும் சிறப்பாயிருக்கிறது. மேற்படி ஸதஸ்ஸில் ஸ்வாமிகளும் கலந்துகொண்டு உபந்யஸித்து "வங்கக் கடல் கடைந்த" எனும் பாசுரத்திற்கு ராமாயணார்த்தமாக ஸ்வாமிகள் சாதித்துள்ள வியாக்யானத்தின் பெருமையையும், அழகையும் என்னென்று கூறுவது? "கொடுத்தது உப்புச்சாறு; கொண்டது அமுதக் கொழுஞ்சாறு" எனும் விளக்கமும் "பறைகொண்டவர் பெருமாள்" எனும் விளக்கமும், யாவற்றிற்கும் மேலாக, சிகரம் வைத்தாற்போல் ஜ்வலிக்கின்றது. "அணிபுதுவைப் பைங்கமலத்தண் தெரியல் பட்டர் பிரான் கோதை சொன்ன" என்பதற்கு

"வல்மீகத: ச்ரவணதோ வஸுதாத்மனஸ் தே
ஜாதோ பபூவ ஸ முநி: கவிஸார்வபௌம:
கோதே கிமத்புதமிதம் யதமீ ஸ்வதந்தே
வக்த்ராரவிந்த மகரந்தநிபா: ப்ரபந்தா:!'

எனும் சுலோகத்திற்கு தேவரீர் வரைந்துள்ள வியாக்யானமும் மனத்திற்குமட்டு மல்லாது, கருத்திற்கும் மதுரமான சத்துடைய விருந்தாக அமைந்துள்ளது.

ஸ்ரீராமானுஜனுக்கு அடியேனுள்ளத்தில் தனியான இடமுள்ளதெனும் விக்ஞாபனத்துடன் முடித்துக் கொள்கிறேன்.

தாஸன் M. Sudarsana Iyengar.

குறிப்பு :—இக்கடிதமும் என்னுடைய அஸ்வாஸ்த்யம் தெரிவதற்கு முன்பு எழுதியது. அது தெரிந்தபின் 7—3—64ல் அவர் விடுத்த நிருபம் வருமாறு ;—

.... .... .... .... ஸ்வாமிகளது 5—3—64 தேதியுள்ள ஸ்ரீமுகம் கிடைக்கும் பாக்கியம் பெற்றேன். ஸ்வாமிகளின் திருமேனிக்கு ஆபத்தான நிலை ஏற்பட்டு டாக்டர்கள் சிகித்ஸையினால் தற்போது தேவலையென்றும், டாக்டர்கள் 3 மாத காலம் பரிபூர்ண ஓய்வு எடுத்துக்கொள்ளும்படி விதித்திருக்கிறார்கள் என்றும் விவரம் அறிய மனம் மிகவும் வியாகூலமடைகிறேன். ஸ்வாமியின் திருமேனி பாரத நாட்டினுக்கே பொதுவான பொக்கிஷம். நமது வைஷ்ணவ சம்ப்ரதாயத்திற்கு கொழுகொம்பு போன்றது. சுமார் அறுபதாண்டுகளாக ஸ்வாமிகள் நமது சம்ப்ரதாயத்திற்குச் செய்துவரும் சேவை சொல்லொணாதது. இன்னும் பல்லாண்டு வாழ்ந்து பாரத நாட்டினருக்கு பகவத் விஷயங்களை ப்ரவசனஞ் செய்து நமது சநாதன தர்மத்தைக் காக்க வேண்டி டாக்டர்கள் விதித்தாற்போல் மூன்று மாதங்களென்ன, ஆறு மாதங்களாயினும் சரி, ஸ்வாமிகள் பரிபூர்ண ஓய்வு எடுத்துக்கொள்ள வேண்டியது அவச்யமென அடியேனது தாழ்மையான அபிப்ராயம். அறுபதாண்டுகளுக்கும் மேலான சேவைக்கு ஒரு ஆறுமாத ஓய்வாகிலும் வேண்டாமா? ஓய்வெடுத்துக்கொண்டு திருமேனியைப் பாங்காக காத்துக் கொள்ள வேண்டியது நமது தர்மத்தின் அவச்யம் என ப்ரார்த்திக்கிறேன்.

தாஸன்
M. ஸுதர்சனமையங்கார்.

## "ஏதுக்கிதுவென்? இதுவென்? இதுவென்னே?"

## "PADUKA SAHASRA"

## (பாதுகாஸஹஸ்ரம்)

12-1-64 தேதியில் T. Nagar சாரதாவித்யாலய ஹாலில் திருப்பாவை ஸதஸ்ஸு நடைபெற்ற விஷயமும், அப்போது அங்கு அடியேனும் விடை கொண்டிருந்த விஷயமும் சென்ற ஸ்ரீராமாநுஜனில் (.81ல்) விரிவாகத் தெரிவிக்கப்பட்டிருக்கின்றதல்லவா? அங்கு உபந்யாஸம் முடிந்து புறப்படும் போது ஒரு பெரியவர் வந்து ஒரு சிறு புத்தகத்தைக் கொடுத்து இதைக் கடாக்ஷித்தருளவேணும்' என்று சொல்லிப் போனார். அது 14 பக்கங் கொண்ட ஒரு சிறு புத்தகம். முகப்பு அட்டையும் அடுத்த முன்னுரையும் மட்டும் ஆங்கிலத்திலுள்ளது. மற்றது தமிழ்.

டைடல் (அட்டை) என்ன வென்றால்—ராஜகோபாலராகவாசாரியர் B.A. என்பவர் ஸ்ரீ D. T. தாதாசார்ய சிரோமணியின் உதவியையும், M. R. ராஜகோபாலய்யங்கார் M. A. அவர்களின் உதவியையுங் கொண்டு சேகரித்த பாதுகாஸஹஸ்ரத் தொகுப்பு என்பதாகவுள்ளது. உள்ளே யிருக்கும் வெள்ளை காகித டைடலில் ஸ்ரீமான் கோமடம் S. S. ஐயங்காரும் உதவி புரிந்தவர்களில் ஒருவரென்று கையெழுத்தால் எழுதப்பட்டுள்ளது. அடுத்துள்ள ஆங்கில Introdoction ல் விஷய மென்ன வென்றால்,

ஸ்ரீ வேங்கடநாதர் உயர்ந்த வேதியர் குலத்தில் தூப்புல் என்ற கிராமத்தில் 1268-ம் ஆண்டு (கி. பி.) தோன்றினார். இவர் ஆழ்ந்த ஞானத்தினராய் தமிழிலும் ஸம்ஸ்கிருதத்திலும் பல க்ரந்தங்கள் ஸாதித்துள்ளார். பகவத் ராமாநுஜர் காட்டிய பக்தி மார்க்கத்தை உலகில் பரவச் செய்வதே இவருடைய முக்யமான பணி. இவர் 1369-ம் வருடம் பரமபதித்தார். தேசிகனுடைய கற்பனா ஸாமர்த்தியத்திற்கு இந்த பாதுகாஸஹஸ்ரம் முக்ய சான்று. ஸ்ரீரங்கநாத பாதுகையைப் பற்றிய 1008 சுலோக மடங்கிய இந்த க்ரந்தம் ஒரே இரவில் அழகியமணவாளப் பெருமாள் நாயனாரை விட கவனத்தில் தான் உயர்ந்தவர் என்பதை நிரூபிக்க எழுதப்பட்டது. அந்த அழகிய மணவாளப் பெருமாள் பதகமலஸஹஸ்ரம் 300 சுலோகமே எழுத முடிந்தது. மஹான்கள் தேசிகனுக்கு ப்ரஹ்மரதம் ஸமர்ப்பித்து ஆசார்யராகக் கொண்டனர். இந்த க்ரந்தத்தில் பகவத் ராமாநுஜ ஸித்தாந்தத்தையே விஷயமாகப் புனைந்து 32 பத்ததிகள் உண்டு. அப்பைய தீக்ஷிதர் ஒரடிக் கோலில் 1000 துளை துளைத்த ஸாமர்த்தியம் மிகஉயர்ந்ததுஎன்று கொண்டாடும்படி அபூர்வமான பெருமை வாய்ந்தது இந்தக் க்ரந்தம்.—என்றுள்ளது.

பிறகு தமிழில் எழுதப்பட்டிருப்பதாவது, ஸ்ரீ பாதுகா ஸஹஸ்ர வ்ருத்தாந்தம்.

"இந்த வ்ருத்தாந்தம், குரு பரம்பரையில் பின்வருமாறு கூறப்பட்டிருக்கிறது:—

முன்பு ஒரு காலத்தில் அழகிய மணவாளப் பெருமாள் நயினார் தம் திருத்தமையனார் சொல்லையும் கேளாமல் பொறாமையின் மிகுதியினாலே, 'ஆசார்ய ஹ்ருதயம்' என்று தாம் செய்த க்ரந்தத்தைக் காட்டி, "இது தான் பூர்வாசார்யர்களுடைய திருவுள்ளம். இதற்கு விரோதமாக நீர் செய்த க்ரந்தங்கள் எல்லாம் அப்ரமாணம். ப்ரமாணம் என்பீராகில், நம்மோடு வாதித்து ஸமாதானம் சொல்லும். இல்லாவிடில், கவிதார்க்கிக ஸிம்ஹத்வாதி பிருதுகளை விட்டுவிடும்." என்று நிர்ப்பந்தித்தார். அதுகேட்டு நிகமாந்தாசார்யர் புன்சிரிப்புக்கொண்டு, "எந்தப் பிருது தேவரீர் திருவுள்ளத்திற்கு இசையவில்லையோ அதைத் தேவரீரே எடுத்து விடலாம், வாதிப்பதேன்?" என்று மறுத்து நிற்க, பேரருளாள ஜீயர் முதலானோரும், மற்றுமுள்ள ஸ்ரீ வைஷ்ணவர்களும் நயினார் இஷ்டப்படி செய்து அவர் செருக்கை

அடக்க வேண்டும் என்று ப்ரார்த்திக்க, அப்படியே ஆகட்டுமென்று பெரியோர்கள் நியமனத்தை முக்யமாகக் கொண்டு, நயினரை நோக்கி, "தேவரீர் செய்த க்ரந்தத்தில் முக்யமான ஒன்றைச் சொல்ல வேண்டும்" என்ன, அவரும் "ஸ்வதந்திரனை எம்பெருமான் தன்னுடைய நிர்ஹேதுக க்ருபையினுலேயே பரம புருஷார்த்தம் ப்ரஸாதிக்கிறுனுகையால் சேதனனுக்குக் கர்த்தவ்யமான தொன்றுமில்லை; ஆனது பற்றி ப்ரபத்தி உபாயமாக மாட்டாது; இப்படியல்லாதபோது, 1. "வெறிதே அருள் செய்வார்', 2. 'இன்றென்னைப் பொருளாக்கி' இத்யாதியான அருளிச் செயல்கள் விரோதிப்பதுமன்றி, சேதன ஸ்வரூபமான பாரதந்த்ர்யமும் எம்பெருமானுடைய ஸ்வாதந்த்ர்ய காருண்யாதிகளும் பாதிதமாகும்" என்று இவ்வர்த்தத்தை எடுத்து வெகுவாய் உபந்யஸித்து நின்றுர். தேசிகர் இதைக் கேட்டு, 'உபாய: ஸ்வப்ராப்தேருபநிஷததித:' என்கிற சுலோகத்தாலே இவ்வாக்ஷேபங்களுக்கெல்லாம் முறையே ஸமாதானம் சொல்லி, இவைகளுக்கு வேத சாஸ்திரங்களையும் அருளிச் செயல்களையும், ஆசார்ய ஸ்ரீ ஸூக்திகளையும் வெகுவாய் எடுத்துக் காட்டி நியாயங்களையும் நிரூபித்தருளினுர். இப்படி தேசிகர் பரக்க உபந்யஸித்ததைக் கேட்டு நயினுர் ஸமாதானமடைந்து, மேல் ஒன்றும் சொல்ல மாட்டாமல் தலையிறங்கி நிற்க, திருவோலக்கத்தோர் எல்லோரும் விசேஷார்த்தம் கேட்கப் பெற்றோம் என்று மனமகிழ்ந்து ப்ரதிபன்னராய் இருந்தார்கள். பிள்ளைலோகாசார்யரும் இப்படி யோஜனு பேதமே யல்லது அர்த்த பேதமில்லையென்று உகந்தருளினுர். அந்த அழகிய மணவாளப் பெருமாள் நயினுர் மறுபடியும் ஸாயங்காலமானவாறே அழகிய மணவாளன் திருவோலக்கத்தில் வந்து இன்று ராத்திரியில் ஆயிரம் ச்லோகம்பண்ணினவருக்கே கவிதார்க்கிக ஸிம்ஹம் என்கிற பிருது சொல்லக் கடவதென்று சொல்ல, அழகிய மணவாளனும் ஓர் அர்ச்சகரிடத்தில் ஆவேசித்து, இன்று ராத்திரியில் 1,000 சுலோகம் செய்தவரையே கவிதார்க்கிக ஸிம்ஹம் என்று சொல்லக் கடவது என்று நியமித்தருளினுர். அழகிய மணவாளப் பெருமாள் நயினுர் 'பத கமல ஸஹஸ்ரம்' பண்ணுகிறேம் என்று சொல்லிப்போய் 300 ச்லோகம் பண்ணுவதற்குள்ளேயே பொழுந்து விடிந்தபடியினுல் திகைத்து நின்றுர். தேசிகர் 'பாதுகா ஸஹஸ்ரம்' விண்ணப்பம் செய்கிறேன் என்று திருமாளிகையில் எழுந்தருளி ப்ரதம யாமத்தில் நித்ய கைங்கர்யங்களைச் செய்தருளி, இரண்டாவது யாமத்தில் பாதுகா ஸஹஸ்ரத்தைத் தலைக்கட்டி, மூன்றும் யாமத்தில் திருக்கண் வளர்ந்தருளி, நான்காம் யாம முதல் ஜலமலவிஸர்ஜனுதிகளைச் செய்து, அழகிய மணவாளனைத் திருவடி தொழுது திருவோலக்கத்தில் நிற்க, அங்குள்ளார் வெட்கத்தினுல் வராமல் இருந்த நயினுரையும் திருவோலக்கத்திற்கு வரவழைத்து நிறுத்தி 1,000 சுலோகங்களையும் விண்ணப்பம் செய்யும்படி இருவருக்கும் அருளப் பாடிட்டருள, தேசிகர் பாதுகா ஸஹஸ்ரத்தை விண்ணப்பம் செய்தார். அழகிய மணவாளப் பெருமாள் நயினுர் ஆயிரம் தலைக்கட்டாமையாலே அதோமுகராய் இருக்க, பெருமாள் தேசிகருக்கு 'கவிதார்க்கிக ஸிம்ஹம்' என்று அருளிப் பாடிட்டருளி, வரிசைகளையும் ப்ரஸாதிக்க, தேசிகரும் வரிசைகளைப் பெற்று உள் மகிழ்ந்து, எம்பெருமானுர் திருவடி ஸம்பந்தத் துவக்கை நினைத்து நயினுர் திருஉள்ளம் உகக்கும்படி,

"ஸூதே ஸூகர யுவதீ ஸுதசதமத்யந்த துர்பகம் ஜடிதி |
கரிணீ சிராய ஸூதே ஸகல மஹீபால லாளிதம் களபம்" ||

என்று நைச்யானு ஸந்தானம் பண்ண, அதைக் கண்டு பெரியோர்களும் திருவுள்ளம் உகந்தருளினுர்கள். தேசிகர் ராமாநுஜ ஸித்தாந்தத்தில் ஒருவரும் அஸூயையாலே கெடலாகாது என்று திருவுள்ளம் பற்றி,

"ஆபாதசூட மநபாயினி தர்சநேஸ்மிந்
ஆசா ஸதீய மபரம் ந விபக்ஷ ஹேதோ: |

ஆபாத சாந்தி மதுராங் புனரஸ்மதீயாம்
அந்யோந்ய வைர ஜநநீ விஜஹாத்வஸூயா ||"
என்று விண்ணப்பம் செய்து ஸித்தாந்த ப்ரவசனம் செய்து கொண்டிருந்தார்*

[இஃது கோமடம் ஸ்ரீ ஸ்ரீநிவாஸ அய்யங்கார் ஸ்வாமியின் "ஸ்ரீ தேசிகனும்" அவருடைய ஸ்ரீ ஸூக்திகளும்" என்கிற பிரசுரத்திலிருந்து எடுக்கப்பட்டது.] என்றுள்ளது. அதன் கீழ்

* இதன் தொடர்ச்சியை கடைசியில் பார்க்கவும்

என்று துண்டுக் காகிதமொன்று ஒட்டப்பட்டிருக்கின்றது.

அந்த கடைசிப் பக்கத்திலுள்ளதாவது;—"ஸ்ரீபாதுகா ஸஹஸ்ர வ்ருத்தாந்தம்"

* [3ம் பக்கத் தொடர்ச்சி]

ஆனாலும் பதகமல ஸஹஸ்ரம் என்னும் க்ரந்தம் காணப்படாமையாலும், கீழ் க்ரந்த ஸங்க்ரஹத்தில் நிரூபிக்கப்பட்டிருக்கிறபடியே இது ஸ்வாமி அனுஸந்தித்திருப்பதுடன் விரோதிக்கிறபடியினாலும் இது உசிதமல்ல. ஆகையினால் ஸ்ரீபாதுகா ஸஹஸ்ரம்அருளிச்செய்யப்பட்ட விஷயத்தில் தத்வம்இருக்கும்படியென்னவென்றால்-

இப்படி ஸ்வாமி ப்ரஸித்த வைபவத்துடன் எழுந்தருளியிருப்பதைக்கண்டு ஸஹியாத சிலர் ஒரு ஸ்ரீ வைஷ்ணவரைத் தூண்டி, ஸ்வாமியினுடைய கவிதார்க்கிக ஸிம்மம் என்கிற பிருதை ஆக்ஷேபிக்கும்படி ஏற்பாடு செய்தார்கள். ஒரு நாள் ஸாயங்காலம் ஸ்வாமி ஸ்ரீ ரங்கநாதனை மங்களா சாஸனம் செய்தருள ஸந்நிதிக்கெழுந்தருளிக் கொண்டிருக்கும்போது அந்த ஸ்ரீ வைணவர் ஸ்வாமியை வழிமறித்துத் தன்னுடன் வாதம் செய்ய வேண்டும் என்று நிர்ப்பந்தித்தார். ஸ்வாமி "நாம் ஸித்தாந்த ஸ்தாபனார்த்தம் ஏதோ ப்ரதிவாதிகளை நிரஸித்தோமத்தனை போக்கி ஸ்ரீ வைஷ்ணவர்களுடன் வாதம் செய்ய ஒருக்காலும் ஸம்மதியோம்" என்று பதில் சொல்லிக்கொண்டே இருவரும் ஸந்நிதிக்குள் சென்றார்கள். இது இப்படி நிற்க, எம்பெருமான் "ஆழ்வார் நம்முடைய திருக்கல்யாண குணங்களை ப்ரதிபாதிக்கின்றதாய்ப் பாடிய திருவாய்மொழிக்கு ப்ரதியுபகாரமாய் ஆழ்வார் விஷயமாய் ஒன்றும் செய்திலோமே? நாம் நேரில் ஆழ்வாரை ஸ்தோத்ரம் செய்ய முடியாதே ? இதற்கு என் செய்வது" என்று ஸதா யோசித்துக் கொண்டிருந்தார். இப்போது இவர்களுடைய ஸம்வாதத்தைக் கேட்டருளி, இதுவும் ஒரு விதி வாய்த்தது என்று ஸந்தோஷம் அடைந்து தம்முடைய ஸாக்ஷாத் அவதாரமான ஸ்வாமியைக்கொண்டே ஆழ்வார் திருக்கல்யாண குணங்களை ப்ரதிபாதிக்கும் ஒரு ஸ்தோத்ரம் செய்யவேண்டும் என்று ஸங்கல்பித்து, ஸ்வாமிக்கு அன்று ஸ்ரீ சடாரி மரியாதை நடக்குங் காலத்தில் அதில் அனுப்ரவேசித்து, அர்ச்சகர் வழக்கம்போல் ஸ்ரீ சடாரியை மற்றவர்களுக்கு ஸாதிப்பதற்காக எடுக்க, அது எடுக்க வராமல் நிற்க, அவர் கொஞ்சம் யோசிக்க, "நம் விஷயமாய் ஆயிரம் சுலோகம் செய்தருளும்" என்று எம்பெருமானுடைய நியமனமாகிறது என்று ஸ்வாமியிடம் விண்ணப்பம் செய்ய, ஸ்வாமியும் "தந்யோஸ்மி" என்று இந்த நியமனத்தை சிரஸாவஹித்து அன்றிரவிலேயே ஆழ்வாருடைய விஷயமாயும், அவர் ஸாக்ஷாத்கரித்தருளின த்ரமிட வேதமாகிற திருவாய்மொழியின் விஷயமாகவும் ஆயிரம் சுலோகங்கள் அடங்கிய ஸ்ரீ பாதுகா ஸஹஸ்ரம் என்னும் ஸ்தோத்திரத்தை அருளிச் செய்து அதை மறுநாள் பெரிய பெருமாள் திருமுன்பே விண்ணப்பம் செய்தருளினர்."

ஆகஇவ்வளவோடு இச்சிறு புத்தகம் முடிக்கப்பட்டு விட்டது. இடையில் ஏழெட்டு பக்கங்களில் பாதுகாஸஹஸ்ர ச்லோகங்கள் சில உரையுடன் எடுத்தாளப்பட்டிருக்கின்றன. கடைசிப் பக்கமாக நாமெடுத்துக் காட்டியுள்ள விஷயங்கொண்ட துண்டு காகிதம் எல்லாப் புத்தகங்களிலும் ஒட்டப்படவில்லை யென்றும் சிலர்க்குமட்டும்

ஒட்டிக் கொடுக்கப்பட்டதென்றும் உண்மை தெரியவந்தது. இந்த க்ருத்ரிம நாடகத்தினுல் இவர்கள் ஸாதிக்க நினைப்பது என்னுேஅறியோம். இவர்கள் ஆரம்பத்தில் எழுதிய பாதுகா ஸஹஸ்ர விருத்தாந்தம் தவறு என்று தங்களுக்குத் தெரிய வந்ததாகக் கடைசிப் பக்கத்தில் காட்டிக்கொள்வதாக பாவனை. தவறு என்று கிரஹித்தவுடனே இவர்கள் செய்யவேண்டிய காரியமென்ன? தாங்கள் அச்சிட்ட சிறுபுத்தகத்தைக் கிழித்தெறிந்துவிட்டு வாளாகிடப்பதுதவிர வேறுகாரியமுண்டோ?

இந்த விஷம சேஷ்டையைப்பற்றி நாம் நம்முடைய முப்பதாவது வயதிலிருந்து வடமொழி தென்மொழி நூல்கள் பல எழுதி வெளியிட்டிருக்கிறேம். நமது நண பரும், கூடியமட்டில் ருஜு மார்க்கத்திற் செல்லவேணு மென்னும் விருப்பமுடைய வருமான ஸ்ரீ உவே. உப்பிலியப்பன் ஸன்னிதி நவநீதம் ஸ்ரீ ராமதேசிகாசாரியர் நம்முடைய லிகிதங்களை ஆராய்ந்து எழுதியிருப்பவை உலகம் பரவியுள்ளன. அதைப் பற்றி நம்முடைய தேசிக சரித்திரத்தில் நாமெழுதியுள்ளவற்றை இங்கும் எடுத்துக் காட்டுவோம். "ஸமீபத்தில் அவர் பதிப்பித்து வெளியிட்ட ஸ்ரீமத் ரஹஸ்யத்ரய ஸார மூலப் பதிப்பில் "ஸ்ரீ தேசிக சரித்திரம் பல்வேறு பதிப்புகளில் வெளிவந் துள்ளது. அவற்றில் நிகழ்ச்சிமுறை, நடந்த இடம், காலம் முதலியவற்றில் சிறிது வேறுபாடு காணப்படுவது உண்மையே" என்று உள்ளபடியெழுதி வெளியிட்டுள்ளார். "வேறுபாடு காணப்படுகிறது" என்றெழுதாமல் "வேறுபாடு காணப்படுவது உண்மையே" என்றெழுதியிருப்பதை நிருபகர்கள் விமர்சிக்கவேணும். எதனுல் அவர் அப்படியெழுத நேர்ந்ததென்றுல், அவர் 1944-ஆம் வருஷத்தில் வெளியிட்ட தேசிகப் பிரபந்தவுரையில் ஒரு அட்வகேட் தேசிக சரித்திரமெழுதுகிற வியாஜமாகப் பூருவாசாரியர்களை தூஷித்திருந்தது காரணமாகவே விவாத நூல்கள் வளரத் தொடங்கினவென்பதை நாம் பலகால் பிரசுரித்திருக்கிறேம். உண்மையில் அந்த அதர்க்கணச் செயல்தான் விவாத வளர்ச்சிக்குக் காரணம். மேலே குறித்த நவநீதம் நண்பர் இதை நன்கு தெரிந்துகொண்டதனுல் உண்மையை இசைந்துகொள்வதுதான் உரியதென்று கொண்டு அங்ஙனம் எழுதினர். அவ்வளவேயுமன்றிக்கே, மேலே சரித்திரத்தில் பாதுகாஸஹஸ்ர மவதரித்ததைப் பற்றி யெழுதுகையில் நவீனர்களின் கற்பனைக் கதைகளையும் அட்வகேட் கற்பனைக் கதையையும் அறவே யொழித்து, நாம் பலகால் தெரிவித்திருந்த உண்மையைத் தழுவி உள்ளவாறெழுதியுள்ளார். அவரும் ஸங்கேதபீதியினுல் சில விஷயங்களை மட்டும் மாறுபாடாக எழுதியிருந்தாலும் பெரும் பாலும் பிராமாணிக வழியில் சென்றிருக்கிறுர்." என்றெழுதி வெளியிட்டிருக்கிறேம்.

தற்காலம் வெளிவந்துள்ள சிறு புத்தகத்தில் ஸ்ரீ D. T. தாதாசாரிய சிரோமணி ஏதோ உதவிபுரிந்ததாக எழுதப்பட்டிருக்கின்றதல்லவா? அந்த தாதாசாரியர் பாதுகாஸஹஸ்ரவுரை யெழுத ஆரம்பித்தபோது நமது அம்ருதலஹரியின் மூலமாக வெளிவந்திருக்கும் நூலில் ஏகதேசம் இங்கெடுத்துக் காட்டப்படுகிறது.

"ஸ்வாமி தேசிகனருளிச் செய்த பாதுகாஸஹஸ்ரத்திற்கு ஆச்சரியமான தமிழுரை வெளிவரப்போகிறதென்று நெடு நாளாகப் பத்ரிகைகளில் விளம்பரம் வாசித்து வந்தோம். மிகுந்த ஆவலோடும் எதிர்பார்த்திருந்தோம். சில ஏடுகள் கொண்ட முதல் ஸஞ்சிகையை இன்று வரவேற்றுக் காணப் பெற்றேம். மிகச் சிறந்த காகிதத்தில் வெகு ஸுந்தரமான லிபியில் அச்சிடப்பட்டு வருகிறதென்பதற்கு மிக மகிழ்கிறேம். உண்மையில், தேசிகனுடைய திவ்யக்ரந்தங்களுள் பாதுகாஸஹஸ்ரம் அத்விதீயமானதென்பது யாவரு மிசைந்த விஷயம். இப்படிப் பட்ட ஸர்வோத்தமமான தொரு க்ரந்தத்திற்கு ஏற்கெனவே வடமொழியிலும் தென் மொழியிலும் அழகிய வியாக்கியானங்கள் வெளிவந்திருக்கின்றன. அவற்றில் அத்ருப்தியுண்டாகிப் புதிதாக வுரை யெழுத விரும்புதல் அயுக்தமாகாது. அங்ஙனம் புதியவுரை யெழுதப்புகுமவர் எப்படிப்பட்டவரா யிருக்க வேண்டுமென்றுல், தேசிக

னிடத்தில் உண்மையான பக்தியோடு கூடியவராயும், தேசிக திவ்யஸூக்திகளில் ஹார்தமான ப்ராவண்யமுடையவராகவும் அவற்றில் பரிபூர்ணமானப்ரவேசமுடையவராயும், ஆசார்ய பரம்பரையிற் படிந்து ருஜுவான அர்த்தங்களைக் கேட்டவராயும் இருத்தல் வேண்டும். அன்னவரெழுது முறையினுல் தான் பேரின்ப வெள்ளம் பெருகும். மேலே காட்டிய விசேஷணங்களுக்கு ப்ரதிகோடியான தன்மைகள் அமைந்த வொரு வ்யக்தியைக் கொண்டு இவ்வுரை எழுதுவிக்கப்படுகின்ற தென்பதை விளம்பரத்தில் கண்டபோதே இது நிரர்த்தகமான ப்ரயாஸம்' என்று பலரும் வருந்திப் பேச நேர்ந்தது. அந்தப் பேச்சு இப்போது திண்ணமாய் விட்டது. ப்ரயாஸம் நிஷ்ப்ரயோஜநமென்பது மட்டுமல்ல; விபரீத ப்ரயோஜநமுமாகிறது."

"ஒரு சிறந்த நூலுக்கு வியாக்கியானமியற்றப் புகுந்தால் இந்நூல் எதற்காக அவதரித்தது? எங்ஙனே யவதரித்தது? இதன் பெருமை எப்படிப்பட்டது—இத்யாதிகளை ஸம்க்ஷேபமாகவாவது காட்டி அவதாரிகை யெழுத வேண்டும். அவதாரிகையில்லாத வியாக்யானம் எங்கும் கண்டதில்லை. இவ்வுரையில் அவதாரிகை யென்பது எள்ளளவும் கிடையாது. தொடங்கும்போதே ச்லோகமும் பதவுரையுமே யுள்ளது. இந்த பாதுகாஸஹஸ்ரத்திற்கு ஏற்கெனவே வியாக்யானம் செய்துள்ளவர்களும், ப்ராமாணிகர்களாய் தேசிக சரித்திர மெழுதினவர்களும் இந்த ஸஹஸ்ரம் அவதரித்ததைப் பற்றி ப்ராமாணிகமான அவதாரிகை எழுதியிருக்கிருர்கள்; அதற்கு நேர் விபரீதமான கட்டுக்கதையை நவீநர்கள் எழுதிப் பரிபவமடைந்தொழிந்ததனுல் அந்த கட்டுக்கதையை அவதாரிகையாகத் தாமும் எழுதி வைக்க இஷ்டப்படாமையாலும், பூர்வ வ்யாக்யாதாக்கள் எழுதின ப்ராமாணிகமான அவதாரிகையை இவர் தாமும் எழுதி வைத்தால் அது ஸூத்ய ஸங்கேத விருத்தமாகுமாதலாலும் ஒரு விதமான அவதாரிகையும் எழுதாமலே போவது நலமென்று கருதி (இவ்வுரைகாரர்) அவதாரிகை யெழுதும் பணியில் கைவைத்திலர் போலும் என்று நினைப்பதற்கு இடமில்லை. ஏனென்ருல், அந்த அஸம்பத்த கதையை இவ்வுரைகாரர் ஆரம்பத்தில் எழுதவில்லையே யொழிய ஏழாவது ச்லோகம், எட்டாவது ச்லோகம் இவற்றின் உரையில் விரிவாகவே யெழுதியுள்ளார். 'இடையில் ஒரு மூலையில் எழுதியிருப்பதை யார் பார்க்கப் போகிருர்!' என்று எண்ணினர் போலும். இதைப் பற்றி விசதமாக விளம்புவோம்."

"பாதுகாஸஹஸ்ரத்தின் அவதாரத்தைப்பற்றி—"தேசிகனிடம் பொருமை கொண்டவருள் ஒருவரான அழகிய மணவாளப் பெருமாள் நாயனர் இவருடன் போட்டியிட்டதின் பலனக ஸ்வாமியிடமிருந்து ஸ்ரீபாதுகாஸஹஸ்ரமென்ற க்ரந்தம் தோன்றியது" என்று. இஃது இருளும் மருளும் வடிவெடுத்த வார்த்தை. அழகிய மணவாளப் பெருமாள் நாயனுரென்பவர் பிள்ளைலோகாசார்யருடைய திருத்தம்பியார்; வடக்குத் திருவீதிபபிள்ளையின் திருக்குமாரர். ஆசார்ய ஹ்ருதயம், அருளிச்செயல் ரஹஸ்யம், திருப்பாவையாருயிரப்படி முதலான திவ்ய க்ரந்தங்களை யருளிச் செய்தவர். இவர் தேசிகனேடு போட்டியிட்டாரென்று நெஞ்சால் நினைப்பதும் மஹாபசாரம். பரமஸாத்விகப்ரக்ருதிகளென்று தங்களுடைய திவ்ய க்ரந்தங்களினுல் வெளியிட்டுக் கொண்டு, பகவத் குணநுபவைக நிஷ்ணதர்களாயிருந்த மஹாசார்யர்களை வலுவில் பிடித்திழுத்து நிந்திப்பது நீதிநெறி நிற்பார் பணியன்று. ...... அட்வகேட் கோஷ்டியில் சேர்ந்தவர்கள் பலர் பாதுகாஸஹஸ்ரம் அவதரித்த காரணத்தை யெழுதியுள்ளார்கள். ஒருவர் எழுதின ரீதியைப் பின்பற்றி மற்றொருவர் எழுதுவதென்பது அடியோடு கிடையாது. ஒவ்வொருவரும் ஒவ்வொருவிதமாக எழுதிவைத்திருக்கிற படியைப் பார்க்கவேணும். இவ்விஷயத்தில் ப்ராசீனர்கள் எவ்விதமாக எழுதியிருக்கிருர்களென்பதையும் பார்க்கவேணும். இவர்கள் தங்களைத் தாங்களே பரஸ்பரம் கண்டித்துக் கொள்ளுகிருர்களென்பதே நன்கு தேறுகிறது. பாம்பே நிர்ணயஸாகர காவ்யமாலை ஸீரீஸில் வியாக்கியானத்தோடு பதிப்பிக்கப்பட்ட பாதுகா ஸஹஸ்ரத்

திற்கு—காஞ்சீபுரம் சாமா திருமலை தாதாசாரியர் சேர்த்திருக்கிற பூமிகையில் வாதி கேஸரி யென்பவர் தாம் பெற்றிருந்த வாதிகேஸரி விருது காரணமாக செருக்கினாலும் மருந்தில்லாத வியாதியான அஸூயையினாலும் கவித்வ விஷயத்தில் போட்டியிட்டதனால் பாதுகாஸஹஸ்ரம் தோன்றியதென்று எழுதியுள்ளார். வாதிகேஸரி யென்பவர் பிள்ளை லோகாசார்யர் திருத் தம்பியாரான அழகிய மணவாளப் பெருமாள் நாயனாரல்லர்—அவர் உத்தமாச்ரமி. அழகிய மணவாளச் சீயரென்னுமிவர் திருவாய்மொழிக்குப் பன்னீராயிரவுரை, தத்வதீப தீப ப்ரகாசம் முதலிய நூல்களை யிட்டவர். அவர் தேசிகனைவிட பதினேழு வயது பெரியாரென்று தெரிய வருகிறது. அவரோடுண்டான ஸ்பர்த்தையினால் பாதுகா ஸஹஸ்ரம் தோன்றியதாக அந்தத் திருமலை தாதாசாரிய ரெழுதினர். ந்யாய பரிசுத்திக்கு பூமிகை யெழுதின திருவஹீந்திரபுரம் சதாவதானி ஸ்ரீநிவாஸாசாரியரும் அதைப்பார்த்து அப்படியே யெழுதி வைத்தார். அட்வகேட் ஐயங்கார் அவ்வாசிரியரை விட்டு அழகிய மணவாளப் பெருமாள் நாயனார் தாம் ஸ்பர்த்தையிட்டதாக எழுதினார். இவரைப் பார்த்து D. T. முதலான மற்றையோர்களும் இப்படியே எழுதி வருகிறார்கள். நவீனச் சண்டைகளில் தலையிடாத முன்னோர்கள் எவ்விதமாக எழுதியுள்ளார்களென்று பார்க்கவேணும். ப்ராமாணிகமென்று பலகால் விவரிக்கப்பட்ட ஆசார்ய சம்புவில் பாதுகா ஸஹஸ்ரம் யாருக்காகப் பணித்தாரென்பதை உள்ளபடி சொல்லியிருக்கிறார். நவீந கல்பிதமான வைபவ ப்ரகாசிகையிலும் (ச்லோ. 114) * ஸம்ப்ரார்த்திதஸ்ஸம்ஸதி ஸூரிவர்யை: பாதாவநீம் ரங்கபதேர் நிசாயாம் * என்று வித்வான்களின் வேண்டுகோளுக் கிணங்கிப் பாதுகா ஸஹஸ்ர மருளிச் செய்தாரென்று சொல்லிற்றே யொழிய வேறில்லை."

"யாரோவொரு ஆசு கவி வந்து ஸ்பர்த்தையிட்டதன் பலனாகப் பாதுகாஸஹஸ்ரம் தோன்றிற்றென்றார் ஆசார்ய சம்பூகாரர். ஸத்துக்களின் ப்ரார்த்தனையினால் தோன்றிற்றென்றார் வைபவ ப்ரகாசிகாகாரர். ஸ்ரீவரவரமுநி ஸம்ப்ரதாயத்திலிருந்து மாறுபட்டு தேசிக ஸம்ப்ரதாயத்திற்கு வந்து சேர்ந்ததாகப் பிறரால் எழுதப் பெற்ற பாரத்வாஜ ஸ்ரீநிவாஸாசார்யரென்பவர் பாதுகாஸஹஸ்ரத்திற்கு வ்யாக்க்யான கர்த்தா; அவர் எவ்விதமாக எழுதி வைத்திருக்கிறாரென்னில்; அந்த வியாக்கியான ஆரம்பத்தில் *रङ्गास्थानीरसिकपरिषत्प्रेरणां प्राप्य शौरेः पादावन्याः स्तुतिमकृत यो यस्सहस्रेण पद्यैः* என்கிற ச்லோகத்தை முன்னமெழுதிவிட்டு உடனே வசனமாக "श्रीमान् वेङ्कटनाथो गुरुर्भगवतो रङ्गनाथस्य दिव्यास्थानरसिकैर्भागवतैरभ्यनुज्ञातपादुकास्तुतिः पादुकासहस्रं नाम काव्यं प्रणिनाय" என்றெழுதியுள்ளார். ஸ்ரீரங்கத்திலிருந்த ரஸிகர்கள் ப்ரேரணை பண்ண அதன்மேல் பாதுகாஸஹஸ்ர மருளிச்செய்ததாக ச்லோகத்திலுள்ளது; அந்த ரஸிகர்களின் அநுஜ்ஞையைக் கொண்டு அது அருளிச்செய்ததாக கத்யத்திலுள்ளது. ப்ரேரணையும் அநுஜ்ஞையும் பர்யாயமன்று. ஒரு காரியத்தில் ப்ரவர்த்திக்கச் செய்வது ப்ரேரணை. ஸ்வயம் ப்ரவ்ருத்தரானவரை அநுமோதிப்பது அநுஜ்ஞை. இது ஸம்ஸ்க்ருதஜ்ஞர்களின் கோஷ்டியில் நிர்விவாதமான விஷயம். இதை எப்படியாவது பொருந்தவிட்டுக் கொள்வோம். ப்ரயாஸமொன்றுமில்லை. யாரும் போட்டியிட்டது கிடையாதென்றும், தேசிகன் தாமே தமது கைங்கரியமாகப் பாதுகா ஸஹஸ்ரமியற்றியருளத் தொடங்கினார்; அதை மஹான்கள் ஆமோதித்தார்கள்—என்றும் இவ்வளவே தத்துவமாய் முடியும். இது தேசிகனுடைய ஸொந்த ஸ்ரீஸூக்திக்கும் பொருந்தும்; (அதாவது) பாதுகாஸஹஸ்ரத்தினுள்ளேயே நாதபத்ததியில் (41) * प्रख्यातानां परिषदि सतां कारयित्वा प्रतिज्ञाम् * என்றொரு ச்லோகமுள்ளது. இதனால் தேசிகன் தாமே ப்ரஸித்தர்களான ஸத்துக்களின் முன்னிலையில் ஆயிரம் சுலோகம்

செய்வதாக ப்ரதிஜ்ஞை செய்து இந்த ஸ்துதியை இயற்றினதாக ஸ்பஷ்டமாகிறது. இவ்விடத்து வியாக்கியானத்திலாவது முன்னோர்கள் ஏதாவது எழுதியிருக்க வேண்டுமே, ஐதிஹ்யமிருந்தால் எழுதாது விட்டிருப்பார்களோ? எந்த விதத்திலாவது மஹாசார்யர்களைப் பிடித்திழுத்து அவர்களுக்கு ஓர் அவத்யம் இட்டு வைக்கவேணும் என்கிற கடு நினைவுதான் இந்த கோஷ்டியார்களுக்குள்ளது. அன்னவர்களில் தலை நின்றவர் அட்வகேட் ஐயங்கார் என்றும், இவர்க்குத் தாளம் போடுகிறவர் D. T. ஐயங்காரென்றும் தெரிகிறது."

"இவர்களுடைய கோஷ்டியில் நெடுநாளாகவே ஒரு பழக்கமுள்ளது; (அதாவது) இப்படி அஸம்பத்தமான கதைகளைக் கைபோனபடி யெழுதிவைப்பது; அது ஸர்வாத்மனா அஸங்கதமென்று நிபுண நிரூபணம் வெளிவந்தால் வாய்திறவாமல் வாளா கிடப்பது; மற்றொரு காலத்தில் வேறொருவர் அந்த அஸம்பத்த கதையையே பிரசுரம் செய்யத் தொடங்குவது, புநர் முத்ரணம் பண்ணுவது; சில பாமரர்களாவது வஞ்சிக்கப்பட்டு இதையே பரமார்த்தமென்று கொள்ளட்டுமே யென்று கருதுவது ......இப்படியாக இந்த கோஷ்டியார் பழகிவருகிறார்கள். இதெல்லாம் இவர்கள் தேசிகனோடு புதியவுறவு கொண்டாடத் தொடங்கின காலத்திலிருந்தே தோன்றிய தடுமாற்றங்களென்று திண்ணமாகவெண்ணுவர் தீர்க்கதரிசிகள்."

முக்கியமாக ஒரு வார்த்தை. உபபத்திகளோடு கூடிய ப்ராமாணிகார்த்தங்களை எவ்வளவு காட்டினாலும் அந்தர்களாகவே யிருந்துவிட்டுத் தங்கள் திரளில் கற்பனை செய்து வைத்துக்கொண்டிருக்கிற தப்புக் கதைகளையே மாறி மாறி யெழுதி வெளியிட்டுக்கொண்டு பரிபவங்களையும் அப்போதைக்கப்போது புதுப்பித்துக்கொள்ளுமிவர்கள் இவ்வுலகுக்கு ஒருவாறு மஹோபகாரகர்களே யென்னத் தட்டில்லை.

நிகமபரிமலம். ஹரிதிநதிலகம். தத்வவ்யாக்க்யா. தேசிகன் ஸாதித்தருளின திவ்யக்ரந்தங்களுக்கு அட்டவணை கொடுக்கப்பட்டிருக்கிறது இச்சிறுநூலில். நிகமபரிமலத்தின் உண்மையைப்பற்றிப் பலகாலும் எழுதியாயிற்று. உண்மையில் அந்த க்ரந்தம் ஸ்வாமி ஸாதித்ததாக இருந்தால் அது பெரியவாச்சான்பிள்ளை யருளிச் செய்த இருபத்துநாலாயிரப்படிக்கு விவரணமாகவே அருளிச் செய்யப்பட்டிருக்குமென்பதில் ஐயுறவேண்டா. ஸ்வாமியின் த்ரமிடோபநிஷத் தாத்பர்ய ரத்நாவளியும், த்ரமிடோபநிஷத்ஸாரமும் 24000 படியையே அடியொற்றி யருளிச்செய்யப்பட்டுள்ளதென்பதைப் பலநூல்களில் நாம் ஸுஸ்பஷ்டமாக விவரித்திருக்கிறோமாதலால் வேறு விதமாக அந்த க்ரந்தம் அவதரிக்க வழியேயில்லை. ஹரிதிந திலகம் ஒரு நவீந பண்டிதர் இயற்றியதென்று திருக்குடந்தை வித்வான்கள் பண்டே ஸப்ரமாணமாக நிரூபித்து வெளியிட்டிருப்பதை இனியாகிலும் இவர்கள் விசாரித்து உணருதல் நன்று. தத்வ வ்யாக்க்யா என்றொரு க்ரந்தம் ஸ்வாமி ஸாதித்ததாக இந்த சதாப்தியில் இதம் ப்ரதமமாக வெளிவருகிறது. 'தத்வ்யாக்க்யா' என்று நாமமெழுதியிருந்ததை (S. S.) ஸம்ஸ்க்ருதஜ்ஞாநஹீநதையாலே மருண்டு இப்படி வெளியிட்டிருக்கவுங் கூடும். கோமடமையங்காருடைய திருப்பணி போலுமிது. கிம்க்ருஹேசஸ்துதியை இந்தப் பட்டியில் விட்டிட்ட காரணமென்னோ அறியோம்.

## ஸமஸ்யா ஸஹஸ்ரீ.

மேலே குறித்த பட்டியில் 'ஸமஸ்யா ஸஹஸ்ரீ' என்றொரு க்ரந்தம் தேசிகன் ஸாதித்ததாகக் குறித்திருப்பதைக் கண்டு விலவறச் சிரித்திட்டோம். திருவயிந்திரபுரத்திலிருந்த சேட்லூரையங்காரென்பவர் இப்படியெல்லாம் அஸம்பத்தமாகவெழுதி வெளியிட்டு அநுதாபக்கடிதத்தோடே முடிந்தசெய்தி ஜகத்ப்ரஸித்தம். அதெல்லாம் இப்போது புதுப்பிக்கப்படுகிறது போலும். ஸ்வாமி தேசிகன் ஸ்தோத்ர

பாஷ்யத்தின் முடிவில் தம்மைப்பற்றி யிட்டருளின வொரு ச்லோகத்தில் "அகணி ஸதஸி ஸத்பிர் யஸ் ஸமஸ்யா ஸஹஸ்ரீ கவி கதக ம்ருகேந்த்ரஸ் ஸர்வ தந்த்ர ஸ்வதந்த்ர:" என்று ஸாதித்திருக்கிருர். ஸதஸ்ஸில் வித்வான்கள் தம்மை ஸமஸ்யாஸஹஸ்ரி யென்று புகழ்ந்ததாக இதில் தெரிவிக்கப்பட்டது. "யஸ்ய ஷஷ்டி சதுர்த்தீஸ்யாத் விஹஸ்ய ச விஹாய ச, அஹம் கதம் த்விதியா ஸ்யாத்" என்ற தற்கு லக்ஷ்யபூதராயிருந்த அந்த சேட்லூரையங்கார் ஸமஸ்யாஸஹஸ்ரியென்று ஒரு க்ரந்தம் தேசிகனருளிச்செய்ததாக எழுதி வைத்திட்டார். அந்தோ! அறைகுறை ஞானம் படுத்தின பாடிது. இது இபிப்ரத்யயாந்தமான பும்லிங்க சப்தம். தேசிக னுக்கு விசேஷணமாக அந்வயிப்பது. இது க்ரந்தத்தின் பெயராக இருந்தால் பாதுகாஸஹஸ்ரம், லக்ஷ்மீஸஹஸ்ரம் என்றாப்போலேயிருக்குமத்தனை. வடமொழி வாஸனை யறியாதார்க்கு இதை நாம் உரைப்பது ஸத்யம் லஜ்ஜாஸ்பதம்.

உபாயஸ் ஸ்வப்ராப்தேருபநிஷததீதஸ் ஸ பகவான்=பிள்ளை லோகாசாரியர் தடுத்தும் கேளாமல் அழகியமணவாளப் பெருமாள்நாயனார் தேசிகனோடு சண்டை யிட்டாரென்றெழுதிய ககநாரவிந்த கதையில், தேசிகன் * உபாயஸ் ஸ்வப்ராப்தே ரித்யாதியான ரஹஸ்யத்ரய ஸாரச்லோகத்தை உபந்யஸித்து வெற்றிபெற்று நாய னாரை வாய்மாளப் பண்ணிவிட்டதாக எழுதப்படுகிறது. தேசிகன் ஸ்ரீவசநபூஷ ணத்தையும் ஆசார்யஹ்ருதயத்தையும் அநவரதம் சிந்தனைசெய்து அவற்றின் ஸாராம்ருதமாக அருளிச்செய்த சுலோகமிது. மேலெடுத்த சுலோகத்தின் கடைசிப் பாதம் "நிதாநம் தத்ராபி ஸ்வயமகில நிர்மாண நிபுண:" என்பது. "நிதாநம் த்வாதி காரணம்" என்று அமரம். "சேதநப்ரவ்ருத்திகளுக்கெல்லாம் மூலகாரணம் ஸர்வேச் வரனேதான்" என்று வெட்டொன்று துண்டிரண்டாக முடித்திட்டார் தேசிகன். "ஸ்ருஷ்ட்யவதாராதிமுகத்தாலே பண்ணின க்ருஷிபலம்" என்கிற பிள்ளை லோகாசார்யருடைய ஸ்ரீஸூக்தியையும், "வரவாறில்லை வெறிதே யென்றறுதி யிட்டபின் வாழ்முதலென்கிற ஸுக்ருத மொழியக் கற்பிக்கலாவதில்லை" என்கிற ஆசார்ய ஹ்ருதய ஸ்ரீஸூக்தியையும் பிண்டீகரித்து அவதரித்ததன்றோ * உபாயஸ் ஸ்வப்ராப்தேரித்யாதி தேசிக திவ்யஸூக்தி. கிம்பஹுநா? தேசிக ஸ்ரீஸூக்திகள் பெரும்பாலும் நம்பிள்ளை பெரியவாச்சான்பிள்ளை பிள்ளைலோகாசார்யர் அழகிய மணவாளப் பெருமாள் நாயனார் ஆகிற இப்பரமாசாரியர்களின் திவ்யஸூக்திகளையே ஜீவாதுவாகக் கொண்டு அவதரித்தவை என்பதை தேசிகஹ்ருதயமென்கிற க்ரந்தத் தில் பரக்க நிரூபித்திருக்கிறோம். அதை உலகம் பார்த்தேயிருக்கின்றது. பாராத வர்கள் நமக்கெழுதிப் பெற்றுப் பார்த்துத் தெளியக் கடவர்கள். ... *

நமது இந்த வியாஸத்தின் தலையிலே *ஏதுக்கிதுவென் இதுவென் இதுவென்னோ* என்று நாம் மகுடமிட்டிருக்கிறோம். அதைப் பற்றிச் சிறிது கேளீர்;—

திருமங்கையாழ்வாருடைய பெரிய திருமொழியில் (10-8.) *காதில் கடிப்பிட்டு* என்கிற பதிகம் * அல்லிக் கமலக் கண்ணனை கண்ணபெருமானை நோக்கி ஓர் ஆய்ச்சி ஊடல் திறத்துப் பேசின பாசுரமாகப் பணித்தருளப்பட்டது. பாட்டுத் தோறும் "ஏதுக்கிது வென் இதுவென் இதுவென்னோ!" என்பது ஆச்சரியமான வார்த்தை. நம்பெருமாள் ஸன்னிதியில் பகற்பத்து சாத்துமுறையினன்று அரையர் கள் இத் திருமொழி ஸேவிக்கும் போது, அதிலும் ஈற்றடி ஸேவிக்கும் போது கேட்கக் காதாயிரம் வேண்டியிருக்கும். அடியேனுடைய திவ்யார்த்த தீபிகை யுரையில் 35 ஆண்டுகட்கு முன்பு இவ்விடத்தெழுதியுள்ள முடிவு பகுதியை மட்டும் இங்கெடுத்துக் காட்ட விரும்புகிறேன். (அது வருமாறு:)—

"இவன்தான் கால தாமதஞ் செய்து வந்தான் ஆகையாலே * த்ருடி யுகாயதே த்வாம் அபச்யதாம் * என்றும் * ஒரு பகலாயிர மூழியாலோ * என்றும் சொல்லும்படியாக விருக்கிற. அவ் வாய்ச்சி ஆதரித்து முகங் கொடுத்து வார்த்தை

செய்வதாக ப்ரதிஜ்ஞை செய்து இந்த ஸ்துதியை இயற்றினதாக ஸ்பஷ்டமாகிறது. இவ்விடத்து வியாக்கியானத்திலாவது முன்னோர்கள் ஏதாவது எழுதியிருக்க வேண்டுமே, ஐதிஹ்யமிருந்தால் எழுதாது விட்டிருப்பார்களோ? எந்த விதத்திலாவது மஹாசார்யர்களைப் பிடித்திழுத்து அவர்களுக்கு ஓர் அவத்யம் இட்டு வைக்கவேணும் என்கிற கடு நினைவுதான் இந்த கோஷ்டியார்களுக்குள்ளது. அன்னவர்களில் தலை நின்றவர் அட்வகேட் ஐயங்கார் என்றும், இவர்க்குத் தாளம் போடுகிறவர் D. T. ஐயங்காரென்றும் தெரிகிறது."

"இவர்களுடைய கோஷ்டியில் நெடுநாளாகவே ஒரு பழக்கமுள்ளது; (அதாவது) இப்படி அஸம்பத்தமான கதைகளைக் கைபோனபடி யெழுதிவைப்பது; அது ஸர்வாத்மநா அஸங்கதமென்று நிபுண நிரூபணம் வெளிவந்தால் வாய்திறவாமல் வாளா கிடப்பது; மற்றொரு காலத்தில் வேறொருவர் அந்த அஸம்பத்த கதையையே பிரசுரம் செய்யத் தொடங்குவது, புநர் முத்ரணம் பண்ணுவது; சில பாமரர்களாவது வஞ்சிக்கப்பட்டு இதையே பரமார்த்தமென்று கொள்ளட்டுமே யென்று கருதுவது ......இப்படியாக இந்த கோஷ்டியார் பழகிவருகிறார்கள். இதெல்லாம் இவர்கள் தேசிகனோடு புதியவுறவு கொண்டாடத் தொடங்கின காலத்திலிருந்தே தோன்றிய தடுமாற்றங்களென்று திண்ணமாகவெண்ணுவர் தீர்க்கதரிசிகள்."

முக்கியமாக ஒரு வார்த்தை. உபபத்திகளோடு கூடிய ப்ராமாணிகார்த்தங்களை எவ்வளவு காட்டினாலும் அந்தர்களாகவே யிருந்துவிட்டுத் தங்கள் திரளில் கற்பனை செய்து வைத்துக்கொண்டிருக்கிற தப்புக் கதைகளையே மாறி மாறி யெழுதி வெளியிட்டுக்கொண்டு பரிபவங்களையும் அப்போதைக்கப்போது புதுப்பித்துக்கொள்ளுமிவர்கள் இவ்வுலகுக்கு ஒருவாறு மஹோபகாரகர்களே யென்னத் தட்டில்லை.

நிகமபரிமலம். ஹரிதிநதிலகம். தத்வவ்யாக்க்யா. தேசிகன் ஸாதித்தருளின திவ்யக்ரந்தங்களுக்கு அட்டவணை கொடுக்கப்பட்டிருக்கிறது இச்சிறுநூலில். நிகமபரிமலத்தின் உண்மையைப்பற்றிப் பலகாலும் எழுதியாயிற்று. உண்மையில் அந்த க்ரந்தம் ஸ்வாமி ஸாதித்ததாக இருந்தால் அது பெரியவாச்சான்பிள்ளை யருளிச்செய்த இருபத்துநாலாயிரப்படிக்கு விவரணமாகவே அருளிச் செய்யப்பட்டிருக்குமென்பதில் ஐயுறவேண்டா. ஸ்வாமியின் த்ரமிடோபநிஷத் தாத்பர்ய ரத்நாவளியும், த்ரமிடோபநிஷத்ஸாரமும் 24000 படியையே அடியொற்றி யருளிச்செய்யப்பட்டுள்ள தென்பதைப் பலநூல்களில் நாம் ஸுஸ்பஷ்டமாக விவரித்திருக்கிறோமாதலால் வேறு விதமாக அந்த க்ரந்தம் அவதரிக்க வழியேயில்லை. ஹரிதிந திலகம் ஒரு நவீந பண்டிதர் இயற்றியதென்று திருக்குடந்தை வித்வான்கள் பண்டே ஸப்ரமாணமாக நிரூபித்து வெளியிட்டிருப்பதை இனியாகிலும் இவர்கள் விசாரித்து உணருதல் நன்று. தத்வ வ்யாக்க்யா என்றொரு க்ரந்தம் ஸ்வாமி ஸாதித்ததாக இந்த சதாப்தியில் இதம் ப்ரதமமாக வெளிவருகிறது. 'தத்வ்யாக்க்யா' என்று நாமெழுதியிருந்ததை (S. S.) ஸம்ஸ்க்ருதஜ்ஞாநஹீநதையாலே மருண்டு இப்படி வெளியிட்டிருக்கவுங்கூடும். கோமடமையங்காருடைய திருப்பணி போதுமிது. கிம்க்ருஹேசஸ்துதியை இந்தப் பட்டியில் விட்டிட்ட காரணமென்னோ அறியோம்.

## ஸமஸ்யா ஸஹஸ்ரீ.

மேலே குறித்த பட்டியில் 'ஸமஸ்யா ஸஹஸ்ரீ' என்றொரு க்ரந்தம் தேசிகன் ஸாதித்ததாகக் குறித்திருப்பதைக் கண்டு விலவறச் சிரித்திட்டோம். திருவயிந்திரபுரத்திலிருந்த சேட்லூரையங்காரென்பவர் இப்படியெல்லாம் அஸம்பத்தமாகவெழுதி வெளியிட்டு அநுதாபக்கடிதத்தோடே முடிந்தசெய்தி ஜகத்ப்ரஸித்தம். அதெல்லாம் இப்போது புதுப்பிக்கப்படுகிறது போலும். ஸ்வாமி தேசிகன் ஸ்தோத்ர

பாஷ்யத்தின் முடிவில் தம்மைப்பற்றி யிட்டருளின வொரு ச்லோகத்தில் "அகணி ஸதஸி ஸத்பிர் யஸ் ஸமஸ்யா ஸஹஸ்ரீ கவி கதக ம்ருகேந்த்ரஸ் ஸர்வ தந்த்ர ஸ்வதந்த்ர:" என்று ஸாதித்திருக்கிருர். ஸதஸ்ஸில் வித்வான்கள் தம்மை ஸமஸ்யாஸஹஸ்ரி யென்று புகழ்ந்ததாக இதில் தெரிவிக்கப்பட்டது. "யஸ்ய ஷஷ்டி சதுர்த்தீஸ்யாத் விஹஸ்ய ச விஹாய ச, அஹம் கதம் த்விதீயா ஸ்யாத்" என்ற தற்கு லக்ஷ்யபூதராயிருந்த அந்த சேட்லூரையங்கார் ஸமஸ்யாஸஹஸ்ரியென்று ஒரு க்ரந்தம் தேசிகனருளிச்செய்ததாக எழுதி வைத்திட்டார். அந்தோ! அறைகுறை ஞானம் படுத்தின பாடிது. இது இஙிப்ரத்யயாந்தமான பும்லிங்க சப்தம். தேசிக னுக்கு விசேஷணமாக அந்வயிப்பது. இது க்ரந்தத்தின் பெயராக இருந்தால் பாதுகாஸஹஸ்ரம், லக்ஷ்மீஸஹஸ்ரம் என்ருப்போலேயிருக்குமத்தனை. வடமொழி வாஸனை யறியாதார்க்கு இதை நாம் உரைப்பது ஸத்யம் லஜ்ஜாஸ்பதம்.

உபாயஸ் ஸ்வப்ராப்தேருபநிஷததீதஸ் ஸ பகவான்=பிள்ளை லோகாசாரியர் தடுத்தும் கேளாமல் அழகியமணவாளப் பெருமாள்நாயனர் தேசிகனேடு சண்டை யிட்டாரென்றெழுதிய ககநாரவிந்த கதையில், தேசிகன் * உபாயஸ் ஸ்வப்ராப்தே ரித்யாதியான ரஹஸ்யத்ரய ஸாரச்லோகத்தை உபந்யஸித்து வெற்றிபெற்று நாய னரை வாய்மாளப் பண்ணிவிட்டதாக எழுதப்படுகிறது. தேசிகன் ஸ்ரீவசநபூஷ ணத்தையும் ஆசார்யஹ்ருதயத்தையும் அநவரதம் சிந்தனைசெய்து அவற்றின் ஸாராம்ருதமாக அருளிச்செய்த சுலோகமிது. மேலெடுத்த சுலோகத்தின் கடைசிப் பாதம் "நிதாநம் தத்ராபி ஸ்வயமகில நிர்மாண நிபுண:" என்பது. "நிதாநம் த்வாதி காரணம்" என்று அமரம். "சேதநப்ரவ்ருத்திகளுக்கெல்லாம் மூலகாரணம் ஸர்வேச் வரனே தான்" என்று வெட்டொன்று துண்டிரண்டாக முடித்திட்டார் தேசிகன். "ஸ்ருஷ்ட்யவதாராதிமுகத்தாலே பண்ணின க்ருஷிபலம்" என்கிற பிள்ளை லோகாசார்யருடைய ஸ்ரீஸூக்தியையும், "வரவாறில்லை வெறிதே யென்றறுதி யிட்டபின் வாழ்முதலென்கிற ஸுக்ருத மொழியக் கற்பிக்கலாவதில்லை" என்கிற ஆசார்ய ஹ்ருதய ஸ்ரீஸூக்தியையும் பிண்டீகரித்து அவதரித்ததன்றே * உபாயஸ் ஸ்வப்ராப்தேரித்யாதி தேசிக திவ்யஸூக்தி. கிம்பஹுநா? தேசிக ஸ்ரீஸூக்திகள் பெரும்பாலும் நம்பிள்ளை பெரியவாச்சான்பிள்ளை பிள்ளைலோகாசார்யர் அழகிய மணவாளப் பெருமாள் நாயனர் ஆகிற இப்பரமாசாரியர்களின் திவ்யஸூக்திகளையே ஜீவாதுவாகக் கொண்டு அவதரித்தவை என்பதை தேசிகஹ்ருதயமென்கிற க்ரந்தத் தில் பரக்க நிரூபித்திருக்கிறோம். அதை உலகம் பார்த்தேயிருக்கின்றது. பாராத வர்கள் நமக்கெழுதிப் பெற்றுப் பார்த்துத் தெளியக் கடவர்கள். ... *

நமது இந்த வியாஸத்தின் தலையிலே *ஏதுக்கிதுவென் இதுவென் இதுவென்னே* என்று நாம் மகுடமிட்டிருக்கிறோம். அதைப் பற்றிச் சிறிது கேளீர்;—

திருமங்கையாழ்வாருடைய பெரிய திருமொழியில் (10-8.) *காதில் கடிப்பிட்டு* என்கிற பதிகம் * அல்லிக் கமலக் கண்ணனை கண்ணபெருமானை நோக்கி ஓர் ஆய்ச்சி ஊடல் திறத்துப் பேசின பாசுரமாகப் பணித்தருளப்பட்டது. பாட்டுத் தோறும் "ஏதுக்கிது வென் இதுவென் இதுவென்னே!" என்பது ஆச்சரியமான வார்த்தை. நம்பெருமாள் ஸன்னிதியில் பகற்பத்து சாத்து முறையினன்று அரையர் கள் இத் திருமொழி ஸேவிக்கும் போது, அதிலும் ஈற்றடி ஸேவிக்கும் போது கேட்கக் காதாயிரம் வேண்டியிருக்கும். அடியேனுடைய திவ்யார்த்த தீபிகை யுரையில் 35 ஆண்டுகட்கு முன்பு இவ்விடத்தெழுதியுள்ள முடிவு பகுதியை மட்டும் இங்கெடுத்துக் காட்ட விரும்புகிறேன். (அது வருமாறு :)—

"இவன்தான் கால தாமதஞ் செய்து வந்தான் ஆகையாலே * த்ருடி யுகாயதே த்வாம் அபச்யதாம்* என்றும் * ஒரு பகலாயிர மூழியாலோ * என்றும் சொல்லும்படியாக விருக்கிற. அவ் வாய்ச்சி ஆதரித்து முகங் கொடுத்து வார்த்தை

சொல்ல மாட்டிற்றிலள்; அதுவே ஹேதுவாக இவனும் விரைந்து செல்ல மாட்டாதே கதவின் புறமே கவிழ்தலையிட்டு நிற்க வேண்டியவனுயினன்; அந்த நிலைமையைக் கண்டு ஆய்ச்சி "போது மறித்துப் புறமே வந்து நின்றீர் ஏதுக்கிதுவென் இதுவென் இதுவென்னே"? என்கிருள், 'காதில் கடிப்பு இட்டுக் கொண்டு வர வேண்டுகை யாலும், அரையில் கலிங்க முடுத்துக் கொண்டு வர வேண்டுகையாலும், நல்ல தண்ணந் துழாய் அணிந்து கொண்டு வர வேண்டுகையாலும் இவற்றுக்காகத் தாமதம் ஆயிற்றே யன்றி உன்னை யொழிய வேறொருத்தியிடத்தே போயிருந்தேனுய்த் தாமதித்து வந்தேனல்லேன்' என்று கண்ணபிரான் ஸூசிப்பிக்க, இதுவென்? இதுவென்? இதுவென்? என்கிருள்: அதாவது—[இதுவென்?] வெறுங்காதே பரம போக்யமாயிருக்கக் காதிலே கடிப் பிடுவானேன்? [இதுவென்?] பூணித் தொழு வினிற் புக்குப் புழுதியளைந்த பொன்மேனியைக் காணப் பெரிதும் உகப்பார் நாங்களாயிருக்கக் கலிங்க முடுத்து அத்திருமேனி யழகை மறைப்பானேன்? [இதுவென்?] 'ஸர்வகந்தஃ' என்கிற படியே திருமேனி தானே பரிமள ப்ரசுரமா யிருக்கத் திருத்துழாய்ப் பரிமளம் ஏறிடுவானேன்? இருந்தபடியே உகக்கிற எங்களுக் காக அலங்கரித்து வர வேணுமோ? என்கை. [ஏதுக்கிது?] கொடும் பசி வேளையிற் கிடையாத சோறு ஏதுக்கு? உம் மழகை நீரே கண்டு கொண்டு உம்முடம்பையும் நீரே தொட்டுக் கொண்டு நீரே மோந்து கொண்டு நீரே கட்டிக் கொண்டு நீரே மகிழ்ந் திரும்; எங்களுக்கு ஏதுக்கு? வேண்டா வேண்டாவென்று கதவடைக்கின்றுள் போலும்." [இது எமது திவ்யார்த்த தீபிகையின் ஒரு பகுதி.] இவ்வளவு இன்சுவைப் பொருள் கொண்ட சொல்தொடரை இந்த வியாஸத்தின் தலையிலேயிட்ட நாம் இந்தப் பொருள்களை விவக்ஷித்தா? அல்ல. இங்கு நாம் விவக்ஷித்த பொருள்களைக் கேளீர்.

[ஏதுக்கிது?] பாதுகா ஸஹஸ்ரத்தின் அவதாரத்தைப் பற்றித் தவறான ஐதிஹ்யத்தை யெழுதி முப்பது ஸம்வத்ஸரமாக பங்கப்பட்டும் மீண்டுமிப்போது எதற்காக இந்த ப்ரவ்ருத்தி? [இதுவென்?] தேசிகனுக்குப் பெருமை ஸாதிக்கவேணு மென்று விரும்பிச் சிறுமையையே ஸாதித்துத் தலைக்கட்டுகிற இந்த வீண் ப்ரவ்ருத்தி எதற்கு? [இதுவென்?] தேசிகன் திருவரங்கம் பெரிய கோயிலுக் கெழுந்தருளினது எந்த ஆசார்யர்களின் திருவடி ஸம்பந்தம் பெற்று உஜ்ஜீவிக்கவேணுமென்று விரும்பியோ, அந்த ஆசார்ய ஸார்வ பௌமர்களோடு போராடினரென்று கதை கட்டுவது எதற்கோ? [இதுவென்னே?] ஆசார்ய ஹ்ருதயத்திலுள்ள அர்த்தங்களே தேசிகனருளிச் செய்த அர்த்தங்களாயிருக்க, இந்தத் தத்துவ முணரமாட்டாதே அஸம்பத்த லேகனஞ் செய்வது என்னே?

சிறு புத்தகமாயிருந்தாலும் இதை யச்சிடுவதற்கு நூறுரூபாயாவது இவர்க ளுக்குச் செலவழிந்திருக்கும். இவ்வளவு செலவுசெய்து இதையச்சிடுவதற்கு ஒரு பிர யோஜனமிருக்க வேணுமே. எவ்வளவு ஆலோசித்தாலும் ஒரு பிரயோஜனமும் புலப் படவில்லையே. (Rajagopala) Raghavachari B. A. என்பவர் முன்னின்று இதை சேகரித்ததாகத் தெரியவருகிறது. Sri. D. T. Tatacharya Siromani யும், Prof. M. R. Rajagopala Iyengar M. A. யும், Gomatam Sri. S. S. Iyengar-ம் இப்பிர சுரத்திற்கு Help செய்ததாக வெழுதப்படுகிறது. எதற்கு Help என்று விளங்க வில்லை. ஒருவர் எழுதிக் கொடுத்து, மற்றொருவர் Paper வாங்கிக் கொடுத்து, இன்னொருவர் Printing charge கொடுத்து Help பண்ணினரா? இன்னர் இன்ன விதமான Help செய்தாரென்பது விளங்கவில்லையே.

ஸ்ரீதேசிக க்ருதிகளில் பாதுகா ஸஹஸ்ர மென்பது ஒப்புமுயர்வுமற்ற லோகோத்தரமான க்ருதியென்பதை மறுப்பாராருமில்லை. அதிலிருந்து சிற்சில சுலோகங்களை யெடுத்துக் கருத்துரை யெழுதி வெளியிடுவதனல் யார்க்கு என்னலாப

மாகும்? அந்தக் கருத்துரையும் வடமொழி பயின்ற ஒரு பண்டிதர் எழுதினதாகக் காணவில்லையே. "ஸந்தः ஸ்ரீரங்கப்ருத்வீச சரணத்ராண சேகராः, ஜயந்தி புவநத்ராண பத பங்கஜ ரேணவः" என்பது முதல் சுலோகம். இதன் பொருளை ஸாதாரணமாகக் காவியம் வாசித்த பிள்ளை கூட எளிதிலுணர்வன். இவர்கள் எழுதியிருப்பதாவது, "தங்கள் திருவடித் தூளிகளால் உலகங்களைக் காப்பாற்றும் வல்லமை பெற்ற பெரியோர்கள் ஸ்ரீரங்கநாதன் பாதுகைகளை தங்கள் முடியில் வகிப்பதினல் மேன்மை பொருந்தியிருக்கிறார்கள்" என்று. அந்தோ! கவிகேஸரி இப்பொருளை விவக்ஷித்தா இந்த ச்லோக ரத்னத்தை யெழுதினர். ஸ்ரீரங்கநாத பாதுகைகளை சிரஸா வஹிப்பவர்கள் ஜகத்பாவனராவர்கள் என்கிற அழகிய பொருளை விவக்ஷித்து இப்பொருள் அநாயாஸமாகக் கிடைக்கும்படி ருஜுவாகவும் லலிதமாகவும் சுலோகமருளிச் செய்திருக்க, சிரோவேஷ்டந ப்ராணுயாமஸ்மாரகமாக வொரு விரஸப் பொருளை வரைவது எதற்காகவோ? இதை மிக நன்ருக மூதலிப்போம்.

இதற்குமேல் இவர்கள் என்ன சொல்லவேண்டுமென்ருல், 'சுலோகங்களைத் திரட்டுவதும் பொருளெழுதுவதும் எங்களுக்கு உத்தேச்யமன்று; இந்த ஸஹஸ்ரம் அவதரித்ததைப்பற்றி முன்னுரை யெழுதியிருக்கிறேமே அதுதான் முக்யமாக உத்தேச்யம்' என்று சொல்லவேண்டும். அப்படியே சொல்லுவர்கள். தேசிகன் திருவடிகளில் இவர்கள் புரியும் அபசாரங்களில் இதுதான் தலையானதென்பதை சபதமிட்டுரைப்போம்.

தேசிகன் நம்பெருமாள் ஸன்னிதிக்கு எழுந்தருளினகாலத்தில் பிள்ளை லோகாசாரியர், அவருடைய திருத்தம்பியாரான அழகிய மணவாளப்பெருமாள் நாயனுர், ச்ருதப்ரகாசிகாபட்டர் முதலானுர் நம்பெருமாளை யெழுந்தருளப்பண்ணிக் கொண்டு [அபீதிஸ்தவத்தில் ஸ்வாமி ப்ரஸ்தாவித்திருக்கின்ற] மஹாவிபத்தில் சிக்கிக் கொண்டு வெளியேறியிருந்தார்கள். அவர்கள் ஜீவிதத்தோடே திருவரங்கம் வந்து சேர்ந்தார்களல்லர். ஆகவே பிள்ளை லோகாசார்யரையோ அவர் திருத்தம்பியாரான அழகிய மணவாளப்பெருமாள் நாயனுரையோ தேசிகன் ஸந்தித்தவரேயல்லர். அவ்வாசிரியர்களின் திருவடி நிழலிலே யொதுங்கி வாழவேணுமென்கிற விருப்பத்தோடே திருவரங்கம் சென்றிருந்தும் அந்த பாக்கியம் ஸ்வாமிக்கு வாய்க்கவேயில்லை. அந்தக்குறையை அபீதிஸ்தவத்திலே நன்கு காட்டியேயுள்ளார் தேசிகன். "நிரஸ்த ரிபுஸம்பவே க்வசந ரங்கமுக்க்யே விபோ! பரஸ்பர ஹிதைஷிணும் பரிஸரேஷு மாம் வர்த்தய" என்பதனுல். ஸ்ரீரங்கஸ்ரீ நிருபத்ரவமானபிறகு மேற்றிசையில் நின்றும் தேசிகன் கோயில் வந்து சேர்ந்து, ஏற்கெனவே அங்கு ஆசார்யகம் பண்ணின ஆசார்யர்களின் திருவடிஸம்பந்தம் பெற்றவர்களின் அபிமானத்திலே யொதுங்கியே வாழ்ந்துவந்தாரென்பது "ரங்கஸ்தானே ரஸிகமஹிதே ரஞ்ஜிதாசேஷசித்தே வித்வத்ஸேவா விமல மநஸா வேங்கடேசேந" என்பதனுல் ஸ்வாமிதம்மாலேயே பொறித்து வைக்கப்பட்டது. தம் மனம் முன்னே மலீமஸமாயிருந்ததென்றும், ரங்காஸ்தானம் சேர்ந்து ரஸிகவித்வத் ஸேவாபாக்யம் பெற்ற பின்பே வைமல்யமடைந்ததென்றும் ஸந்தேஹ விபர்யயமற அருளிச்செய்திருந்தும் அவ்வாசார்யர்களோடு சண்டையிட்டாரென்று ஒருவர் மாறி ஒருவராக எழுதிக் கொண்டே காலங்கழிப்பது இவ்வகுப்பினர்க்கு ஒரு போதுபோக்கா யிருக்கின்றதந்தோ! ஏதேனுமொரு மூலையில் ஒருவரிருவராவது வஞ்சிக்கப்படட்டுமேயென்பது ஒன்றேயாயிற்று இவர்களின் ஆசாமோதகம். இந்த நப்பாசையோ தப்பாசையோ நம்முடைய வாழ்நாளிலும், பிறகு ஒரு நூற்றாண்டு வரையிலும் இவர்களுக்கு நிறைவேருதென்பது திண்ணமாக எண்ணத்தக்கது.

முக்கியமாக, மிக முக்கியமாக இவர்கள் விடையிறுத்தாகவேண்டிய விஷயமொன்றை நாம் பலகால் வெளியிட்டிருக்கின்றேம். இப்போதும் வெளியிடுகின்றேம்.

ஸ்ரீவைஷ்ணவ ஸம்பிரதாயத்தில் ஸ்ரீபாஷ்யகாரர்க்கு முன்பு இருந்த ஆசாரியர்கள் ஸ்ரீமந் நாதமுனிகளும் உய்யக்கொண்டாரும் மணக்கால் நம்பியும் ஆளவந்தாரும், ஆளவந்தாருடைய திருவடிகளாய் எம்பெருமானார்க்கு ஆசாரியர்களான ஐவரும், திருக்கச்சி நம்பிகளும் ஆகப் பதின்மரேயாவர். எம்பெருமானார்க்குப் பிற்பட்ட ஆசாரியர்கள் அபரிமிதர்களாகவுள்ளார்கள். அவர்களைப்பற்றி தேசிகன் தமது குரு பரம்பராஸாரத்தில் "எம்பெருமானார் ஸ்ரீபாதத்திலாச்ரயித்த முதலிகளைத் தந்தாம் ஸம்ப்ரதாயப்படிகளிலே யறிந்துகொள்வது" என்று ஒரே வரியில் முடித் தருளினார். க்ரந்தங்களை யருளிச்செய்து உபகாரகர்களான ஆசாரியர்களை யாவரும் தெரிந்து கொண்டிருக்கிறோம். அவ்வாசாரியர்களிடத்தில் ஸ்ரீவைஷ்ணவ குலத்திற் பிறந்த யாவரும் விப்ரதிபத்திலேசமுமின்றிக்கே ஸம்ப்ரதிபத்தி கொண்டிருக்க ப்ராப்தம். தென்கலை வகுப்பினர் ஸ்ரீமந் நிகமாந்த மஹாகுரு—தத்புத்ரரத்ந பர்யந்தர்களான ஆசார்யர்களில் எந்த ஆசாரியரிடத்தி லும் ஈஷத்தும் விப்ரதிபத்தி கொண்டிருக்கவில்லை. பூர்வாசார்ய பரம்பரையில் அவஸானஸ்தா னத்தில் நிற்பவர் மணவாளமாமுனிகள். அவர் தாம் செய்தருளின வியாக்கியான நூல்களிலே கூரத்தாழ்வான் பட்டர் நஞ்சீயர் முதலான ஆசாரியர்களின் ஸ்ரீஸூக்திகளைப்போலவே எங்க ளாழ்வான், நடாதூரம்மாள், ச்ருதப்ரகாசிகா பட்டர், நிகமாந்த மஹாகுரு ஆகிய இவ்வாசிரியர் களின் ஸ்ரீஸூக்திகளையும் பிரமாணமாகக் காட்டியருளுகிறார். தேசிகனுடைய ரஹஸ்யத்ரய ஸாரத்திலிருந்தும் தத்வமுக்தாகலாபத்திலிருந்தும் ந்யாஸவிம்சதியிலிருந்தும் வாக்யராசிகளையும் சுலோகங்களையும் மாமுனிகள் மேற்கோள் கொடுத்திருப்பது ப்ரஸித்தம். வாதிகேஸரி அழகிய மணவாளச் சீயரும் தம்முடைய தத்வதீபாதிகளில் தேசிகனுடைய பலபல ஸூக்திகளை உதா ஹரித்து அர்த்தவிவரணமும் செய்திருக்கிறார். அந்தச் சீயர்க்கு இருநூறு வருடங்கள் பிற்பட்ட வராய் அந்தத் திருநாமமே உடையராய் ஸ்ரீகாஞ்சீ கீழ கோபுர வாசலிலுள்ள மடத்திற்குத் தலைவரான ஸ்வாமி அருளிச்செய்ததாய் பகவத்விஷய ஸ்ரீகோசங்களில் அச்சிடப்பட்டதாயுமுள்ள "வேதாந்த சாஸ்த்ர த்ரவிடாகமாத்ய தசக த்வந்த் வைககண்ட்யம்" என்னும் மஹத்தான க்ரந்தத் தில் ஆசார்யவந்தனமாகச் செய்துள்ள சுலோகங்களில் நான்காவது சுலோகம் "ஸ்ரீவத்ஸ சிஹ்ந தநுஜாகமமௌலி யோகி ஸ்ரீமத்கலிக்ந வரயோகிமுகா மஹாந்தஃ, வ்யாஸார்ய வேதசிகரார்ய மஹார்யமுக்யா வேதாந்த யுக்மகுரவோ ஹ்ருதி ஸந்நிதத்யு;" என்பது. இதில் ஆழ்வான் பட்டர் நஞ்சீயர் நம்பிள்ளை மணமாளமாமுனிகள் ச்ருதப்ரகாசிகா பட்டர் வேதாந்த மஹாகுரு தொட்டயாசார்யர் ஆகிய இவ்வாசிரியர்களைச் சிந்தனை செய்திருக்கிறார். சென்ற நூற்றாண்டின் முற்பகுதியில் வாழ்ந்த வித்வான்களில் நிகரற்ற வித்வானும் வேதாந்த வாதாவளீ ந்யாயபாஸ்கராத் யநேக க்ரந்தப்ரணேதாவுமான மைஸூர் (மண்டயம்) அனந்தாழ்வான் தம்முடைய க்ரந்தங்களில் தேசிகனுடைய அனேக ஸூக்திகளை ஆங்காங்கு உதாஹரித்திருக்கிறாரென்பதும், நிகழும் நூற்றாண்டிலும் காஞ்சீபுரியில் ஸுப்ரஸித்த வித்வத் ஸார்வபௌமராக விளங்கின குன்றபாக்கம் ஸ்வாமி தாம் பணித்த தத்வரத்நாவளியில் "ஜயதி பகவாந் வேதாந்தார்யஸ் ஸ தார்க்கிக கேஸரீ" என்று பணித்திருக்கிறாரென்பதும் இங்ஙனே மற்றும் பலவும் குறிக்கொள்ளத்தக்க விஷயம். இவ்வாறாக தேசிகனுடைய ஸ்ரீஸூக்திகளைக் கையாண்டவர்களும் அவரை உபச்லோகித்தவர்களும் தென்னாசார்ய பரம்பரையிலே தேறுகிறப்போலே மற்றொரு பரம்பரையில் ஒருவராவது தேறக்கூடு மோ? திருக்குடந்தை கோபாலதேசிகன் என்றொரு மஹநீயர் ஜனித்து அவரிடத்திலே யதிகள் மூவர் ஆச்ரயித்து முநித்ரய ஸம்ப்ரதாயமென்று ஒன்று ஏற்பட்டபிறகு தேசிகனைத்தெரிந்துகொண்ட வர்களும் அவரை உபச்லோகிப்பவர்களும் ஏற்பட்டார்களென்பதில் நமக்கு விவாதமில்லை. இதை நாம் நமது பரச்சத க்ரந்தங்களில் எழுதியேயுள்ளோம். இந்த கோபாலதேசிகாதிகளை விட்டிட்டு இவர்களுக்கு முன்னே எதிர்த்தலையில் தேசிகனென்று வாய்திறந்த ஒரு வ்யக்தியாவது உண்டா? உண்டானால் இன்னாரென்று எடுத்துக் காட்டுமின் என்று கூசாமல் கூறுதும். (தொடரும்)

## जन्माद्यस्य यतः ॥ ஜந்மாத்யஸ்ய யத: 1—1—2

ஜந்மாதி, அஸ்ய, யத: என்று மூன்று பதமாகவுள்ளது இந்த ஸூத்ரம். அஸ்ய—கண்ணுல் காணப்படுகிற இந்த சேதந மிச்ரமான பிரபஞ்சத்திற்கு, ஜந்மாதி—உற்பத்தி, ஸ்திதி, ப்ரளயங்கள், யத:—எந்த வஸ்துவினிடத்தினின்று ஆகின்றனவோ. [அது தான் பரப்ரஹ்மம்] என்பதாக ஸூத்ரத்தின் பொருள்.

தைத்திரீயோபநிஷத்தில் ப்ருகுவல்லியென்னும் ப்ரகரணத்திலுள்ளதான "யதோ வா இமாநி பூதாநி ஜாயந்தே, யேந ஜாதாநி ஜீவந்தி, யத் ப்ரயந்த்யபிஸம்விசந்தி, தந் விஜிஜ்ஞாஸஸ்வ, தத் ப்ரஹ்மேதி" என்னும் வாக்யமானது பரப்ரஹ்மத்திற்கு ஜகஜ் ஜந்மாதி காரணத்வ ரூபமான லக்ஷணத்தைச் சொல்லியிருக்கின்றது. உலகில் நாம் ஆடு மாடுகளுக்கு ஒவ்வொரு லக்ஷணத்தைக் கொண்டு இதர பேதத்தை எப்படி நிச்சயிக்கிறோமோ அப்படியே ப்ரஹ்மம் கண்ணுக்குப் புலப்படாததாயிருந்தாலுங் கூட ஜகஜ்ஜந்மாதி காரணத்வ ரூபமான லக்ஷணத்தைக் கொண்டு சேதநாசேதநங்களிற் காட்டில் வேறுபட்டதென்று நிச்சயிக்க முடியுமாதலால் அப்படிப்பட்ட ப்ரஹ்மத்தைப் பற்றின விசாரம் கூடும் என்றதாயிற்று.

இங்கே பூர்வபக்ஷம்—ப்ரஹ்மத்திற்கு ஜந்ம காரணத்வம் முதலானவை லக்ஷணமாக ஸம்பவிக்கமாட்டாதென்று பூர்வபக்ஷம ப்ராப்தமாகிறது. "யதோ வா இமாநி பூதாநி ஜாயந்தே" இத்யாதியாக எடுத்துக் காட்டின உபநிஷத் வாக்யத்தில் அந்வய க்ரமம் எப்படி காணவேணுமென்றால், "யத: இமாநி பூதாநி ஜாயந்தே தத் ப்ரஹ்ம. யேந ஜாதாநி ஜீவந்தி தத் ப்ரஹ்ம. யத் ப்ரயந்தி அபிஸம்விசந்தி தத் ப்ரஹ்ம. என்று மூன்று வாக்யங்களாகப் பிரித்து அந்வயங் கொண்டு ஜந்மகாரணத்வம் ஒரு லக்ஷணமென்றும், ஸ்திதி காரணத்வம் மற்றொரு லக்ஷண மென்றும், லயகாரணத்வம் வேறொரு லக்ஷணமென்றும் ஆக வ்யாவர்த்தக லக்ஷணங்கள் மூன்று அங்கீகரிக்க வேண்டியதாகின்றது. இப்படியாகுமளவில், ஒரே ப்ரஹ்மம் என்றல்லாமல் பல ப்ரஹ்மங்கள் என்பதாகத் தேறும். வ்யாவர்த்தகங்கள் பலவானல் வ்யாவர்த்யமும் பலவாக வேண்டுகையாலே.

இப்படியொரு நிர்ப்பந்த முண்டோ? 'தேவதத்தன் கறுத்தவனும் பருத்தவனும் யுவாவாயும் செந்தாமரைக் கண்ணனாயு மிரா நின்றான்' என்று ஒருவர் சொன்னல் கறுப்பு முதலிய வ்யாவர்த்தகங்கள் பலவாயிருப்பது கொண்டு வ்யாவர்த்யனை தேவதத்தனும் பல வ்யக்திகளாகத் தேறிவிடுவனோ? ப்ரத்யக்ஷமாக ஒரு தேவதத்தனையே நாம் காண்கிறோம். அவ்வொரு வ்யக்தியினிடத்தில் கருமை, பருமை முதலான பலவும் கூடியிருக்கக் காண்கிறோம். இதுபோல ஒரு ப்ரஹ்மத்தினிடத்திலேயே ஜந்மகாரணத்வம் முதலானவை பலவும் கூடியிருக்கக் குறையில்லையே. இவற்றால் ப்ரஹ்ம வ்யக்தி பஹுத்வம் எப்படி ஆபத்தி பண்ண முடியும்? என்று மத்யே சங்கை தோன்றும். இதற்கு ஸமாதானம் கருமை பருமை முதலிய பலவற்றால் தேவதத்த வ்யக்தியில் பன்மை வந்து விட மாட்டாதென்பது வாஸ்தவமே; தேவதத்தன் கண்ணுக்குப் புலப்படுமவனாதலால் அவ்விஷயம் வேறு, ப்ரஹ்மம் அப்படி ப்ரத்யக்ஷமன்றே. அதுவோ அப்ரத்யக்ஷமாயிரா நின்றது. ஜந்ம காரணத்வமும் லயகாரணத்வமும் ஒன்றிலேயே கூடுமென்று க்ரஹிப்பிக்க வல்ல பிரமாண மெதுவும் புலப்படவில்லை. லக்ஷணங்கள் எல்லாம் இதர பேதத்தை ஸாதித்துக் கொடுக்குமவை என்பது உத்ஸர்க்கத: ப்ராப்தமாயிரா நின்றது. ஜந்ம காரணத்வம் ஸ்திதி காரணத்வம் லய காரணத்வமென்னு மிந்த லக்ஷணங்கள் இதர பேதத்தை [வ்யாவ்ருத்தியை] ஸாதித்துக் கொடுக்குமளவில் இதற்கு அபவாதம் யாதொன்றுமில்லாமையினலே ஜன்மகாரணத்வமாகிற லக்ஷணமானது என்ன செய்யுமென்றால், தன்னைக் கொண்டு லக்ஷணீயமான ப்ரஹ்மத்திற்கு ஸ்திதி காரணபூதமான ப்ரஹ்

மத்திற் காட்டிலும் லய காரணபூதமான ப்ரஹ்மத்திற் காட்டிலும் வேறுபாட்டைக் காட்டிக் கொடுத்தே தீரும். இப்படியே ஸ்திதி காரணத்வரூபமான லக்ஷணமும் ஸ்வலக்ஷ்யமான ப்ரஹ்மத்திற்கு ஜந்மகாரண பூதமான ப்ரஹ்மத்திற்காட்டிலும் லயகாரண பூதமான ப்ரஹ்மத்திற் காட்டிலும் வேறுபாட்டைக் காட்டிக் கொடுத்தே தீரும். இப்படியே லய காரணத்வ ரூபமான லக்ஷணமும் ஸ்வலக்ஷ்யமான ப்ரஹ்மத்திற்கு ஜந்ம காரண பூதமான ப்ரஹ்மத்திற் காட்டிலும் ஸ்திதி காரண பூதமான ப்ரஹ்மத்திற் காட்டிலும் வேறுபாட்டைக் காட்டிக் கொடுத்தே தீரும். ஆகவிப்படி லக்ஷண பேதங்களினால் ப்ரஹ்ம பஹுத்வம் தேறியே தீரும். இதற்காகப் பல லக்ஷணங்களைக் கொள்ளாமல் "ஜந்ம காரணத்வே ஸதி ஸ்திதி காரணத்வே ஸதி லய காரணத்வம் ப்ரஹ்மலக்ஷணம்" என்று கொள்கிறோமென்னில்; இவற்றுள் ஒவ்வொன்றே லக்ஷணமாகப் போருமாதலால் மற்ற விசேஷணங்கள் வ்யர்த்தமாக வேண்டிவரும். மேலும் ஜந்ம காரணத்வமும் லயகாரணத்வமும் விருத்தங்களாகை யாலே ஓரிடத்தில் இவை கூடியிருக்கவும் மாட்டா.

இதற்குமேல் ஒன்று சொல்லலாம்; "அதோ பக்ஷி உட்கார்ந்து கொண்டிருக்கிறதே; அவ்விடந்தான் தேவதத்தனுடைய கழனி" என்று ஒருவன் சொன்னால், தேவதத்தனுடைய கழனிக்கு பக்ஷியின் ஸம்பந்தத்தை லக்ஷணமாகச் சொன்னதாக ஆகிறது. இப்படிப்பட்ட லக்ஷணத்தினால் பக்ஷி யுறையுமிடமான கழனியில் தேவ தத்த ஸ்வாமிகத்வம் தெரிவிக்கப்படுகிறது. அதுபோலவே இங்கும் ஜந்ம காரணத்வம் ஸ்திதி காரணத்வம் லய காரணத்வம் ஆகிற மூன்றையும் ஜ்ஞாபக லக்ஷணங்களாகக் கொண்டு இவற்றால் ஒரே வஸ்து ப்ரஹ்ம பதார்த்தமாகத் தெரிவிக்கப் படுகிறது என்னலாம்.

இதுவும் பொருந்தாது. த்ருஷ்டாந்தத்தில் கழனியென்கிற வொரு வஸ்து ஏற்கெனவே அறியப்பட்டிருந்தது. அப்படி அறியப்பட்டிருந்தவதில் பக்ஷிவிசேஷத்தின் ஸம்பந்தத்தை யிட்டு தேவதத்த ஸ்வாமிகத்வம் தெரிவிக்கப்பட்டது. அது போல இங்கும் தெரிவிக்கப்படவேண்டில் ப்ரஹ்மத்திற்கு ஏற்கெனவே அறிந்தவொரு தன்மை சொல்லித்தீரவேண்டும். அதுவோ ஒன்றும் சொல்லமுடியாததாயிருக்கின்றது. ஆகவே ஜந்மகாரணத்வம் முதலியவற்றுக்கு [பக்ஷிவிசேஷ ஸம்பந்தாதிவத்] ஜ்ஞாபகத்வமும் ஸம்பவிக்கமாட்டாது.

ஏன்? ப்ரஹ்மத்திற்கு ஏற்கெனவே அறிந்ததொரு தன்மை சொல்லமுடி யாதா என்ன? நன்றாகச் சொல்லலாமே. "ஸத்யம் ஜ்ஞாநமநந்தம் ப்ரஹ்ம" என்கிற வாக்யத்தில் சொல்லப்பட்ட ஸத்யத்வம் முதலானவையே முன்னமறிந்த தன்மை என்னக்கூடாதோ வென்னில்; அங்கும் இந்த தோஷம் ஸமானமேயாகும். ஸத்யத் வாதிகள் ஜ்ஞாபகமாகும் போது ஏற்கெனவே யறிந்த தன்மை யொன்று சொல்லி யாகவேண்டும். ஜந்மகாரணத்வாதிகளைச் சொல்லுகிறோமென்னவேணும். அதைத் தெரிந்துகொள்ளாமல் ப்ரஹ்மபதார்த்தம் தெரிவிக்க முடியாததாலால் அந்யோந் யாச்ரயம் அபரிஹார்யமாகும். ஆகவே ஜந்மகாரணத்வாதிகள் லக்ஷணமாகப் பொருந்தமாட்டாவென்று பூர்வபக்ஷம் ப்ராப்தமாகிறது.

பரப்ரஹ்மம் ப்ரத்யக்ஷத்திற்கு விஷயமல்லாமையாலே அதற்கு ஒரு லக்ஷணமும் சொல்ல முடியாததாலும், லக்ஷணத்தைக் கொண்டே எந்த வஸ்துவையும் அறியவேண்டுமாதலாலும், லக்ஷணத்தின் அஸம்பவத்தினால் அறியமுடியாததான இந்த பரப்ரஹ்மத்தைப்பற்றி விசாரம் செய்வதெப்படி? என்கிற ஆக்ஷேபத்தைப் பரிஹரித்துக் கொண்டு "ஜந்மாத்யஸ்ய யத:" என்கிற இரண்டாவது ஸூத்ரம் தோன்றியுள்ளதென்று கூறிப் பூர்வபக்ஷத்தையும் விவரித்தேன். இனி ஸித்தாந்தம்;

ஒரு வஸ்துவுக்கு ஒரு லக்ஷணம் சொன்னேமானல் அந்த லக்ஷணமானது "மற்ற வஸ்துக்களிற் காட்டிலும் இந்த வஸ்து வேறுபட்டது" என்பதை நன்கு காட்டிக் கொடுக்குமென்று சொன்னேம். அப்படி வேறுபாட்டைக் காட்டுவ தென்ருல் என்ன? என்பதைச் சிறிது தெளிவாகத் தெரிந்து கொள்ள வேணும். விசேஷணங்களைக் கொண்டு நாம் வேறுபாட்டை யறியவேணும். விசேஷ்யத்தில் ஏதோ வொரு தர்மம் இருப்பதாக விசேஷணம் காட்டும்; அந்த தர்மத்திற் காட்டிலும் வேறுபட்டதான எந்த தர்மமும் அதில் இருக்கமாட்டாதென்று அதனல் தெரிந்து கொள்ளுகிருேமா? அல்லது அந்த தர்மத்திற்கு விருத்தமான வேறெந்த தர்மமும் அதில் இருக்கமாட்டாதென்று தெரிந்துகொள்ளுகிருேமா? என்று பரிசீலிக்க வேணும். விசேஷணத்தினலேற்பட்ட தர்மம் தவிர வேறு எந்த தர்மமும் அதில் [விசேஷ்யத்தில்] இருக்கமாட்டாதென்று தெரிந்துகொள்ளுகிருேமென்று தேறு மாகில் முற்கூறிய பூர்வபக்ஷம் ஊர்ஜிதமாகும். உண்மையோ வென்னில்; அப்படி யில்லை. ஒரு விசேஷணத்தினல் விசேஷ்யத்தில் ஒரு தர்மம் காட்டப்பட்டதேயானல் அதற்கு எதிரிடையான வேறு தர்மம் அதில் இருக்க மாட்டாதென்று நாம் தெரிந்து கொள்ளலாமே யன்றி அவிருத்தமான வேறெந்த தர்மமும் அதிலிருக்கமாட்டா தென்று நாம் தெரிந்துகொள்ள இயலாது. (உதாரணம்.) "நீலோ வ்ருஷப:" [கறுத்த எருது] என்கிற வொரு வாக்யத்தை யெடுத்துக் கொள்வோம். இதில் கருமை விசேஷணம். எருது விசேஷ்யம். நீல: என்கிற விசேஷணமானது இதர வ்யாவ்ருத்தியை [வேறுபாட்டை]க் காட்டுவதற்காகவே ப்ரயோகிக்கப்பட்டது. கறுப்பு நிறத்திற்கு விருத்தமான வெளுப்பு சிவப்பு முதலிய நிறங்கள் அந்த எருதினிடத்தில் இல்லையென்று இதனல் நாம் தெரிந்துகொள்ளலாமே யல்லது இதற்கு அவிருத்தமான த்ரவ்யத்வம் முதலிய தர்மங்களும்கூட அதில் இல்லையென்று நாம் தெரிந்து கொள்ளமுடியாது. லோகாநுபவம் அப்படியில்லை. ஒரு விசேஷ்யத்தில் பல பல தர்மங்கள் இருக்கலாம். விசேஷணத்தினல் அல்லது விசேஷணங்களினல் எந்தெந்த தர்மங்களின் ஸத்பாவம் ஏற்படுமோ அந்த தர்மங்கள் தவிர வேறு எந்த தர்மமும் அந்த விசேஷ்யத்தில் கிடையாதென்கிற ப்ரதிபத்தி ஒரு நாளும் ஒருவற்கும் உண்டாகமாட்டாது. அந்த தர்மங்களோடு முரண்படும்படியான தர்மம் இருக்கமாட்டா தென்கிற ப்ரதிபத்தியே விளையும். "யுவா நீலோ வாமந: பங்குச்ச தேவதத்த:" என்ருல் யுவாவாயும் கறுத்தவனுயும் குள்ளனுயும் நொண்டியாயும் தேவதத்தனிருக்கிருன் என்று பொருள்படுகிறது. இதில் யுவா என்கிற விசேஷணமானது யௌவனமுடையவனென்று காட்டி, யௌவனமென்கிற அந்த தர்மத்திற்கு விருத்தமான இளமையும் முதுமையுமில்லாதவன் என்று காட்டுமே யல்லது அதற்கு அவிருத்தமான நீலத்வம் வாமநத்வம் முதலிய தர்மங்களுமில்லாதவன் என்று காட்டமாட்டாதன்ருே? இப்படி ஒவ்வொரு விசேஷணத்தையு மெடுத்துக்கொண்டு விமர்சித்தறிக.

விருத்தமான தர்மங்களும் ஏககாலத்தில் இருக்க முடியாதே யொழிய கால பேதத்தினல் அவையும் ஒரே வ்யக்தியினிடத்தில் இருக்கத் தடையில்லை. "நீல வஸ்த்ரதாரீ தேவதத்த:" என்ருல் ஒருகாலத்தில் கறுப்புத் துணியை அணிந்தவனுயும் மற்றொரு காலத்தில் வெளுப்புத் துணியை யணிந்தவனுயு மிருப்பதில் விரோதமில்லாமையாலே நீல வஸ்த்ரதாரீ என்கிற இந்த விசேஷணமானது காலாந்தரத்தில் [அடுத்த க்ஷணத்திலேயே] ஸம்பவிக்கக் கூடிய ச்வேத வஸ்த்ரதாரணத்தைத் தவிர்க்கமாட்டாதன்ருே. விசேஷணங்களைப் பற்றி இங்ஙனே தெரிந்து கொள்ளக்கூடிய விஷயங்கள் பலவுள.

ப்ரகிருதத்தில் ஜந்மகாரணத்வம் ஸ்திதிகாரணத்வம் லயகாரணத்வ மென்னு மிவை காலபேதத்தினல் ஒரு வ்யக்தியினிடத்திலேயே ஒன்று சேர்ந்திருக்கக்கூடிய வை யாதலால் அவிருத்தங்களேயாகும். விலக்ஷண சக்தி யுக்தமான பர ப்ரஹ்மத்தி

னிடத்தில் ஏக காலத்திலேயும் இவை கூடும். ஆகவே ஜந்மகாரணத்வம் முதலிய லக்ஷணங்களினால் பரப்ரஹ்மத்திற்கு பஹூத்வாபத்தியென்பதில்லை. பர ப்ரஹ்மம் க்ஷேத்ரஜ்ஞர்களின் கருமங்களுக்குத் தக்கபடி ஸ்ருஷ்டி செய்யவேண்டிய காலத்தில் ஸ்ருஷ்டிப்பதும் பிரளயம் செய்ய வேண்டிய காலத்தில் ஸம்ஹரிப்பதும் செய்கிறது. உலகில் உழவனானவன் விதை விதைக்க வேண்டிய காலத்தில் அதை விதைப்பதும் அறுக்கவேண்டிய காலத்தில் அறுப்பதும் செய்வதுபோல் இதனைக் கொள்க.

அன்றியும், உத்தர நாராயணாநுவாகம் முதலானவற்றில் லக்ஷ்மீபதித்வம் முதலிய அஸாதாரண சின்னங்களினால் ப்ரதிபத்திக்கு விஷயமான வஸ்துவானது ஜந்ம காரணத்வம் முதலிய லக்ஷணங்களினால் ப்ரஹ்ம பதார்த்தமாக ஜ்ஞாபிக்கப் படுகிறதென்றும் கொள்ளக் குறையில்லாமையாலே இரண்டாவது பக்ஷத்திலும் தோஷமில்லை. [முன்னே விவரிக்கப்பட்ட பூர்வபக்ஷத்தை மீண்டு நினைப்பது.] ஏவஞ்ச, ஜகஜ்ஜந்மாதி காரணத்வமானது விசேஷணமாகவும் உபலக்ஷணமாகவும் ப்ரஹ்மலக்ஷணமாவதற்கு யாதொரு தடையுமில்லை யென்று தேறிற்று. இன்னமும் இங்கு விரிவாகத் தெரிவிக்க வேண்டுமவை பல வுண்டு. அவை சாஸ்த்ரஜ்ஞானிகளுக்கே க்ரஹிக்கவும் ரஸிக்கவுங் கூடியவை. ஆக ஜந்மாத்யதிகரண ஸாரார்த்தம் ஸம்க்ஷேபமாக விஜ்ஞாபித்தேன். .... .... .... .... (2)

**இனி மூன்றுவதான சாஸ்த்ரயோநித்வாதிகரணத்தைப்பற்றி விஜ்ஞாபயே.**

(3.) ஜந்மாத்யதிகரணமென்கிற கீழதிகரணத்தில் பரப்ரஹ்மத்திற்கு ஜகஜ்ஜந்மாதி காரணத்வம் லக்ஷணமென்று தேறிற்று. இப்படிப்பட்ட லக்ஷணத்தோடு கூடிய பரப்ரஹ்மமானது ப்ரத்யக்ஷப்ரமாணத்தினால் தெரிந்து கொள்ளப்படாமற் போனாலும் அநுமானப்ரமாணத்தினால் ஸித்திக்கக் குறையில்லாமையாலே அப்படி அநுமானப்ரமாண ஸித்தமாகின்ற அந்தப் பரப்ரஹ்மத்தை வேதாந்த வாக்யங்களினால் விசாரிக்கவேண்டிய அவச்யமில்லை என்றொரு ஆக்ஷேபந்தோன்ற, அதற்குப் பரிஹாரமாக இந்த சாஸ்த்ரயோநித்வாதிகரணம் அவதரிக்கின்றது.

शास्त्रयोनित्वात् ||—சாஸ்த்ரயோநித்வாத். 1—1—3.

சாஸ்த்ரத்தை யோநியாகக் கொண்டபடியாலே—என்பது ஸூத்ரத்தின் பொருள். யோநியாவது காரணம்; அறிவதற்குக் காரணம் என்கிற விவக்ஷையினால் இங்கு யோநி சப்தம் ப்ரயோகிக்கப்பட்டிருக்கின்றது. அதாவது—ப்ரமாணம் என்றபடி. சாஸ்த்ரத்தை ப்ரமாணமாகக் கொண்டபடியாலே என்றதாயிற்று. * अप्पभक्षो वायुभक्षः * என்னுமிடங்களில் 'தீர்த்தத்தைக் குடிப்பவன், வாயுவை பக்ஷிப்பவன்' என்று சப்தார்த்தமானாலும் "அஸதி பாதகே ஸர்வம் வாக்யம் ஸாவதாரணம்" என்கிற நியாயத்தினால் "தீர்த்த மொன்றையே குடிப்பவன், வாயுவை மாத்திரமே பக்ஷிப்பவன்" என்று பொருள் தேறுவதுபோல, இங்கும் "சாஸ்த்ரமொன்றையே ப்ரமாணமாகக் கொண்டபடியாலே" என்றதாகப் பொருள் தேறும். ஆகவே, "சாஸ்த்ரமேவ யோநி: (ப்ரமாணம்) யஸ்ய தத்—சாஸ்த்ரயோநி; தஸ்ய பாவ:—சாஸ்த்ரயோநித்வம்; தஸ்மாத்—சாஸ்த்ரயோநித்வாத்" என்று ஸமாஸம் கொள்ளப்பட்டதாயிற்று. பரப்ரஹ்மமானது அநுமாநத்தை ப்ரமாணமாகக் கொண்டதாகாமல் சாஸ்த்ரமொன்றையே ப்ரமாணமாகக் கொண்டதாகையினால் அப்படிப்பட்ட (வேதாந்த) சாஸ்த்ரத்தினால் பரப்ரஹ்ம விசாரம் செய்யவேண்டியது அவச்யமே என்பதாக ஸூத்ரத்தின் பொருள் முடிந்து நின்றது.

இங்குப் பூர்வபக்ஷம்:—"அப்ராப்தே ஹி சாஸ்த்ரம் அர்த்தவத்" என்பர் சாஸ்த்ரவித்துக்கள். வேறு எந்த ப்ரமாணத்தினாலும் ஏற்படாத விஷயத்தில் தான் சாஸ்த்ரம்

ப்ரவர்த்திக்கும்—என்பது இதன் தாற்பரியம். இதன்படி பார்த்தால், பரப்ரஹ்ம மானது வேறு எந்த ப்ரமாணத்தினுலும் ஸித்தியாமலிருந்தால்தான் அதில் சாஸ்த்ரம் ப்ரவர்த்திக்கு மென்றும், வேறு ஏதேனுமொரு ப்ரமாணத்தினுல் ப்ரஹ்மம் ஸித்தித்து விட்டால் அதில் சாஸ்த்ரம் ப்ரவர்த்தியாது என்றும் தேறுகின்றது. பரப்ரஹ்மமோ அநுமாந ப்ரமாணத்தினுல் ஸித்திக்கக் கூடியதாக இருக்கின்றது. எங்ஙனேயென் னில் "பூம்யங்குராதிகம் ஸகர்த்ருகம்—கார்யத்வாத்; கடவத்" என்பது அநுமாந சரீரம். உலகத்தில் நாம் கண்ணுல் காண்கிற எல்லாப் பொருள்களும் நியமேந ஒரு கர்த்தாவை யுடையன; கர்த்தாவொருவனில்லாமல் எந்தப் பொருளும் உண்டாவ தில்லை; வீடு பானை துணி முதலிய எல்லாப் பொருள்களும் ஒரு கர்த்தாவை முன்னிட்டே உண்டானவை யென்பதை அறிகிறோம். இதனுல் கர்த்தாவொருவ னில்லாமல் எந்தப் பொருளு முண்டாகா தென்கிற உறுதி தோன்றுகின்றது. உடனே மற்றொன்றும் கவனிக்கிறோம்; வீட்டைக் கட்டினவனுக ஒரு கர்த்தா நமக்குத் தெரியவந்தாலும் அந்த வீடு எந்த நிலத்தில் கட்டப்பட்டதோ அந்த நிலத் திற்கு எவன் கர்த்தா என்பது நமக்குத் தெரியவில்லை. வீடு கட்டக் கருவியாயிருக் கின்ற மண் மணல் மரம் முதலிய பொருள்களுக்கும் கர்த்தா இன்னுனென்று அறி கின்றிலோம். பானையைச் செய்பவன் குயவனென்று காண்கிறோமானுலும் அந்தப் பானைக்கு உபாதாந காரணமான மண்ணைப் படைத்தவன் இன்னுனென்று அறி கின்றிலோம். துணிக்குக் கர்த்தா ஒரு சேணியனென்று அறிகின்றோமானுலும் அதற்கு உபாதாநகாரணமாகிய பஞ்சைப் படைத்தவன் இன்னுனென்று அறிகின்றி லோம். ஆனுல் கர்த்தாவொருவனில்லாமல் ஒரு காரியப் பொருளு முண்டாகாதாத லால் கீழ்ச்சொன்ன மண் மணல் மரம் முதலிய பொருள்களுக்கும் கர்த்தாவொருவன் இருந்தே தீரவேண்டும். அவன் தான் ஈச்வரனென்பவன்—என்று இவ்விதமாக ஈச்வரனை யறிவதானது அநுமான ப்ரமாணத்தினு லறிவதாகும் ஆக, இப்படிப் பட்ட அநுமாநமென்னும் பிரமாணத்தினுல் ஈச்வரன் ஸித்திக்கவே, இப்படி ப்ரமாணுந்தர ப்ராப்தமாய் விட்ட பரப்ரஹ்மத்தின் விஷயத்தில் சாஸ்த்ரமென்னும் ப்ரமாணம் ப்ரவர்த்திக்க மாட்டாதாதலால் [*அப்ராப்தே ஹி சாஸ்த்ரம் அர்த்தவத்* என்றன்றோ நியம முள்ளது]. வேதாந்தசாஸ்த்ரமானது ஜகஜ்ஜந்மாதி காரண பூதமான ப்ரஹ்மத்தினிடத்திலே ப்ரமாணமாக முடியாதாதலால் அந்த வேதாந்த சாஸ்த்ர விசார ரூபமான ப்ரஹ்ம விசாரம் செய்யத் தக்கதன்று—என்பதாகப் பூர்வ பக்ஷம் ப்ராப்தமாக; இதற்குமேல் ஸித்தாந்தத்தை விஜ்ஞாபிக்கிறேன்.

அநுமானத்தினுல் ஒன்றை ஸாதிப்பதானுல் அது செவ்வனே ஸித்திக்கக் கூடிய விஷயமன்று அநுமானத்தினுல் ஈச்வரனே ஜகத்கர்த்தாவாக ஸித்திக்க வேணுமென்கிற நியதியில்லை; ஏனென்னில்; விச்வாமித்ர முனிவர் தவ வலிமை யினுல் மிகுந்த பெருமை பெற்று நூதந ஜகத்ஸ்ருஷ்டி பண்ணினுரென்பதை நாம் ஸ்ரீ ராமாயணுதிகளில் வாசிக்கின்றோம். *அந்யமிந்த்ரம் கரிஷ்யாமி* இத்யாதி ச்லோகங்கள் பலர் அறிந்தனவே. அம் முனிவர் ஒரு ஜீவவ்யக்தியே யல்லது ஈச்வர னல்லர். இதனுல் ஜீவகோடியிலேயே அதிசயித்த சக்தி படைத்த சிலர்க்கு விசித்ர ஜகத்ஸ்ருஷ்டியைப் பண்ண ஆற்றலுண்டு என்பது தேறுகிறபடியால், கீழே காட்டிய அநுமானத்தினுல் ஈச்வரனே ஜகஜ்ஜந்மாதிகாரண பூதனுக ஸித்திக்க வேணுமென்கிற நிர்ப்பந்தமில்லை. விலக்ஷண சக்தி யுக்தனுன சேதநனே ஸ்ருஷ்டி கர்த்தாவாகத் தேறலாமாதலால் அநுமாநம் ஈச்வர ஸாதனத்தில் சக்தி யுடையதன்று; ஆகவே சாஸ்த்ரமே பரப்ரஹ்ம ஸித்தியில் ப்ரபல ப்ரமாணமாகக் கடவது. அப்படிப் பட்ட சாஸ்த்ரம் வேதாந்த சாஸ்த்ரமே. அதைக் கொண்டு ப்ரஹ்ம விசாரம் செய்வது நன்ருகப் பொருந்தும் என்றதாயிற்று. ஆக சாஸ்த்ர யோநித்வாதிகரண ஸாரார்த் தம் ஸம்க்ஷேபமாக விஜ்ஞாபித்தேன். இனி, ஸமந்வயாதிகரணம்பற்றி விஜ்ஞாபயே.

(4.) பரப்ரஹ்மமானது சாஸ்த்ரம் தவிர வேறொரு பிரமாணத்தினுல் ப்ராப்த மாகக் கூடியதன்று என்றே கொண்டாலும் அந்த ப்ரஹ்மமானது ப்ரவிருத்தி நிவ்ருத்திகளுக்கு விஷயமல்லாமையினுல் அப்படிப்பட்ட ப்ரஹ்மத்தை ப்ரதிபாதநம் செய்வதில் பலனென்று மில்லாமையினுல் அந்த ப்ரஹ்மத்தினிடத்தில் சாஸ்த்ரத் திற்கு ப்ராமாண்யம் ஸம்பவிக்க மாட்டாதாதலால் அந்த ப்ரஹ்மம் சாஸ்த்ர ப்ரதிபாத்யமாவதற்கு வழியில்லை என்றொரு ஆக்ஷேபம் தோன்ற, அதற்குப் பரி ஹாரமாக இந்த அதிகரணம் அவதரிக்கின்றது.

### तत्तु समन्वयात् ॥ தத் து ஸமந்வயாத் 1—1—4

இந்த ஸூத்ரத்தில், 'ப்ரஹ்மணஃ' என்றொரு பதமும் 'சாஸ்த்ரேண' என்றொரு பதமும் அத்யாஹாரம் செய்துகொள்ள வேண்டும். (அதாவது வருவித்துக் கொள்ள வேண்டுமென்றபடி) தத்—கீழ் ஸூத்திரத்தில் சொல்லப்பட்ட சாஸ்த்ரப்ரமாணகத்வ மானது என்றபடி. ஸமந்வயாத்—நன்ருகப் புருஷார்த்தமாக அந்வயிக்கிறபடியினுல் என்றபடி. புருஷார்த்தத்வேந ஸம்பந்தமே ஸமந்வயமாவது. பரப்ரஹ்மமானது சாஸ்த்ரத்தினுல் புருஷார்த்தமாக ப்ரதிபாதிக்கப்படுகிறபடியினுலே அந்த ப்ரஹ்மத் திற்கு சாஸ்த்ர ப்ரமாணகத்வம் ஸம்பவிக்கக் குறையில்லை என்றதாக ஸூத்ரார்த்தம்.

இங்குப் பூர்வபக்ஷம் :— பரப்ரஹ்மத்தை சாஸ்த்ரம் ப்ரதிபாதிக்க வேண்டுமானுல் அது வேறொரு ப்ரமாணத்தினுல் அறியப்படாமலிருக்க வேணுமென்பது தவிர மற்றொரு தன்மையும் அதில் இருக்கவேணும். அது என்னென்னில்; தெரிந்து கொள்ள விரும்பக் கூடியதாயிருத்தல் என்கிற தன்மையாம். தெரிந்துகொள்ள வேணுமென்கிற விருப்பம் எந்த வஸ்துவில் உண்டாகின்றதில்லையோ அந்த வஸ்து வைப் பற்றி சாஸ்த்ரம் ப்ரதிபாதநம் செய்யமாட்டாதன்றே. பரப்ரஹ்மம் இதர ப்ரமாணத்தினுல் தெரிந்து கொள்ள முடியாததென்பதை ஒப்புக் கொள்வோம். தெரிந்துகொள்ள விரும்பக்கூடியதாயிருத்தல் என்கிற தன்மை ப்ரஹ்மத்தி னிடத்தில் இருக்க முடியாதே. ஏனென்னில்; தெரிந்துகொள்ள வேணுமென் கிற விருப்பமானது உலகில் ப்ரயோஜநவத்தான விஷயத்தில்தான் உண்டா கும். இஷ்ட ப்ராப்தி அநிஷ்ட பரிஹாரம் என்கிற இரண்டோ இரண்டத்தி லொன்றோ உலகில் ப்ரயோஜநமென்னத் தகுந்தது. இஷ்ட ப்ராப்தியானது ப்ரவ்ருத்தியினுலே விளையக்கூடியது. [யாகமென்கிற காரியத்தில் ப்ரவ்ருத்தியுண்டா னுல் ஸ்வர்க்கமென்கிற இஷ்டம் ப்ராப்தமாகிறது.] ப்ரவ்ருத்தியினுல் இஷ்ட ப்ராப்தி யாவதுபோல, நிவ்ருத்தியினுல் அநிஷ்டபரிஹார முண்டாகிறது. [மாம்ஸபக்ஷண மென்கிற காரியத்தில் நிவ்ருத்தி யுண்டானுல் அநிஷ்டபரிஹார முண்டாகிறது] ப்ரக்ருதத்தில், பரப்ரஹ்மமானது ப்ரவ்ருத்திக்கோ நிவ்ருத்திக்கோ இலக்கன்றே. (வஸ்துவே கண்ணுக்குத் தெரியாமையினுல்.) ஆகவே ப்ரயோஜநவத்த்வம் சொல்ல முடியாது. ஆதலால் தெரிந்துகொள்ள விரும்பக்கூடியதாயிருத்தல் என்கிற தன்மை பரப்ரஹ்மத்திற்கு ஸம்பவிக்க முடியாதாகையாலே அந்த ப்ரஹ்மத்தை சாஸ்த்ரம் ப்ரதிபாதிக்க வல்ல தல்ல; ஆகவே சாஸ்த்ரத்தைக் கொண்டு ப்ரஹ்மவிசாரம் செய்யப் புகுவது ஒவ்வாது—என்று பூர்வபக்ஷம் ப்ராப்தமாக;

இதன்மேல் ஸித்தாந்தம் வருமாறு;—பரப்ரஹ்மத்திற்கு ப்ரயோஜநாந்தர வத்த்வம் ஸம்பவியாமற் போனுலும் பல பல வேதாந்த வாக்கியங்களினுல் அதுதானே ஸ்வயம் ப்ரயோஜநம்—பரம புருஷார்த்தம் என்று அறிவிக்கப்படுகிறது. "புத்ரஸ் தே ஜாதஃ" (உனக்குப் பிள்ளை பிறந்தது) என்றும், "தவ க்ருஹே நிதிரஸ்தி" (உன் வீட்டில் நிதியுள்ளது) என்றும் சொன்னுல் இந்த வாக்யங்களானவை பரமா னந்தஹேதுவான புத்ரஜன்மத்தையும் நிதிஸத்பாவத்தையும் தெரிவிப்பதுபோல வேதாந்த வாக்யங்கள் பரமாநந்தஹேது பூதமும் பரமாநந்த ஸந்தோஹஸ்வரூபமு

மான பரப்ரஹ்மத்தை ப்ரதிபாதனம் பண்ணுவது ஸமஞ்ஜஸமே யாகும். அவை அபௌருஷேயங்களாகையாலே புருஷ புத்தியடியாக வரக்கூடிய ப்ரம ப்ரமாத விப்ரலிப்ஸைகள் அங்கு எண்ணத்தகாதவை. ஆகவே பொய் சொல்லி வஞ்சிக்கும் பேச்சுக்களல்ல வேதாந்த சாஸ்த்ரங்கள். அப்படிப்பட்டவற்றைக் கொண்டு ப்ரஹ்ம விசாரம் செய்வது பொருத்தமே யென்றதாயிற்று.

இந்த அதிகரணத்தின் ப்ரமேயத்தை யுட்கொண்டு பட்டர் ஸ்ரீரங்கராஜஸ்தவ உத்தர சதகத்தில் (21) * அத்ராஸ்தே நீதிரிதிவத்....ரங்கேச! த்வயி ஸகலாஸ் ஸமந் வயந்தே * என்கிற ச்லோகத்தையருளிச் செய்துள்ளார்.

ஸமந்வயாதிகரண ஸாரார்த்தம் முற்றிற்று. அடியேன் ஸ்வாமி நியமனப்படி சதுஸ்ஸூத்ரியின் பாஷ்ய ப்ரக்ரியையை ஸம்க்ஷேபமாக விஜ்ஞாபித்துத் தலைக் கட்டினேன். முக்கியமாக ஆனந்தமயாதிகரணமும் அந்தராதிகரணமும் வாக்யா ந்வயாதி கரணமும் விஜ்ஞாபிக்க ஆசையிருப்பதால் மேலும் விஜ்ஞாபிக்கிறேன் கேட்டருள வேணும்.

## 5. ஈக்ஷத்யதிகரணம்.

5, கீழே முடிந்திருக்கிற சதுஸ் ஸூத்ரியானது சாஸ்த்ராரம்ப ஸமர்த்தநபர மென்று நம் வேதாந்திகளின் ஸித்தாந்தம். சாரீரக மீமாம்ஸை யென்கிற இந்த சாஸ்த்ரம் ஆரம்பிக்க அவசியமில்லையென்று கிளர்ந்த சங்கைகள் கீழே நான்கு ஸூத்ரங்களினால் பரிஹரிக்கப்பட்டன வென்றபடி. முமுக்ஷுக்கள் விசாரித்தறிய வேண்டிய ப்ரஹ்மமானது முதல் ஸூத்ரத்திலே ப்ரஸ்தாவிக்கப்பட்டது. அந்த ப்ரஹ்மம் சேதநாசேதந விலக்ஷணமென்று விளங்க ஜகஜ்ஜந்மாதிகாரணத்வமாகிற லக்ஷணம் இரண்டாவது ஸூத்திரத்தில் கூறப்பட்டது. அந்த ப்ரஹ்மம் சாஸ்த்ர மொன்றினாலேயே அறியக்கூடியதென்பது மூன்றாவதும் நான்காவதுமான இரண்டு ஸூத்ரங்களினால் ஸ்தாபிக்கப்பட்டது. இனி விசாரம் ஆரம்பிக்கப்படுகிறது.

கீழே, பரப்ரஹ்மம் சாஸ்த்ரப்ரதிபாத்யம் என்று ஸித்தாந்தம் செய்ய நேர்ந்த போது பரப்ரஹ்மம் அபுருஷார்த்தமென்கிற பூர்வபக்ஷம் தோன்றியிருந்தது; அபுருஷார்த்தமன்று, பரம புருஷார்த்தமேயென்று கீழே ஸமந்வயாதிகரணத்தில் நிரூபிக்கப்பட்டது. ஸத்வித்யையில் ப்ரதாநமென்கிற தத்வமே யன்றோ ஜகத் காரணமென்று காட்டப்பட்டிருக்கின்றது. அது அபுருஷார்த்தத்வேந ஹேய மென்று கபிலமஹர்ஷியினால் ஸாங்க்ய தந்த்ரத்தில் கூறப்பட்டிருக்கின்றதல்லவா? ஆகவே, ப்ரஹ்மம் ஜகத்காரணமென்றும் அது புருஷார்த்தமென்றும் எங்ஙனே சொல்லக்கூடும்? என்கிற ஆக்ஷேபத்தைப் பரிஹரிக்க இவ்வதிகரணம்.

ईक्षतेर्नाशब्दम् ॥ ஈக்ஷதேர் நாசப்தம் 1—1—5

(ஈக்ஷதே: ந அசப்தம்) என்று பதவிபாகம், அசப்தமென்றது ப்ரதாநமென்ற படி. சப்தமாவது சாஸ்த்ரம்; சாஸ்த்ரத்தை ப்ரமாணமாகவுடையதல்லாமல் அநுமாந கம்யமானது ப்ரதாநம், ந—(அந்த ப்ரதாநமானது) ஸத்வித்யையிலுள்ளதாய் ஜகத்காரணத்தைச் சொல்லுமதான ஸச்சப்தத்தாலே வாச்யமன்று. ஏனெனில்; ஈக்ஷதே:—அந்த ஸச்சப்த வாச்யவஸ்துவுக்கு ஈக்ஷணம் ஓதப்பட்டிருக்கையாலே என்பது ஸூத்ரத்தின் பொருள்.

சாந்தோக்ய உபநிஷத்தில் * ஸதேவ ஸோம்ய! இதமக்ர ஆஸீத் * என்றொரு வாக்யமுள்ளது. அது முதலான வாக்யத்தினால் சொல்லப்படுகிற வித்யை ஸத்வித்யை யெனப்படும். அதில் ஸச்சப்தத்தாலே நிர்த்தேசிக்கப்பட்ட ஜகத்காரணவஸ்து வானது ஒன்று ஸங்கல்பித்ததாக அவ்விடத்திலேயுள்ள * ததைக்ஷத பஹு ஸ்யாம் ப்ரஜாயேயேதி *. இத்யாதி வாக்யத்தினால் சொல்லப்பட்டிருக்கிறபடியாலே ஸச்சப்த

நிர்திஷ்டமான அந்த வஸ்துவானது பரப்ரஹ்மமாக இருக்கத் தக்கதேயல்லது ப்ரதாநமாக இருக்கத்தகாது என்பது ஸூத்ரத்தின் திரண்ட பொருள்.

பூர்வபக்ஷம் :—நாம் கண்ணால் காணும் ப்ரபஞ்சத்திற்கு இரண்டவஸ்தைக ளுண்டு, காரணவஸ்தையென்றும் கார்யாவஸ்தை யென்றும், ஸ்தூலமான நிலைமை கார்யாவஸ்தை, ஸூக்ஷ்மமான நிலைமை காரணவஸ்தை. அப்படிப்பட்ட காரண வஸ்தையை ப்ரதிபாதிப்பதான வாக்யம் * ஸதேவ ஸோம்ய இதமக்ர ஆஸீத் * என்ப தான சாந்தோக்யோபநிஷத்வாக்யம். அதில் ஸச்சப்தத்தாலோதப்பட்ட வஸ்து வானது ப்ரதாநமென்கிற த்ரிகுணத்ரவ்யமேயாக வடுக்கும். ஸத்வம் ரஜஸ்ஸு தமஸ்ஸு ஆகிய மூன்று குணங்களும் கூடிய கூட்டாலாகிய ஜகத்துக்கு உபாதாந காரணம் எதுவோ; அதுவே * ஸதேவ * இத்யாதி ச்ருதியில் சொல்லப்பட்டிருப்பத னால் அந்த வஸ்து ஸத்வாதி குணத்ரயமாக இருக்கவேண்டிய அவச்யமுள்ளது. கார்ய வஸ்துவில் காணும் குணங்களெல்லாம் காரணவஸ்துவிலும் இருக்கவேண் டியது அவசியமாகையினாலே. ஆகவே ஸச்சப்தத்தால் குறிக்கப்பட்டுக் காரண பூதமான வஸ்து ப்ரதாநமேயாகும். ஆனால் * ததைக்ஷத பஹு ஸ்யாம் ப்ரஜாயேயேதி * என்று அந்த வஸ்துவுக்கு ஈக்ஷணம் [—ஸங்கல்ப கர்த்ருத்வம்—] சொல்லப்பட்டிருக் கிறதே, அது அசேதநமான அவ்வஸ்துவுக்கு ஸம்பவிக்கமாட்டாதே யென்னில்; அதே ப்ரகரணத்தில் மேலே * தத் தேஜ ஐக்ஷத * என்பது முதலான வாக்யங்களும் காணப்படுகின்றன. அவற்றால் தேஜஸ்ஸு முதலானவற்றுக்கு ஈக்ஷணம் சொல் லப்பட்டிருக்கிறதே; அது எப்படி ஸம்பவிக்கும்? என்று கேள்வி பிறந்தால், சேதநவஸ்துவுக்கே அஸாதாரணமாயுள்ள முக்யமான ஈக்ஷணம் ஸம்பவிக்காமற் போனாலும், கார்யத்தில் உந்முகமாகையாகிற கௌணமான ஈக்ஷணமே.சொல்லப் படுகிறதென்று யாவரும் சொல்லித் தீரவேண்டுமே; அதே ப்ரகரணத்திலுள்ளதான * ததைக்ஷத பஹு ஸ்யாம் ப்ரஜாயேயேதி * என்கிற வாக்யத்தினால் ஸச்சப்த நிர்திஷ்ட வஸ்துவுக்குத் தெரிவிக்கப்பட ஈக்ஷணமும் அவ்விதமாகவே கௌணமாக நிர்வஹிக் கக் குறையற்றதேயாம். ஆகவே ப்ரதாநமே காரண வஸ்துவாகக் கடவது.—

இனி, ஸித்தாந்தம் ;—சாந்தோக்ய உபநிஷத்தில் * ஸதேவ ஸோம்ய இதமக்ர ஆஸீத்* என்கிற வாக்யம் 6—2—1ல் உள்ளது; அது தன்னிலேயே மேலே 6—8—6ல் * ஸந்மூலாஸ் ஸோம்யேமாः ப்ரஜாः * என்று தொடங்கி * ஸ ஆத்மா * என்கிறவள வாலே ப்ரஸ்துதமான ஸத்துக்கு சேதநத்வம் சொல்லியிருக்கையாலே * ததைக்ஷத பஹு ஸ்யாம் ப்ரஜாயேய * என்ற விடத்தில் சொன்ன ஈக்ஷணம் சேதநனுக்கு அஸாதாரணமாய் முக்யமான ஈக்ஷணமாகவே விவக்ஷிதமென்று விளங்குகிறது. ஆகவே ஸச்சப்தவாச்யமான ஜகத்காரணவஸ்து ப்ரதாநமென்ன வொண்ணாது. * தத் தேஜ ஐக்ஷத * இத்யாதிகளிலும் கௌணமான ஈக்ஷணம் விவக்ஷிதமன்று; முக்க்யமானதே விவக்ஷிதமென்று மேலே இரண்டாமத்யாயத்தின் இரண்டாவது பாதத்தில் உபபாதனம் செய்யப்படுகிறது.

மேலும் இந்த ப்ரகரணத்தில் (6—14—2-ல்) * தஸ்ய தாவதேவ சிரம் யாவந் ந விமோக்ஷ்யே அத ஸம்பத்ஸ்யே * என்று ஓதப்பட்டிருக்கிறது. இதன் பொருளாவது —ஸச்சப்தவாச்யத்தை உபாஸிப்பவனுக்கு அந்த ஸத்தைப் பெறுமதில் தேஹத்தில் நின்று விடுபடுமளவே தாமதம்; தேஹத்தில் நின்றும் விடுபட்டவுடனே ஸச்சப்த ப்ரோக்தமான காரண வஸ்துவை ப்ராபிக்கிறான் என்பதே. இதனால் ஸத்தை யுபாஸிப்பவனுக்கு தேஹவியோகத்திற்குப் பிறகு மோக்ஷப்ராப்தி சொல்லியிருக்கை யாலே மோக்ஷோபாயமான உபாஸநத்திற்கு இலக்கானது அந்த ஸச்சப்த நிர்திஷ்ட மான வஸ்து—என்று நன்கு தெரியவருகிறது. உபாஸநத்திற்கு லக்ஷ்யமாயிருக்குந் தன்மை ப்ரதாநத்திற்கு ஸம்பவிக்க மாட்டாது. ஆகவே காரண வாக்யத்திலுள்ள

ஸச்சப்தத்தாலே ப்ரதாநம் விவக்ஷிதமென்கைக்கு ப்ரஸக்தியே யில்லை; அது விவக்ஷிதமாயிருந்தாலன்றோ அது அபுருஷார்த்தமாகையாலே ஹேயம் என்றெடுத்த வாதம் செல்லும். ஆகையாலே ஹேயத்வத்திற்கு இங்கு ப்ரஸக்தியே யில்லை. மோக்ஷோபாயத்வேந உபாதேயத்வமே விளங்காநின்றது.

இன்னமும்; ஸத்வித்யையின் தொடக்கத்தில் * யேநாச்ருதம் ச்ருதம் * இத்யாதியினாலே—ஒன்றைத் தெரிந்துகொண்டால் அதன் கார்யமான எல்லாவற்றையும் தெரிந்துகொண்டதாகு மென்பதை ப்ரதிஜ்ஞை பண்ணி, அவற்றுக்கு கார்ய காரண பாவத்தை உபபாதநம் பண்ணுவதற்காக * ஸதேவ ஸோம்ய இதமக்ர ஆஸீத்* என்று தொடங்கிற்று. ஆகவே எதைத் தெரிந்துகொண்டால் எல்லாம் தெரிந்துகொள்ளப் பட்டதாகுமோ அதுவே இங்கு ஸச்சப்தத்தினால் குறிக்கப்பட்டதாக வேண்டும். அது அசேதநமான ப்ரதாநமாக இருக்குமானால் அதைத் தெரிந்துகொண்டதனால் சேதநவஸ்துவைத் தெரிந்து கொண்டதாகுமா வென்று பார்க்க வேணும். இது ஸம்பாவிதமன்று. அந்த வஸ்து ப்ரதாநமன்றிக்கே பரப்ரஹ்மமாக இருந்தால், அதொன்றே ஸ்தூல ஸூக்ஷ்ம சேதநாசேதநங்களைச் சரீரமாக வுடையதாகை யாலே கார்யத்வ காரணத்வங்களிரண்டும் அதொன்றுக்கேயுள்ள தென்னுமிடம் மேலே ப்ரக்ருத்யதிகரணத்திலே சொல்லப்படப் போகிறபடியாலே காரணமானவதனை யறிவதனாலே கார்யமானவதுவும் அறியப்பட்டதாகக் குறையில்லாமையாலே கீழ்க் கூறிய ப்ரதிஜ்ஞை உபபந்நமாகும்.

இன்னமும்; அதே சாந்தோக்யோபநிஷத்தில் மேலே ஸுஷுப்தியைச் சொல்லும் ப்ரகரணத்தில் [6—8—1ல்] * ஸதா ஸோம்ய ததா ஸம்பந்நோ பவதி * என்று, ஸுஷுப்தனுக்கு ஸச்சப்தத்தாலே குறிக்கப்பட்ட காரணவஸ்துவில் லயம் சொல்லி, உடனே * ஸ்வமபீதோபவதி * என்பதனால்—அந்த லயமானது ஜீவாத்மா தன்னில்தான் லயமடைந்தபடியென்றும் சொல்லிற்று. இது எப்போது பொருந்துமென்று பார்க்கவேணும். ஸச்சப்தத்தாலே குறிக்கப்பட்ட வஸ்துவானது ஜீவனுக்கு வாசகமான ஸ்வசப்தத்திற்கு வாச்யமாயிருந்தால்தான் பொருந்தும். [ஸச்சப்தவாச்யமும் ஸ்வசப்தவாச்யமும் ஒன்றாக இருந்தாலொழியப் பொருந்தமாட்டா தென்றபடி.] ஸச்சப்தவாச்யம் பரமாத்மாவாகவே யிருக்க வேணுமென்பது இதனாலும் தேறிற்று. ப்ரதாநம் இப்படியாக வழியில்லையே. எந்த வஸ்துவையும் சொல்லுகிற எந்த சப்தமும் பரப்ரஹ்மத்தைச் சொல்லி நிற்குமென்பது மேலே விளங்கும்.

இன்னமும் மஹோபநிஷத்து முதலானவற்றில் நாராயணனாகிய பரப்ரஹ்மத்திற்கே ஜகத் காரணத்வம் கூறப்பட்டுள்ளது; ப்ரக்ருதத்தில் காரண வஸ்துவைச் சொல்லுமதான ஸச்சப்தம் ஸாமாந்ய சப்தமாகையாலே, ஸாமாந்யவிசேஷ ந்யாயத்தாலே இதற்கு விசேஷத்திலே பர்யவஸாநம் செய்து தீரவேண்டும். பரப்ரஹ்மத்தினிடத்திலேதான் அது ப்ராப்தமாகும். சாந்தோக்ய உபநிஷத்திலேயே ( ) * ஏஷ ஆத்மா அபஹதபாப்மா விஜரோ விம்ருத்யுர் விசோகோ விஜிகத்ஸோபிபாஸஸ் ஸத்யகாமஸ் ஸத்யஸங்கல்ப: * என்னுமிடத்தில் அபஹதபாப்மத்வம் முதலான குணங்களையுடைய நாராயணனுக்கே முமுக்ஷூபாஸ்யத்வம் ஓதப்பட்டிருக்கையாலே அப்பெருமானுக்கே காரணத்வம் ஸித்திக்கையாலே ப்ரதாநமென்பது ப்ரக்ருதத்தில் காரண வாசகமான ஸச்சப்தத்திற்கு வாச்யமாக வழியில்லை. ஆகவே ஸாங்க்யோக்தப்ரதாநத்திற்கு இங்கு ப்ரஸக்திலேசமுமில்லை யென்றதாயிற்று. ஸத்வ ரஜஸ் தமோ குணமயமான ஜகத்துக்கு அப்படிப்பட்ட ப்ரதாநமே காரணமாயிருக்கத் தகும்—என்கிற வாதம் விலக்ஷணத்வாதிகரணத்தில் பரிஹரிக்கப்படும்.

இந்த ஈக்ஷத்யதிகரணத்தில் * ஈக்ஷதேர் நாசப்தம் * என்கிற தலையான ஸூத்ரம் தவிர * கௌணச்சேத் நாத்மசப்தாத் * தந்நிஷ்டஸ்ய மோக்ஷோபதேசாத் * ஹேயத்வாவசநாச்ச * ப்ரதிஜ்ஞாவிரோதாத் * கதிஸாமாந்யாத் * ச்ருதத்வாச்ச * (1—1—12) என்கிற ஏழு ஸூத்ரங்களுமுள்ளன. அவற்றின் பொருளும் கீழே விவரிக்கப்பட்டு விட்டன. *

## 6. இனி ஆனந்தமயாதிகரணம்பற்றி விஜ்ஞாபயே.

கீழே சென்ற ஈக்ஷத்யதிகரணத்தில்—ஜகத்காரணவஸ்துவுக்கு ஸங்கல்ப விசேஷம் ஓதப்பட்டிருத்தலால் அந்த ஸங்கல்பம் கௌணமன்றிக்கே முக்யமாகவே நிர்வஹிக்கப்பட வேண்டுமாதலால் அப்படிப்பட்ட ஸங்கல்பத்திற்கு ஆச்ரய பூதமான ஜகத்காரணவஸ்து அசேதநமான ப்ரதானமாயிருக்க முடியாதென்று நிரூபிக்கப் பட்டது. இனி அசேதந வஸ்து ஜகத்காரணமாக வேண்டா; ஜீவனே ஜகத் காரணமா யிருக்கட்டுமே; அவனுக்கு ஸங்கல்பமாகிற ஈக்ஷணம் முக்க்யமாகவே ஸம்பவிக்குமன்றோவென்று சங்கையுண்டாக; அதற்குப் பரிஹாரமாய் இந்த ஆனந்த மயாதிகரணம் அவதரிக்கின்றது.

### ஆநந்தமயோப்யாஸாத் (1—1—13)

ஆநந்தமயஃ அப்யாஸாத் என்று பதவிபாகம் இதற்கு மேலுள்ளதான அந்தரதி கரணத்தின் இரண்டாவது ஸூத்ரமான *பேதவ்யபதேசாச்சாந்யஃ* என்கிற ஸூத்ரத்திலிருந்து அந்ய: என்னும் பதமொன்று இங்கே வருவிததுக் கொள்ள வேண்டும். ஆகவே ஆநந்தமயஃ அந்யஃ அப்யாஸாத் என்றதாயிற்று.

ஆநந்தமயஃ—ஆநந்தமய சப்தத்தினால் குறிக்கப்பட்ட புருஷன், (அந்யஃ)— ஜீவாத்மாவிற் காட்டிலும் வேறுபட்ட பரமாத்மாவேயாகக் கடவன்; ஏனென்னில்; அப்யாஸாத்—அளவு கடந்ததாக வோதப்பட்ட ஆனந்தமுடைமையான்து துக்க மிச்ரனான ஜீவாத்மாவுக்கு இணங்கமாட்டாமல் பரமாத்மாவுக்கே இணங்குமதாகை யாலே என்பது ஸூத்ரத்தின் பொருள். தைத்திரீயோபநிஷத்தில் ஆநந்தவல்லீ யென்பது ஒரு பகுதி; அதில் ஆநந்தமயவித்யா ப்ரகரணத்தில் (1) * தஸ்மாத் வா ஏதஸ்மாத் விஜ்ஞாநமயாத், அந்யோந்தர ஆத்மா ஆநந்தமய: * என்கிற வாக்யத்தினால் ஆநந்தமயனாக ஆத்மாவைப் ப்ரஸ்தாவித்து அதற்குமேல் (2) * ஸைஷா ஆநந்தஸ்ய மீமாம்ஸா பவதி * என்று தொடங்கி (3) * தே யே சதம் ப்ரஜாபதேராநந்தா: ஸ ஏகோ ப்ரஹ்மண ஆநந்த: ச்ரோத்ரியஸ்ய சாகாமஹதஸ்ய * என்னுமளவாக ஆநந்தமயனான ஆத்மாவுக்குள்ள ஆனந்தத்திற்கு அளவு கூறுமடைவில் 'நான்முகனுக்கு யாதொரு ஆனந்தமோ; அதிற்காட்டிலும் நூறுமடங்கு அதிகமான ஆநந்தம் பரப்ரஹ்மத் திற்கு ஓர் ஆநந்தம்' என்று சொல்லி, *ச்ரோத்ரியஸ்ய ச அகாமஹதஸ்ய* என்கிற வாக் யத்தினால் முக்தனுக்கும் அப்படிப்பட்ட ஆனந்தமுடைமை சொல்லிற்று. அகாமஹத னென்றது விஷய விரக்தனென்றபடி. ச்ரோத்ரியனென்றது வேதாந்த ச்ரவணம் பண்ணினவனென்றபடி. வேதாந்த ச்ரவணம் செய்து ப்ரஹ்மோபாஸனத்தினால் முக்தி பெற்றவனென்று தேர்ந்த பொருள். நூறு மடங்காகப் பெருக்கப்பட்ட சதுர் முகாநந்தமானது முக்தனுக்கு ஒரு ஆநந்தம் என்று சொல்லிற்றாயிற்று. இங்கு முக்தனுக்குச் சொல்லப்பட்ட ஆனந்தமானது பரப்ரஹ்மத்தின் உபாஸனத்தினால் விளைவது என்று [ச்ரோத்ரிய பதத்தினால்] சொல்லப்பட்டுள்ளது. ஆகவே முக்தாநந்த மானது உபாஸநப்ரீதனான பகவானுடைய ஸங்கல்பத்தினால் உண்டுபண்ணப்பட்ட தென்னுமிடம் தேறுகின்றது. [முக்தாநந்தம் நிருபாதிகமன்று. ஸோபாதிகம் என்றதாகத் தேறுகிறது.] *ஸ ஏகோ ப்ரஹ்மண ஆநந்த:* என்கிற விடத்திலோ வென்னில். காரணமொன்றும் சொல்லப்பட்டிராமையினால் பரப்ரஹ்மத்தினுடைய ஆனந்தமானது வேறொருவருடைய ஸங்கல்பாதீந மன்றிக்கே இயற்கையான தென்னுமிடம் நன்கு தெரியவருகிறது. நிருபாதிகமான ஆனந்தமுடைமை பரப்ரஹ் மத்திற்கேயொழிய வேறொருவற்குமில்லை யென்று தேறுதலால் அப்படிப்பட்ட ஆனந்தமுடையதாக ஆநந்தமய சப்தத்தினால் நிர்தேசிக்கப்பட்ட வஸ்து ஜீவனிற் காட்டிலும் வேறான பரப்ரஹ்மமே என்றபடி.

தைத்திரீயோபநிஷத்திலுள்ள ஆனந்தவல்லியை 'ஆனந்தமயவித்யா' என்று வேதாந்திகள் வழங்குவர். அந்த வித்யையில் "கோஹ்யேவாந்யாத் க: ப்ராண்யாத், யதேஷ ஆகாச ஆனந்தோ ந ஸ்யாத். ஏஷ ஹ்யேவாநந்தயாதி" என்று ஓதப்பட்டிருக்கின்றது. இதன் பொருளாவது—கீழே சொல்லப்பட்ட ஆகாச சப்த வாச்யமான வஸ்துவானது நிருபாதிகமாயும் அபரிச்சிந்நமாயுமிருக்கிற ஆனந்தத்தை உடையதல்லாமல் இருக்குமானால், பிரமன் முதற்கொண்டு எறும்பு வரையிலுமுள்ள ஜந்து ஸமூஹங்களில், கோ வா அந்யாத்=எந்த ஜந்துதான் ப்ராக்ருதமான ஆனந்தத்தையடைய முடியும்? கோ வா ப்ராண்யாத்=எந்த ஜந்துதான் மோக்ஷானந்தத்தையடைய முடியும்? ஏஷ ஏவ ஹி=இந்த ஆனந்தமயனான ஆத்மாவேயன்றோ ஆநந்தயாதி—ப்ராக்ருதமாயும் அப்ராக்ருதமாயுமுள்ள எல்லா விதமான ஆனந்தத்தையும் விளைவிக்கின்றது. [ஆநந்தயதீ என்கிற சொல் வடிவத்தில் யகாரம் நீண்டிருப்பது சாந்தஸ மென்றுணர்க.] இங்கே இப்படிச் சொல்லியிருப்பதும் தவிர உத்தர நாராயணாநுவாகத்திலும் "தமேவம் வித்வாந் அம்ருத இஹ பவதி, நாந்ய: பந்தா வித்யதே அயநாய" என்பதனாலும் இவ்வர்த்தமே நிலைநாட்டப் பட்டிருக்கின்றது. ஏவம் தம் வித்வாந்—இவ்விதமாக அந்த மஹாபுருஷனை உபாஸிப்பவன் அம்ருதோ பவதி—மோக்ஷாநந்தத்தைப் பெற்றவனாகிறான். அயநாய—அந்த மோக்ஷானந்த ப்ராப்தியின் பொருட்டு, அந்ய: பந்தா ந வித்யதே—அந்த மஹாபுருஷனைத் தவிர்த்து வேறு உபாயமில்லை என்பது இந்த ச்ருதிவாக்யத்தின் பொருள். * ஏஷ ஹ்யேவாநந்தயாதி * என்ற ச்ருதிவாக்யத்தில் அந்வயமுகேந தெரிவிக்கப்பட்ட அர்த்தமே * நாந்ய: பந்தா வித்யதே அயநாய * என்கிற ச்ருதி வாக்யத்தில் வ்யதிரேகமுகேந தெரிவிக்கப் பட்டிருக்கின்றது என்னுமித்தனையே வாசி. ஆக உபயச்ருதிகளும் ஏகார்த்தமாயிருக்கையினாலே உத்தர நாராயணாநுவாக வாக்யம் லக்ஷ்மீபதியையே விஷயமாகக் கொண்டிருப்பது போலவே ஆநந்தமய வித்யையிலும் அப்பெருமானே விஷயபூதன் என்னுமிடம் அறியவெளிது.

இன்னமும், ஆநந்தமய வித்யையில் "ஸ யச்சாயம் புருஷே, யச்சாஸாவாதித்யே, ஸ ஏக:* என்கிற வாக்யத்தினால் ஆனந்தமயனையும் ஆதித்யமண்டலத்தினுள்ளேயுள்ள புண்டரீகாக்ஷனையும் ஒன்றாகச்சொல்லியிருப்பதனாலே அந்த புண்டரீகாக்ஷனே ஆனந்தமயன் என்று தேறி நிற்கிறது. ஆக இப்படிப்பட்ட அடையாளங்களினால் ஆநந்த மய வித்யாவேத்யனும் புண்டரீகாக்ஷனுமானவன் பரம புருஷனேயென்று தேறும்.

பூர்வபக்ஷம் :—ஆநந்தவல்லியில் [ப்ரஹ்மவிதாப்நோதி பரம்] என்று ப்ரஹ்மத்தை ப்ரஸ்தாவித்து * ஸத்யம் ஜ்ஞானமநந்தம் ப்ரஹ்ம * என்று அந்த ப்ரஹ்மத்தின் லக்ஷணங்கூறி, * தஸ்மாத் வா ஏதஸ்மாதாத்மந ஆகாசஸ் ஸம்பூத: * இத்யாதி வாக்யத் தினால் அந்த ப்ரஹ்மம் ஆத்மாவென்னுமிடத்தையும் அதில் நின்றும் ஆகாசாதி பதார்த்தங்களின் உத்பத்தியையுஞ்சொல்லி, * தஸ்மாத் வா ஏதஸ்மாத் விஜ்ஞானமயாத், அந்யோந்தர ஆத்மா ஆநந்தமய: * என்றவளவால் உபக்ராந்தமான ஆத்மோபதேச பரம்பரையானது ஆநந்தமயனில் ஸமாப்தி செய்யப்பட்டிருக்கிறது. ஆகவே உபக்ரமிக்கப்பட்ட ப்ரஹ்மம் ஆநந்தமயனான ஆத்மாவேயென்று நிச்சயிக்கப்படுகிறது. அந்த ஆநந்தமய ஆத்மாவுக்கு * தஸ்யைஷ ஏவ சாரீர ஆத்மா * என்று உத்தர வாக்யத்தில் சரீரஸம்பந்தித்வமாகிற சாரீரத்வம் சொல்லப்பட்டிருக்கின்றது. கர்ம பரவசனான ஜீவாத்மாவுக்கே கர்மபலாநுபவார்த்தமாக சரீர ஸம்பந்தம் ஸம்ப விக்கும்; அகர்மவச்யனான பரமபுருஷனுக்கு அது ஸம்பவிக்க நியாயமில்லை. ஆகவே சரீரஸம்பந்தமுடையவனாக ஓதப்பட்ட இந்த ஆநந்தமயனான ஆத்மா ஜீவாத்மா வென்றே நிச்சயிக்கலாகிறது.

என்கிற பூர்வபக்ஷத்தின் மேல் ஸித்தாந்தம். நிருபாதிகமான ஆனந்தமுடைமை முதலிய குணங்கள் ஜீவாத்மாவுக்கு ஸம்பவிக்கமாட்டாவாகையாலும், ஸகல சரா

சரங்களையும் சரீரமாகக் கொண்டவனாக வோதப்படுகின்ற பரமாத்மாவுக்கு அப்படிப் பட்ட ஸகல சரீரத்வமாகிற சாரீரத்வம் நன்றாக ஸம்பவிக்கக் கூடியதாதலால் பரமாத்மாவே நிருபாதிக ஆனந்தவானாகக்கடவன். ஆநந்தமய: என்றவிடத்திலுள்ள மயட் ப்ரத்யயத்திற்கு விகாரம் அர்த்தமாகையாலே விகாரமற்றவனான பரமாத்மாவுக்கு ஆநந்த விகாரத்வம் பொருந்தமாட்டாதென்கிற வாதமும் அனுபபந்நம்; மயட்டுக்கு விகாரமே அர்த்தம் என்கிற நிர்ப்பந்தமில்லை; "அந்நமயோ யஜ்ஞ:" என்று சொன்னால் அந்நவிகாரமென்று பொருளன்றே; இங்கு மயட்டுக்கு ப்ராசுர்யமே யன்றோ பொருள். (ப்ராகர்யமாவது—மலிவு.) அன்னம் மலிந்த வேள்வி என்பது தானே பொருளாகிறது. இப்படியே இங்கும் "ஆனந்தம் மலிந்தவன் பரமாத்மா" என்றே பொருள்படக் குறையில்லாமையாலே விகாரவாதம் அப்ரஸக்தம். அடுத்த படியாக * யதோ வாசோ நிவர்த்தந்தே, அப்ராப்ய மநஸா ஸஹ, ஆநந்தம் ப்ரஹ்மணோ வித்வாந், ந பிபேதி குதச்சந * என்று வாக்குக்கும் நெஞ்சுக்கு மெட்டாதபடி அப்ரமேயமான ஆனந்த முடையனாக வோதப்பட்ட பரமாத்மாவினிடத்திலேயே யன்றோ மலிந்த ஆனந்தமுடைமை தேறக் கூடியது.

இதற்குமேல் ஒரு வாதம் தோன்றக் கூடும்; ஆநந்த ப்ராசுர்யமாவது ஆனந்தத்தினுடைய ஆதிக்யமே யாகும். ஆனந்தம் அதிகமென்று சொன்னால் ஆனந்த ப்ரதிகோடியான துக்கம் சிறிது உண்டென்று தோன்றியே தீருமல்லவா? (ஆதிக்ய மென்பது ப்ரதியோகியை அபேக்ஷித்திருக்குமாகையாலே எதைக் காட்டிலும் அதிகமென்று கேள்வியுண்டாக, துக்கத்திற்காட்டிலும் அதிகமென்று சொல்லியாக வேண்டுமாகையாலே ஆநந்தமயனென்று கொள்ளப்பட்ட பரம புருஷனிடத்தில் துக்க ஸம்பந்தம் இசையப் பட்டதாகவேயாயிற்று என்றபடி) ஏவஞ்ச, அகில ஹேய ப்ரத்யநீக கல்யாணைகதாந மென்னப் படுகிற பரப்ரஹ்மத்தினிடத்தில் சிறிதளவுகூட ஹேயஸம்பந்தம் ஸம்பவிக்கமாட்டா தாகையாலே, ப்ரசுராநந்த சாலித்வ மென்று பரிஷ்கரிக்கப்பட்ட ஆநந்த மயத்வமும் அங்குச் சொல்லுவதற்கில்லை என்பதாக.—இதுவும் பிசகு. அந்த ஆனந்த ப்ராசுர்யத்தை விவரிக்கப் புகுந்த * ஸைஷா ஆநந்தஸ்ய மீமாம்ஸா பவதி * இத்யாதியான ஆநந்தமீமாம்ஸையில் * தே யே சதம் ப்ரஜாபதேராநந்தா: * என்கிற வளவாக ப்ரஸ்தாவிக்கப்பட்ட சதுர்முக பர்யந்த ஸகல ஜீவர்களின் ஆனந்தத்திற் காட்டிலும் நூறு மடங்கு அதிகமாயிருக்கையாகிற ப்ராசுர்யமே ஆநந்தமய சப்தத்தினால் விவக்ஷிதமாக விவரித்திருக்கையாலே ப்ரஸ்துதனான ஆநந்தமய ஆத்மாவில் ஆநந்தமயனென்கிற சொல்லிலிருந்து துக்க ஸம்பந்தம் ப்ரஸங்கிக்க விரகில்லை.

*ஸத்யம் ஜ்ஞாநமநந்தம் ப்ரஹ்ம, யோ வேத நிஹிதம் குஹாயாம் பரமே வ்யோமந், ஸோச்நுதே ஸர்வாந் காமாந் ஸஹ. ப்ரஹ்மணா விபச்சிதேதி* என்கிற முந்தின வாக்யத்தில் ஜீவாத்மா ப்ரஹ்மத்தை யுபாஸித்து அந்த ப்ரஹ்மத்தையடைவதாகச் சொல்லியிருக்கையாலே, ஜீவாத்மா ப்ராப்தா வென்றும் பரமாத்மா ப்ராப்யனென்றும் இப்படி வாசி குறிப்பிடப் பட்டிருக்கிறது. இதற்கு மேல் ஒன்று சொல்லலாம்; பத்தாவஸ்தையிலுள்ள ஜீவன் ப்ராப்தா வாகிறான்; முக்தாவஸ்தையில் அவனே ப்ராப்யனாகிறான் என்று சொல்லக் குறையில்லாமையாலே ஜீவாத்மாவாகிய வொருவனுக்கே அவஸ்தா பேதத்தினால் ப்ராப்த்ருத்வமும் ப்ராப்யத்வமும் கூடுமாகையாலே ஜீவாத்ம பரமாத்மாக்களுக்கு இத்தால் பேதம் ஸித்திக்க வழியில்லை யென்று. இந்த வாதமும் பிசகு. *ப்ரஹ்மணா விபச்சிதா* என்று ப்ராப்யமான ப்ரஹ்மத்திற்கு நிருபாதிகமான விபச்சித்த்வம் [அதாவது—ஸர்வஜ்ஞத்வம்] சொல்லப்பட்டிருக்கின்றது. அது ஜீவாத்மாவுக்கு முக்தாவஸ்தையிலும் ஸம்பவிக்கமாட்டாது. *விபச்சிதா ப்ரஹ்மணா * என்று சொல்லப்பட்ட விபச்சித்த்வமானது *தஸ்மாத் வா ஏதஸ்மாதாத்மந ஆகாசஸ் ஸம்பூத:* என்று அடுத்தபடியாகச் சொல்லப்படும் ஜகத்ஸ்ருஷ்டிக்கு உபயுக்தமான ஸர்வஜ்ஞத்வமன்றோ.

முண்டகோபநிஷத்தில் "யஸ் ஸர்வஜ்ஞஸ் ஸர்வவித், யஸ்ய ஜ்ஞாநமயம் தப: தஸ்மா தேதந் ப்ரஹ்ம நாம ரூபமந்நஞ் ச ஜாயதே" என்று பரப்ரஹ்மத்திற்கு ஜகத் ஸ்ருஷ்டிக்கு வேண்டிய ஸர்வஜ்ஞத்வத்தைச் சொல்லி உடனே ஸ்ருஷ்டி கர்த்ருத் வத்தைச் சொல்லியிருப்பது போல இங்கும் மேலே சொல்லப்படப்போகிற ஜகத் ஸ்ருஷ்டிக்கு உபயுக்தமான ஸர்வஜ்ஞத்வத்தை முன்னே சொல்லி உடனே ஸ்ருஷ்டி கர்த்ருத்வம் சொல்லுவதாக நன்கு தெரிய வருகிறது. ஆகலால் இங்கு விபச்சித் சப்தத்தினல் சொல்லப்படுகிற ஸர்வஜ்ஞத்வத்திற்கு உபாதியொன்றும் சொல்லப் படாமையினல் நிருபாதிகமான ஸர்வஜ்ஞத்வமே சொல்லிற்ருக விளங்குகிறது. அப் படிப்பட்ட நிருபாதிக ஸர்வஜ்ஞத்வம் முக்தாவஸ்தையில் கூட ஜீவனுக்கு ஸம்பவிக்க மாட்டாதாகையினலே, ப்ராப்யமாக ஓதப்பட்ட ப்ரஹ்மம் பத்தாவஸ்தையிலும் முக்தாவஸ்தையிலுமுள்ள ஜீவனிற் காட்டிலும் வேறுபட்டதென்றே நிச்சயிக்கப் படுகிறது. ஆகவே நிருபாதிக ஸர்வஜ்ஞத்வத்தையுடைய இந்த ப்ரஹ்மத்திற்கே *தஸ்மாத் வா ஏதஸ்மாதாத்மந:* என்கிற மேல் வாக்யத்தில் ஆத்மத்வத்தையோதி, ஸ்தூலாருந்ததீந்யாயத்தின்படி அந்த ஆத்மா *அந்யோந்தர ஆத்மா ஆனந்தமய:* என்று உபஸம்ஹரிக்கப் படுவதாக விளங்குகின்றது. ஆதலால் இந்த ஆநந்த மயாத்மா ஜீவனல்லவென்று நன்கு தேறுகின்றது. ஆக இவ்வளவும் ஆனந்தம யாதிகரணத்தின் ப்ரமேயத்தை விஜ்ஞாபித்துக் கொண்டேன். .... .... *

## இனி அந்தரதிகரணத்தின் ப்ரமேயத்தை விஜ்ஞாபிக்கிறேன்.

கீழ் ஆனந்தமயாதிகரணத்தில் ஆனந்தமயன் பரமபுருஷனேயென்று நிஷ்கர்ஷிக்கப்பட்டாலும், ஆனந்தமயனுன புருஷன் ஜீவனுக இருக்கலாமென்று வேறொரு ப்ரகாரமாக சங்கையுண்டாக, அதைப் பரிஹரிக்கும் பொருட்டு இந்த அதிகரணம் ப்ரவர்த்திக்கிறது. * அந்தஸ் தத்தர்மோபதேசாத் 1-1-21.

இங்கு *பேதவ்யபதேசாச்சாந்ய:* என்கிற மேல் ஸூத்திரத்திலிருந்து அந்ய: என்கிற பதம் வருவித்துக் கொள்ளப் படுகிறது. அந்த:—ஆதித்ய மண்டலத்தினுள் ளே உறையும் புருஷன். அந்ய:—ஜீவனைக் காட்டிலும் வேறுபட்ட பரமபுருஷன்; தத்தர்மோபதேசாத்—அந்த பரமபுருஷனுக்கே அஸாதாரணமாகவுரிய தர்மங்களை இங்கு ஓதியிருப்பதனுலே—என்று ஸூத்ரத்திற்குப் பொருள்.

சாந்தோக்ய உபநிஷத்தில் [அத ய ஏஷோந்தராதித்யே ஹிரண்மய: புருஷோ த்ருச்யதே] என்று தொடங்கியுள்ள பகுதிக்கு அந்தராதித்யவித்யை யென்று பெயர். அந்த வித்யாப்ரகரணத்தில் "ஹிரண்யகேச: ஆப்ரணகாத் ஸர்வ ஏவ ஸுவர்ண: தஸ்ய யதா கப்யாஸம் புண்டரீகமேவமக்ஷிணீ தஸ்ய உதிதி நாம, ஸ ஏஷ ஸர்வேப்ய: பாப்மப்ய உதித: உதேதி ஹ வை ஸர்வேப்ய: பாப்மப்யோ ய ஏவம் வேத." என்று ஓதப்பட்டுள்ளது. இங்கு ஆதித்ய மண்டலத்தினுள்ளே உறையும் புருஷனுக்கு *யதா கப்யாஸம் புண்டரீக மேவமக்ஷிணீ* என்பதனுல் செந்தாமரை போன்ற திருக்கண்ணுடைமையைச் சொல்லி யிருப்பதனுலும், அபஹதபாப்மத்வத்தில் பர்யவஸிக்குமதான ஸர்வபாப்மோதிதத்வம் சொல்லியிருப்பதனுலும். ஸர்வபாப விநிர்முக்தத்வமாகிற மோக்ஷ புருஷார்த்த ப்ராப்திக்கு உபாயமான உபாஸநத்திற்கு விஷயபூதமான வஸ்துவென்று சொல்லி யிருப்பதனுலும், அபஹத பாப்மத்வமாகிற லிங்கத்தினல் *ஏஷ ஸர்வபூதாந்தராத்மா அபஹத பாப்மா திவ்யோ தேவ ஏகோ நாராயண:* என்று ஸுபாலோபநிஷத்தில் அபஹத பாப்மாவாக வோதப்பட்ட நாராயணனை நினைப்பூட்டுவதனுலும். மோக்ஷத் திற்கு உபாயமான உபாஸநத்திற்கு விஷயபூதமாகச் சொன்னதனுல் *தமேவம் வித்வாந் அம்ருத இஹ பவதி* என்று புருஷ ஸூக்தத்தில் சொல்லப்பட்ட மஹா புருஷனை நினைப்பூட்டுவதனுலும், புண்டரீகாக்ஷத்வம் நாராயணனிடத்திலேயே ஸுப்ரஸித்தமாகையாலும். ஆக இவ்வளவு உபபத்திகளைக்கொண்டு ஆதித்ய மண்டலத்தினுள்ளுறையும் புருஷன் பரமபுருஷனென்றே நிர்ணயிக்கப்படுகிறது.

இங்கு பூர்வபக்ஷம்:-கீழ் ஆநந்தமயாதிகரணத்தில் *தஸ்யைஷ ஏவ சாரீர ஆத்மா* என்று ஆநந்தமயாத்மாவுக்கு சரீரஸம்பந்தம் சொல்லியிருக்கையாலே ஆனந்தமயன் சரீர ஸம்பந்தமுள்ள ஜீவனாகத்தானிருக்க வேணுமென்று பூர்வபக்ஷம் ப்ராப்தமான போது "நிருபாதிகமான ஆனந்தமுடைமை" என்பது முதலான ஹேதுக்களினால் ஜீவனிற்காட்டில் வேறுபட்டவனே ஆனந்தமயனென்று ஸாதிக்கப்பட்டது. அது பொருந்தாது. ஏனென்னில்; அவ்விடத்தில் அந்த ஆனந்தமயனுக்கு * [ஸ யச்சாயம் புருஷே. யச்சாஸாவாதித்யே. ஸ ஏக:] என்று ஆதித்யனென்கிற தேவதாவிசேஷத் தோடு ஐக்யம் சொல்லியிருக்கையாலும் ஆதித்யனாகிற அந்த தேவதாவிசேஷத்திற்கு அந்தராதித்ய வித்யையில் கேசம் ச்மச்ரு நகம் கண் முதலியவற்றோடு கூடிய மிக ரமணீயமான சரீரமுடைமை சொல்லியிருக்கையாலும் அந்த சரீரமானது மிகுந்த புண்ய விசேஷ மாத்திரத்தினால் அமைந்த தென்னுமிடம் அங்கே ஸர்வபாபரா ஹித்யம் சொல்லியிருப்பதனாலே ஸித்திக்கிறபடியாலும் அப்படிப்பட்ட சரீர ஸம்பந்தத்தையே ஆனந்தவல்லியில் சாரீர சப்தத்தினால் க்ரஹிப்பது உசிதமாயிருப்பத னாலும், அப்படிப்பட்ட சரீரமுடைமை அகர்மவச்யமென்று அபிமானிக்கப்படுகிற பரப்ரஹ்மத்தினிடத்தில் ஸம்பவிக்கமாட்டாதாகையாலும் ஆதித்யனென்கிற ஒரு ஜீவனே மிகுந்த புண்ய விசேஷவசத்தினால் ஐச்வர்ய விசேஷத்தை யடைந்தவனாகி ஜகத்காரண பூதனாக ஆனந்தவல்லியில் பிரதிபாதிக்கப்படுகிறான்—என்று.

இந்த பூர்வபக்ஷத்தின் மேல் ஸித்தாந்தம் வருமாறு:—இவ்விடத்தில் ஆதித்ய மண்டலத்திலுள்ளுறையும் புருஷனுக்கு மிகுந்த புண்ய விசேஷமடியாக வரும் சரீர விசேஷ ஸம்பந்தம் சொல்லப்படுவதன்று. ஏனெனில் தஹர வித்யாப்ரகரணத்தில் "நஸுக்ருதம் ந துஷ்க்ருதம் ஸர்வே பாப்மாநோதோ நிவர்த்தந்தே. அபஹதபாப்மா ஹ்யேஷ ப்ரஹ்மலோக:* என்கிற விடத்தில் சொல்லப்பட்ட அர்த்தமே இங்கு [அந்தராதித்ய வித்யையில்] * ஸ ஏஷ ஸர்வேப்ய: பாப்மப்ய உதித:* என்பதனால் நினைப்பூட்டப்படு கிறபடியினாலே ஸுக்ருதமும் துஷ்க்ருதமுமாகிற இருவகைக் கருமங்களும் அடியோடு இல்லாதவொரு வ்யக்தியே ஆதித்ய மண்டலத்திலுள்ளதாக ஸ்பஷ்டமாய் விளங்கு கிறது. ஆகவே இங்கு உத்தேசிக்கப்படுகிற சரீரம் மிகுந்த புண்யவசத்தினாலாயது என்று சொல்வதற்குப் பொருத்தமில்லை. பின்னையோ வென்னில், "ஆதித்ய வர்ணம் தமஸ: பரஸ்தாத்" என்பது முதலான ச்ருதிகளில் ப்ரஸித்தமாய் ஸ்வேச்சையினால் பரிக்ரஹிக்கப்பட்டதாய் அப்ராக்ருதமான சரீரமேயாகும்.

கர்மவச்யனுக்குத்தான் சரீரமுடைமை கூடுமென்றாவது, அகர்மவச்யனுக்கு சரீர முடைமை கூடாதென்றாவது சொல்லப்போகாது. பகவான் அகர்மவச்யனாயிருக்கச் செய்தேயும் ஸத்ய ஸங்கல்பனான தன்னுடைய இச்சையினாலே சரீர பரிக்ரஹம் பண்ணக் குறையில்லை. இதற்குமேல் சொல்லக் கூடும்—த்ரிகுணாத்மக ப்ரக்ருதி பரிணாமரூபமான பூதஸங்காதந்தானே சரீரமென்பது; அபஹதபாப்மாவாயும் ஸத்யஸங்கல்பனாயுமிருக்கிற பரம புருஷன் இச்சித்தாலுங்கூட அந்த சரீரத்தின் ஸம்பந்தம் கூடாதே; அது ஹேயமாகையாலே. கர்மவச்யனான புருஷனுக்கோ வென்னில். அவன் கர்மாநுகுணமான பலன்களை யநுபவிக்க வேண்டியிருப்பதனாலே சரீரஸம்பந்தத்தை வெறுத்துத் தள்ளினாலுங்கூட அது தவிரமுடியாமல் வந்து சேர்ந்தே தீரும்; அகர்மவச்யனென்று இசையப்படுகிற பரம புருஷனுக்கு எந்த விதத்திலும் சரீர ஸம்பந்தம் யோக்யமாகாது—என்று சோத்யம் செய்யக் கூடும்.

பகவானுக்கு குணத்ரயமயமாய் ப்ராக்ருதமான தேஹம் உள்ளதென்று யாரேனுஞ் சொன்னால் கீழ்க் கூறிய ஆட்சேபம் பண்ணத்தகும். ஸ்வாபிமதமும் ஸ்வாநுரூபமும் அப்ராக்ருதமுமான சரீரம் பகவானுக்கு இசையப்படுகின்றதே யன்றி குணத்ரயமயமாய் ப்ராக்ருதமான தேஹம் உள்ளதாக இசையப்படவேயில்லை. வேதாந்தங்களானவை பகவானுக்கு ப்ராக்ருத ஹேய குணங்களையும் ப்ராக்ருத

ஹேய தேஹ ஸம்பந்தத்தையும் அதடியாக விளையக் கூடிய கர்மவச்யத்வஸம்பந்தத்தையும் நிஷேதித்து கல்யாண குணங்களையும் கல்யாண ரூபத்தையும் ஓதுகின்றன. பகவான் உபாஸகர்களிடத்திலுள்ள அநுக்ரஹாதிசயத்தினாலே அவரவர்களுடைய ப்ரதிபத்திக்குத் தக்கவாறு தன்னுடைய ஒளி யுருவத்தையே ஸ்வேச்சையினாலேயே தேவமநுஷ்யாதி ஸம்ஸ்தாநமாக ஆக்குகிறானென்று உபநிஷத்துக்கள் ஓதுகின்றன. * அஜாயமாநோ பஹுதா விஜாயதே * என்கிற ச்ருதியும் "அஜோபி ஸந் அவ்யயாத்மா பூதாநாமீச்வரோபி ஸந், ப்ரக்ருதிம் ஸ்வாமதிஷ்டாய ஸம்பவாம்யாத்மமாயயா" என்கிற கீதா ச்லோகமும் இங்கு அநுஸந்தேயங்கள். "பரித்ராணாய ஸாதூநாம் விநாசாய ச துஷ்க்ருதாம், தர்ம ஸம்ஸ்தாபநார்த்தாய ஸம்பவாமி யுகேயுகே." என்கிற கீதாச்லோகம் விசேஷித்து அநுஸந்தேயம்.

இவ்விடத்தில் உபயவேதாந்த ரஸிகர்களுக்கு ஒரு சிறந்த விஷயம் நினைப்பூட்டுகிறேன்; ஸ்வாமி ஸ்ரீ பாஷ்யமருளிச் செய்யும்போது ஆழ்வார்களின் திவ்ய ஸூக்திகளை இடைவீடின்றித் திருவுள்ளத்தில் சிந்தனை செய்துகொண்டேயிருந்ததாக முன்னோர்கள் மொழிந்திருப்பதுண்டு. அது உபயவேதாந்தங்களிலும் ஆழ்ந்த அறிவுபெற்ற மஹான்களுக்கே அறிய வெளிது. இதற்குச் சான்றாக எடுத்துக் காட்டக் கூடிய விடங்கள் பலவுண்டு. ப்ரக்ருதம் இந்த ஸூத்ரத்தின் பாஷ்யத்தில் உள்ளதான அரிய பெரிய விஷயமொன்று இங்கு நிரூபிக்கப்படுகிறது. இவ்விடத்தில் பரம புருஷனுக்கு சரீர ஸம்பந்தம் கிடையாதென்று பூர்வபக்ஷவாதத்தில் ப்ரஸக்தமானதை ஸ்வாமி கண்டிக்குமிடத்து ஸ்ரீ ராமக்ருஷ்ணாதி விபவாவதாரங்களில் சரீர பரிக்ரஹம் பகவான் செய்தருளுகிறபடியை நிரூபித்து வருகையில் * பரித்ராணாய ஸாதூநாம் விநாசாய ச துஷ்க்ருதாம் * என்கிற கீதா ஸூக்தியை யெடுத்துக் காட்டி * ஸாதுபரித்ராணமேவ உத்தேச்யம்; ஆநுஷங்கிகஸ்து துஷ்க்ருதாம் விநாச:, ஸங்கல்பமாத்ரேணாபி தத்ஸம்பத்தே: * என்றுள்ளது ஸ்ரீபாஷ்ய ஸூக்தி. எம்பெருமான் அவதாரம் செய்தருள்வது ஸாதுக்களை ஸம்ரக்ஷிப்பதற்காகவும் துஷ்டர்களைத் தொலைப்பதற்காகவுமானாலும் ஸாதுக்களை ஸம்ரக்ஷிப்பதொன்றே உத்தேச்யம்; துஷ்டர்களைத் தொலைப்பதென்பது ஸங்கல்ப மாத்திரத்தினாலும் ஆகக் கூடியதாதலால் அது ஆநுஷங்கிகமேயொழிய ப்ரதானமன்று—என்பது மேலெடுத்துக் காட்டிய ஸ்ரீ பாஷ்ய ஸூக்தியின் கருத்து. துஷ்டர்களைத் தொலைப்பது ஸங்கல்ப ஸாத்யமாகிறாப்போலே ஸாதுபரித்ராணமும் ஸங்கல்ப ஸாத்யமாகக் கூடாதோ? "துஷ்டர்கள் நஷ்டர்களாகக் கடவர்கள்" என்று ஸங்கல்பிப்பது போல, "ஸாதுக்கள் ஸம்ரக்ஷணம் பெறக்கடவர்கள்" என்று பகவான் ஸங்கல்பிக்க முடியுமன்றோ? அப்படியிருக்க, துஷ்டசிக்ஷணமே ஸங்கல்பத்தால் ஸாத்யமென்றும் சிஷ்ட பரிபாலனம் ஸங்கல்ப ஸாத்யமன்று என்றும் ஸ்ரீ பாஷ்யகாரர் எதுகொண்டு ஸாதிக்கிறாரென்று ஆராயுமளவில், நம்மாழ்வாருடைய ஸுஸ்பஷ்டமான ஸ்ரீ ஸூக்தியைக் கொண்டே ஸாதிக்கிறாரென்று நன்கு விளங்குகின்றது. அதை விவரிப்போம்:

திருவாய்மொழியில் (3-1-9) * மழுங்காத வைநுதிய சக்கரநல்வலத்தையாய் தொழுங் காதல்களிறளிப்பான் புள்ளூர்ந்து தோன்றினையே, மழுங்காத ஞானமே படையாக மலருலகில். தொழும்பாயார்க்கு அளித்தால் உன் சுடர்ச்சோதி மறையாதே* என்கிற பாசுரம் பரம போக்யமானது. எம்பெருமான் ஸ்ரீ கஜேந்திராழ்வானுடைய கூக்குரலைக் கேட்டு அரை குலையத் தலைகுலைய மடுவின் கரையிலே ஓடி வந்து விழுந்தானென்கிற இதிஹாஸம் ப்ரஸித்தமானது. எதற்காக வோடிவர வேண்டும்? * கருதுமிடம் பொருதுவரவல்ல திருவாழியாழ்வானைத் திருநாட்டிலிருந்தே ஏவினால் அவன் ஒரு நொடியில் யானையின் இடரைத் தீர்த்துவரமாட்டானோ? அவனுக்குத்தான் ச்ரமம் கொடுக்க வேண்டுமோ? ஸகல ஜகத்ஸ்ருஷ்டிஸ்திதி ஸம்ஹாரங்களுக்குக் கருவியாயுள்ள ஸங்கல்பத்தினால் யானையினிடரை அவலீலையாகத் தீர்த்திருக்கலாமே. இவ்விரண்டுபடியுமின்றிக்கே அறப்பதறியோடி வந்தது

எதற்காக? என்று நம்மாழ்வார் கேள்வி கேட்டுக்கொண்டு ஸமாதானத்தையும் தாமே யருளிச் செய்துள்ளார். * தொழுங்காதல் களிறளிப்பான் புள்ளூர்ந்து தோன்றினையே * என்கிற இரண்டாமடிதான் ஸமாதானம், கஜேந்திராழ்வான் தன்னெதிரே வந்து நின்ற பகவானை நோக்கி, * நாஹம் களேபரஸ்யாஸ்ய த்ராணார்த்தம் மதுஸூதந, கரஸ்த கமலாந்யேவ பாதயோரர்ப்பிதும் தவ * என்றான். [என்றேனு மொருநாள் அழிந்தே போகக்கூடியதான இவ்வுடலுக்காக நான் கரையவில்லை; எம்பெருமானே! உன்னை ஸேவித்து உன் பொற்றாமரையடிகளில் இத்தாமரை மலர்களைப் பணிமாறுவதற் காகவே கரைந்தேன் என்றான்.] இப்படிப்பட்ட ஆவல்கொண்ட பக்த சிகாமணிக ளின் ஆசையை ஸங்கல்பத்தினால் தலைக்கட்ட முடியாதென்பதையும் அப்பாசுரத்தின் பின்னடிகளில் ஆழ்வார் தாமே விவரித்துக் கூறியுள்ளார். நேரில் அவதரித்துத் திருமேனியைக் காட்டியே அன்பர்களைக் காக்கவேண்டும்—என்று ஆழ்வாரருளிச் செய்த அர்த்தத்தையே இங்கு ஸ்வாமி உயிராகக் கொண்டு பணித்தாராயிற்று.

இன்னமும் ஆதித்யமண்டலத்தினுள்ளுறையும் புருஷனைப் பற்றி அந்தர்யாமி ப்ராஹ்மணத்தில் சொல்லி வருகையில் * ய ஆதித்யே திஷ்டந் யஸ்ய ஆதித்யச் சரீரம் ய ஆதித்ய மந்தரோ யமயதி * என்றும், * யஸ் ஸர்வேஷு தேவேஷு திஷ்டந் * என்றும் சொல்லப்பட்டுள்ளது; ஆதித்யனென்கிற தேவதா விசேஷத்தையும் சதுர் முகன் முதலான ஸகல தேவர்களையும் நியமிப்பவனாக அந்தப் புருஷனைச் சொல்லி யிருக்கையாலே அவர்களிற் காட்டில் வேறுபாடு ஸ்பஷ்டமாகத் தெரிவதனால் ஆதித்ய மண்டலத்தினுள்ளே யிருக்கிற புருஷன் ப்ரஸித்தனான ஆதித்யனாகவோ சதுர்முகனாகவோ ருத்ரனாகவோ, சிறந்த புண்ய விசேஷத்தினால் ஐச்வர்ய விசே ஷத்தைப் பெற்ற வேறு எந்த ஜீவனாகவோ இருக்கமுடியாதென்பது தேறிற்று. *

ஆக இவ்வளவும் திருச்செவிசாற்றியருளின எம்பெருமானார் ஆழ்வானைநோக்கி "ஆழ்வார் ஸ்ரீஸூக்திகளைச் சிந்தை செய்துகொண்டே நாம் ஸ்ரீபாஷ்ய கீதாபாஷ் யாதிகளைப் பணித்தோமென்பது பின்புள்ளாரால் நன்கு கிரஹிக்கப்பட்டுப் பரம்பரை யாய் ப்ரவசனம் செய்யப்பட்டும் வருவதாகத் தெரிந்து மிகவும் ஸந்தோஷிக்கிறேன்" என்று ஸாதித்தருளி, உபந்யாஸகரை நோக்கி "இப்படிப்பட்ட அர்த்த விசேஷங் களை யெல்லாம் பூர்த்தியாகக் கேட்கவேணுமென்கிற குதூஹலம் மிகவுமுள்ளது; சிலகாலம் நித்யவிபூதியை மறந்து இங்கேயிருக்க விருப்பமுள்ளது. மற்றும்பல ஆசாரியர்களும் கூடவந்திருப்பதால் அவர்களினுடைய ஸ்ரீஸூக்திகளிலிருந்தும் ஸாரமாகச் சில விஷயங்களைக் கேட்டுக்களிக்க விருப்பமுள்ளது. இன்று பிரிந்து மறுபடியும் அடுத்தநாள் கூடுவோம்" என்று ஸாதிக்க, ஸபா விஸர்ஜனமாயிற்று.

(தொடரும்)

---

## அசிந்தித சோகஸம்பவம்.

ஸ்ரீகாஞ்சியில் வைதிக கோஷ்டியில் பரிகணிதராயிருந்த திருமலை அனந் தாண்பிள்ளை குன்றபாக்கம் தொட்டயாசாரியர் (6—3—64) வெள்ளிக்கிழமை க்ருஷ்ணாஷ்டமியன்று திடீரென்று அநாயாஸமாகப் பரமபதித்தது மிகவும் பரிதா பாஸ்பதம். இவர் நமது வேத வேதாந்த வைஜயந்தீ பாடசாலையில் உபய வேதங்களையும் அதிகரித்துத் தேறினவர்களில் ஒருவர். பகவத் விஷயாதிகாரியு மாவர். இவருடைய ஸ்தானத்தைப் பூர்த்திசெய்வாரில்லை. 45 ஸம்வத்ஸரம் உபய வேதபாராயண கைங்கரியம் நடத்திய விசிஷ்டவ்யக்தி இவர். ... ... *

## நல்வார்த்தை நானூறு—(முன் தொடர்ச்சி)

### ஸ்ரீராமாயணத்தில் சில பாடபேத ஆராய்ச்சிகள்.

279. தசரத சக்ரவர்த்தி முதலானவர்கள் மிதிலைமா நகர்க்குச் சென்று திருக்குமாரர்கள் நால்வரின் திருமணத்தை நிறைவேற்றிக் கொண்டு திருவயோத்திக்கு மீண்டு வந்து சேர்ந்த பின்பு நடந்த செய்தியைத் தெரிவிக்கின்ற பாலகாண்டத்தின் கடைசி ஸர்க்கத்தில் ஸ்ரீபரதாழ்வான் சத்ருக்நாழ்வானோடு கூட கேகய நாட்டிற்கு யுதாஜித்தென்னும் மாதுலரால் அழைத்துச் செல்லப்பட்டானென்பது தெரிவிக்கப்பட்டிருக்கின்றது. யுதாஜித்தென்பவர் மிதிலையில் நடந்த விவாஹத்திற்கே வந்திருந்ததாகவும் தெரிவிக்கப்பட்டிருக்கின்றது. மிதிலையிலிருந்து யாவரும் அயோத்யைக்கு வந்து சேர்ந்த பின் அதிக தாமதமில்லாமல் பரத சத்ருக்நர்கள் மாதுல க்ருஹத்திற்குச் சென்று விட்டார்களென்பது நன்றாகத் தெரிய வருகிறது. "ஆப்ருச்ச்ய பிதரம் சூரோ ராமஞ்ச அக்லிஷ்ட காரிணம். மாத்ரூச் சாபி நரச்ரேஷ்ட: சத்ருக்நஸஹிதோ யயௌ" * (77-25) என்கிற ச்லோகத்தினால் தெரிவிக்கப்பட்ட விஷயமே அயோத்யா காண்டத்தின் ஆரம்பத்திலும் "கச்சதா மாதுல குலம் பரதேந ததாநக:, சத்ருக்நோ நித்யசத்ருக்நோ நீத: ப்ரீதிபுரஸ்க்ருத:" என்கிற முதல் ச்லோகத்தினால் அநுவாதரூபேண தெரிவிக்கப்பட்டுள்ளது. அடுத்த ச்லோகங்களில் கேகய நாட்டில் வாழ்ந்து கொண்டிருக்கின்ற பரத சத்ருக்நர்கள் தந்தையான சக்ரவர்த்தியை அடிக்கடி ஸ்மரித்துக் கொண்டிருந்ததாகவும், தந்தையும் அவர்களை அடிக்கடி ஸ்மரித்துக் கொண்டிருந்ததாகவும், ஆனாலும் ஸ்ரீராமனிடத்தில் விசேஷமான அன்பு கொண்டிருந்ததாகவும் சொல்லி, இருபது சுலோகங்களினால் ஸ்ரீராமபிரானுடைய அபரிமிதமான திருக்கல்யாண குணங்களை வருணித்து, அவனுக்கு இளவரசு பட்டங் கட்டத் தந்தை பாரித்ததும் சொல்லப் பட்டிருக்கின்றது.

280. அதன் பிறகு மஹா ஸபை கூட்டி ஸ்ரீராம பட்டாபிஷேகத்தை நிச்சயித்து இராமனுக்குக் கட்டளையிட்டது முதலான சரித்திரங்கள் ஜகத்ப்ரஸித்தமானவை. ஸ்ரீராமாயணத்தில் இந்த ஸந்தர்ப்பத்தை நோக்கும்போது, ஸீதா விவாஹமாகி அயோத்யை வந்து சேர்ந்தபின் சில நாள்களுக்குள்ளாகவே ஸ்ரீராம பட்டாபிஷேக ப்ரயத்நமும் வநவாஸமும் நேர்ந்ததாகக் கதையின் போக்கு தெரிய வருகிறது. ஆனால் உண்மை இங்ஙனமிருக்க ஔசித்யமில்லையென்று காண்கிறது. அதனைச் சிறிது விவரித்துக் காட்டுவோம்.

281. மேல் ஆரண்ய காண்டத்தில் நாற்பத்தேழாவது ஸர்க்கத்தில் ராவணனுக்கும் ஸீதைக்கும் நிகழ்கின்ற ஸம்வாதத்தைக் கூறுமிடத்து "ஸமா: த்வாதச தத்ராஹம் ராகவஸ்ய நிவேசநே, புஞ்ஜாநா அமாநுஷாந் போகாந் ஸர்வகாமஸம்ருத்திநீ; ததஸ் த்ரயோதசே வர்ஷே ராஜா அமந்த்ரயத ப்ரபு:. அபிஷேசயிதும் ராமம் ஸமேதோ ராஜமந்த்ரிபி:* என்று பிராட்டி கூறினதாக வால்மீகி மஹர்ஷியால் உரைக்கப்பட்டுள்ளது. திருக்கலியாணமாகித் திருவயோத்திக்கு வந்து சேர்ந்த பிறகு அவ்விடத்தில் பன்னிரண்டு ஸம்வத்ஸரம் ஹர்ஷப்ரகர்ஷத்துடன் வாழ்ந்து கொண்டிருந்ததாகவும், பதின்மூன்றாமாண்டில் சக்ரவர்த்தி மகுடாபிஷேக முயற்சியை மேற்கொண்டதாகவும் இங்கு ஸ்பஷ்டமாகக் கூறப்பட்டிருக்கின்றது. ஆகவே திருமணமாகி அயோத்யைக்கு வந்து சேர்ந்தவுடனே மகுடாபிஷேக முயற்சி நடைபெறவில்லையென்பதும் மாதுலக்ருஹம் சென்ற பரதாழ்வான் பன்னிரண்டாண்டு அங்கேயே வாஸஞ்செய்து கொண்டிருந்தானென்பதும் தேறி நிற்கிறது.

282. மாதுலக்ருஹத்திற்குச் சென்ற பரதாழ்வான் இரண்டொரு மாதமோ, ஐந்தாறு மாதமோ அவ்விடத்தில் வாழ்வது உசிதம். பன்னிரண்டாண்டு நெடுக

அவ்விடத்திலேயே வாழ்ந்திருந்தானென்பதில் ஔசித்யமில்லையே: ஸ்ரீ ராம பக்தியே வடிவெடுத்த பரதாழ்வான் இராமனைப் பிரிந்து அத்தனை வருஷம் தரித்திருக்க வல்லவனா?* "தாமேவேக்ஷ்வாகுநாதஸ்ய பரதஸ்ய கதாம் குரு" என்று மேலே சொல்லுகிறபடி ஸ்ரீபரதாழ்வானுடைய குணங்களில் மிகவும் ஆழங்காற்பட்டிருப்பவரான பெருமாள் தாம் பரதனைப் பிரிந்து அத்தனை காலம் தரித்திருப்பரா? என்று சர்ச்சிக்க இடமுண்டாகிறது.

283. இங்குச் சிலர் சொல்லுவதென்ன வென்றால், விவாஹமானவுடனே மாதுலக்ருஹம் சென்ற பரதாழ்வான் சிலநாட்களிலேயே திரும்பித் திருவயோத்திக்கு வந்துவிட்டானென்றும், மறுபடியும் பன்னிரண்டு வருடங்கள் கழித்து [மகுடாபிஷேக முயற்சிக்கு முன்னாக] மாதுல க்ருஹத்திற்கு இரண்டாந் தடவையாகச் சென்றிருந்தானென்றும் சொல்லுகிறார்கள். உண்மை இங்ஙனேயிருந்தால் நன்கு பொருந்திவிடுகிறது. ஆனால் இப்படி நிர்வஹிப்பதற்கு ஸ்ரீராமாயணம் கைகொடுப்பதாகத் தெரியவில்லை. வேறு ராமாயணங்களிலிருந்து இதற்கு ப்ரமாணம் கிடைக்கிறதா வென்று விவேகிகள் விமர்சிக்கவேணும்.

284. ஆரண்ய காண்டத்தில் ஸீதாவசனமாக மேலே யெடுத்துக் காட்டின ச்லோகம் (47-4) "ஸமா த்வாதச தத்ராஹம் ராகவஸ்ய நிவேசநே" என்கிற ஆநுபூர்வியாக நம் ஆசார்யர்களால் பலவிடங்களில் உதாஹரிக்கப்பட்டுள்ளது. இதை பகவத் விஷயாதிகளிற் காணலாம். ஆசார்ய ஹ்ருதயம் நான்காம் ப்ரகரணத்தில் எட்டாம் பத்தின் ஸாரார்த்தமுரைக்கும் எட்டாவது சூர்ணையில் "அமாநுஷ போகமாக்கினவன்" என்றவிடத்து மணவாள மாமுனிகளின் வியாக்கியானத்திலும் விசேஷித்துக் காணலாம். ஸ்ரீராமாயணப் பதிப்புகளிலோ வென்னில், இந்த ஆநுபூர்வியில்லாமல் "உஷித்வா த்வாதச ஸமா இக்ஷ்வாகூணாம் நிவேசநே" என்றிவ்விதமாகக் காண்கிறது. பூர்வாசாரியர்களின் காலத்திற்கு ஸங்கிஹிதரான ஸ்ரீகோவிந்தராஜரும் பூருவர்கள் கொண்ட பாடத்தையிட்டு வியாக்கியானம் செய்யவில்லை. உஷித்வா இத்யாதியாக மேலே காட்டின பாடமே அவருடைய வியாக்கியானத்திலும் ஏறியுள்ளது.

285. ராகவஸ்ய நிவேசநே என்ற ஸ்தானத்தில் 'இக்ஷ்வாகூணாம் நிவேசநே' என்று வைத்து "வ்ரீடயா பர்த்ருநாம அக்ரஹணம்"—[வெட்கத்தினால் பர்த்தாவின் திருநாமத்தைக் கூறவில்லை.] என்று மெழுதியுள்ளார் கோவிந்த ராஜர். இதற்கடுத்த முன் ச்லோகத்தில் "ஸீதா நாம்நாஸ்மி பத்ரம் தே ராமபார்யா த்விஜோத்தம" என்று ஸ்பஷ்டமாக பர்த்தாவின் நாமக்ரஹணம் செய்யப்பட்டே யிருக்கிறது. கோவிந்தராஜர் அதைக் குறிக்கொள்ளாதவருமல்லர்; "கஸ்யேத்யஸ்ய உத்தரமாஹ-ராமேதி" என்று அவ்விடத்தில் வியாக்கியானமுமெழுதியுள்ளார். பர்த்தாவின் நாமத்தை அடிக்கடி சொல்ல வேண்டிய ஆவச்யகதையுமில்லை. பூருவாசாரியர்கள் கொண்டருளின பாடத்திற்கு மாறான பாடம் கோவிந்தராஜர்க்கு எங்ஙனே ப்ராப்தமாயிற்றென்று தெரியவில்லை.

286. ஐந்நூறு, அறுநூறு வருடங்களுக்கு முந்தியே ஸ்ரீராமாயணாதிகளில் பாடபேதங்கள் விளையத் தொடங்கி விட்டதாக நாம் நிச்சயிக்க வேண்டியிருக்கிறது. இதுவொரு தனிப்பட்ட ஆராய்ச்சி. இது செய்யுமிடத்து மிக மிக வருத்த முண்டாகிறது. வான்மீகி முனிவரின் திருவாக்கில் ஏதோ ஒரு விதமான பாடம் வெளிவந்திருக்க வேணுமே யொழியப் பல்வேறு வகைப்பட்ட பாடங்கள் வெளிவந்திருக்க நியாயமில்லை. விளைந்திருக்கின்ற பாடபேதங்களோ அபரிமிதம். இதன் தத்துவத்தை எம்பெருமானே உணரவேணும்.

**வைதிகர்களையும் ஆஸ்திகர்களையும் பற்றிப் பதினாறு வார்த்தைகள்.**

287. நமக்கு மூலப்ரமாணம் வேதமென்று சொல்லப்படுகிறது. வேதத்தை ப்ரமாணமாக அங்கீகரித்தவர்கள் வைதிகர்களெனப் படுகிறார்கள். உலகில் ப்ராஹ்மணர்களாக ஜனித்திருப்பவர்களெல்லாரும் வேதத்தை அங்கீகரித்தும் வேதத்தை ஓதியும் வேதோக்தங்களான கருமங்களை யனுட்டித்தும் வருகிறவர்களல்லராயினும், அதற்கு ஸ்வரூப யோக்யதை யுள்ளவர்களான படியாலே வைதிகர்களென்கிற பெயர் பூமண்டலத்திலுள்ள ஸகல ப்ராஹ்மணர்களுக்கும் துல்யமாகவுள்ளது. இதில் ஏதேனும் வாசியுண்டா? என்பது சிலருடைய கேள்வி. இதற்கு விடை கேண்மின்.

288. வேதத்தை ப்ரமாணமாக வொப்புக் கொள்பவர்களான யாவரையும் வைதிகர்களாகக் கொள்ளுவதில் யாதொரு தடையுமில்லை. ஆனால் வேதத்தின் அர்த்தங்களை மனம் போனபடி சொல்லி அபார்த்தங்களை ப்ரவசநம் செய்பவர்களிடத்தில் வைதிகத்வ பூர்த்தி இருக்க நியாயமில்லை. "வேதமார்க்க ப்ரதிஷ்டாபநாசார்யர்கள்" என்று விருதுபெற்று விளங்குமவர்கள் பகவத்ராமாநுஜ தர்சனஸ்தர்களான ஆசார்யர்களேயன்றி மற்றையோர்களல்லர். மற்றையோர் பரஸ்பரம் கடிதங்களெழுதிக் கொள்ளும்போது "ப்ரஹ்மஸ்ரீ. வேதமூர்த்திகளான" என்று எழுதிக் கொள்ளுவதைக் காண்கிறோமேயொழிய "ஸ்ரீமத் வேதமார்க்க ப்ரதிஷ்டாபநாசார்ய...." என்று எழுதிக் கொள்வதில்லை. இவ்விதமாக பகவத் ராமாநுஜ ஸம்ப்ரதாயஸ்தர்களே ஆயிரம் வருஷ காலமாக எழுதி வருகிறார்கள். இராமாநுச நூற்றந்தாதியில் (9). *இராமாநுசன்புகழோதும் நல்லோர் மறையினைக்காத்து இந்த மண்ணகத்தே மன்னவைப்பவரே* என்று உடையவர் காலத்திலேயே எழுதிவைக்கப்பட்டது. பகவத்ராமாநுஜ ஸம்பந்தமுடையவர்களான விலக்ஷணர்களே இங்கிலவுலகில் ஸ்ரீமத் வேதமார்க்க ப்ரதிஷ்டாபநாசார்யர்கள் என்றது இப்பாட்டில். இதர மதஸ்தர்கள் வைதிகர்களாயிருந்தும் அவர்கள் இப்படி யெழுதிவைக்கவில்லை.

289. பிறர்களுக்கு வைதிகத்வ பூர்த்தியில்லையென்று நாம் சொல்லுவதுபோல அவர்களும் நம்மைப்பற்றி இங்ஙனமே சொல்லக்கூடும். அது நிற்க. வேதம் என்றால் இப்போது அவரவர்கள் அத்யயநம் செய்து வருகிறார்களே இதுதானே. சிலர் ருக்வேதமும், சிலர் ஸாமவேதமும், சிலர் கிருஷ்ண யஜுர்வேதமும், சிலர் சுக்ல யஜுர் வேதமுமாக இப்படி ஆங்காங்கு அத்யயனம் செய்தும் பாராயணம் செய்தும் வருகிறார்களே; இவை தானே வேதங்கள். இவை தவிர இன்னமும் வேதங்களுண்டா? அன்றியும் உபநிஷத்துக்களென்று சொல்லப்படுகிறதே அவையும் வேதத்தில் சேர்ந்தவையோ? தனிப்பட்டவையோ? என்பது சிலருடைய ஆசங்கை. இதற்குப் பரிஹாரம் கேண்மின்.

290. அவிச்சிந்ந பரம்பரையாக ஆங்காங்கு ஓதப்பட்டு வருகின்ற வேதபாகமானது மொத்தமுள்ள வேதத்தில் ஏகதேசமே யொழிய ஸம்பூர்த்தியாக ஓதப்பட்டு வரவில்லை. க்ருஷ்ணயஜுர் வேதத்தின் (தைத்திரீய) ப்ராஹ்மணத்தில் ஒரு பகுதியான காடக மென்னும் சாகையில் முதல் ப்ரச்நத்தில் வேதங்கள் அளவற்றவை யென்பதைப்பற்றி ஓர் உபாக்கியானம் ஓதப்பட்டிருக்கின்றது; "பரத்வாஜோ ஹ த்ரிபிராயுர்ப்பிர் ப்ரஹ்மசர்ய முவாஸ" என்று தொடங்கியுள்ளது அது. *அநந்தாவை வேதா:* என்று நம் ஆசாரியர்கள் எடுத்துக்காட்டியுள்ள வாக்கியம் அந்த ப்ரகரணத்தில் தானுள்ளது. அந்த உபாக்கியானம் ஸாரமாகத் தெரிவிக்கப்படுகிறதிங்கு.

முன்பொருகால் பரத்வாஜரென்னும் மஹர்ஷியானவர் ஸகல வேதங்களையும் ஓதி முடிக்கக் கருதி அதற்குரிய ஆயுஸ்ஸை [அதாவது, முந்நூறு வருஷ காலம் ஜீவித்திருக்கக்கூடிய வாழ்நாளை] இந்திரனுடைய அருளால் பெற்று அந்த வாழ்நாளில் குருகுல வாஸஞ் செய்து வேத மோதி வந்தார்; முந்நூறாண்டும் முடிந்து

ஜீர்ணசரீரராய்க் கிழத்தனமடைந்து முமூர்ஷுவாய்ப் படுத்திருக்கின்ற அம்முனிவரை இந்திரன் வந்தணுகி 'ஓ முனிவரே! மீண்டும் நூற்றாண்டு கொண்ட ஆயுஸ்ஸை உமக்கு நான் கொடுப்பேனாகில் அந்த வாழ்நாளை நீர் எவ்விதமாகக் கழிக்க உத்தேசித்திருக்கிறீர்? அந்த ஆயுஸ்ஸில் நீர் ஸாதிக்க விரும்பும் புருஷார்த்தம் யாது' என்று கேட்டான். அதற்கு அம்முனிவர் 'அவ்வாயுஸ்ஸிலும் வேதாத்யயநமே செய்யக் கடவேன் என்றார். அதுகேட்ட இந்திரன் ஓ! இவர் ஸகலவேதங்களையும் ஓதி முடிக்க விரும்புகின்றார் போலும் என்று நினைத்து அது ஒருநாளும் முடியாத காரியமென்பதைத் தெரிவிப்பதற்காக ருக்வேதம் யஜுர்வேதம் ஸாமவேதம் என்ற மூன்று வேதங்களையும் தன்னுடைய யோக ஸாமர்த்தியத்தினால் மூன்று மலைகளாக்கி இதற்கு முன் அம்முனிவர் கண்டறியாத மலைவடிவமான அந்த வேதங்களை அவர்க்குக் காட்டினான்; பிறகு அவற்றுள் ஒவ்வொரு மலையில் நின்றும் ஒவ்வொரு முஷ்டியால் தூள்களையெடுத்துக் காட்டி 'ஓ பரத்வாஜரே! இம் மூன்று மலைகளும் வேதங்களே; அதில் ஒவ்வொரு துகளும் ஒவ்வொரு வேதமாதலால் வேதங்களுக்கு எல்லையே கிடையாது; இம்மூன்று முஷ்டிகளில் அடங்கியுள்ள வேதராசியைத்தான் நீர் இதுவரை முந்நூறாண்டு குருகுல வாஸஞ்செய்து ஓதினீர்; இதோ மலைமலையாகக் கிடக்கும் வேதங்கள் உம்மால் ஓதப்படவில்லை; ஆகவே ஸகல வேதங்களையும் ஓதி முடிப்பதென்பது ஒரு நாளும் முடியாத காரியமென்று கொள்வீர்'—என்றான் என்பதாம்.

291. இவ்வுபாக்கியானத்தின்படி பார்த்தால் ஸம்பூர்ண வேதாத்யாயியென்று ஒருவரையும் சொல்லமுடியாது; முந்நூறு வருஷ காலம் ஓதின பரத்வாஜ மஹர்ஷியின் கதையே அதுவானால், இக்காலத்தில் ஏழெட்டு வருஷகாலம் (அல்லது) பத்து பன்னிரண்டு வருஷகாலம் வேதமோதுபவர்களைப் பற்றி ஒன்றும் சொல்வதற்கில்லை.

292. உபநிஷத்துக்களென்பவை வேதத்தில் சேர்ந்தவையோ? தனிப்பட்டவையோ? என்பதைப்பற்றிக் கேண்மின்; வேதமானது பூர்வபாகமென்றும் உத்தரபாகமென்றும் இருவகுப்பாகவுள்ளது. பூர்வபாகம் கர்மகாண்டமெனப்படும். உத்தரபாகம் ப்ரஹ்மகாண்டமெனப்படும். இந்த ப்ரஹ்மகாண்டத்திற்கே உபநிஷத்தென்று வ்யவஹாரம். "உபநிஷீததி அஸ்யாம் பகவாந்" என்கிற வ்யுத்பத்தியினால் உபநிஷச் சப்தம் நிஷ்பந்நமாகிறது. பகவான் வெகு ஸமீபத்தில் உறைநின்றவிடம் உபநிஷத்தென்பது. இத்தால் கர்மகாண்டத்தில் பகவான் தூரஸ்தனாயிருக்கின்றானென்றும், ப்ரஹ்ம காண்டத்திலேயே ஸமீபஸ்தனாயிருக்கின்றானென்றும் சொல்லிற்றாகிறது. க்ருஷ்ண யஜுர்வேதிகளுக்கு தைத்திரீயோபநிஷத்தும் சுக்ல யஜுர்வேதிகளுக்கு ஈசாவாஸ்யோபநிஷத்தும் ப்ருஹதாரண்யகோபநிஷத்தும் ஸாமவேதிகளுக்குச் சாந்தோக்யோபநிஷத்தும்........இப்படி ஒவ்வொரு சாகிகளுக்கும் ஒவ்வோருபநிஷத்து ஏற்பட்டிருக்கின்றது. ஆகவே வேதமோதுபவர்கள் தங்கள் தங்கள் சாகைக்கு உரிய உபநிஷத்பாகத்தையும் சேர்த்தே ஓதி வருகிறார்கள்.

293. வேதமோதினவர்கள் என்று பெயர் பெற்ற யாவரும் கர்மகாண்டத்தில் தான் அதிகமாக உழைக்கிறார்களென்றும் உபநிஷத்பாகமெனப்படுகிற ப்ரஹ்மகாண்டத்தில் ஸ்வல்பமே உழைக்கிறார்களென்றும் காண்கிறோம். பகவத் ஸந்நிதிகளில் வேதபாராயண கோஷ்டியென்று ஆங்காங்கு நடந்து வருகிறதல்லவா? அந்த வேதமெல்லாம் கர்ம காண்டமேயொழிய ப்ரஹ்மகாண்டமன்று. கர்ம காண்டத்தில் பகவான் தூரஸ்தனாய், உபநிஷத் பாகத்திலேயே ஸமீபஸ்தனாயிருக்க, அவ்வுபநிஷத்துக்களை பகவத் ஸந்நிதிகளில் [வீதியுத்ஸவங்களில் பெரிய கோஷ்டியாகப்] பாராயணம் செய்வதன்றோ பொருத்தமானது. அதை விட்டுக் கர்மகாண்டத்தையே எங்கும் பிரபலமாகப் பாராயணம் செய்து வருவது ஏன்? தவிரவும் பதம் க்ரமம் ஜடை கனம் வர்ணக்ரமம் லக்ஷணம் என்னும் விசேஷங்களும் கர்ம காண்டத்திற்கே ஏற்பட்டிருப்பன. உபநிஷத்துக்களுக்கு இவையொன்றுமில்லை. பகவத் ஸந்நிதி

களில் தைத்திரீயோபநிஷத்து ஒன்று மட்டும் ஓதப்பட்டு வருகிறதே யன்றி மற்ற உபநிஷத்துக்களின் பாராயணத்திற்கு ப்ரஸக்தியே காண்பதில்லை. ஈச கேந கடப்ரச்ந முண்டக மாண்டுக்யாதி உபநிஷத்துக்களைக் கண்டபாடம் செய்திருப்பவர் களும் துர்லபர்களாயிருக்கின்றனர். முக்கியமாகக் கர்ம காண்டத்தையே பகவதுத்ஸவங்களில் பாராயணம் செய்து வருதற்கு யாது காரணம்? என்பது பலருடைய ஆசங்கை. இதற்கு ஸமாதானம் கேண்மின்

294. கர்மகாண்டத்திற் காட்டிலும் ப்ரஹ்மகாண்டத்திற்கு ஏற்ற முள்ள தென்பது வாஸ்தவமானாலும் கர்மகாண்டமென்று இழிவாக நினைக்கப்படுவதில்லை. பட்டர் கர்ம காண்டத்தைப்பற்றி ஸாதிக்கையில் [ஸ்ரீரங்கராஜஸ்தவே உத்தரசதகே] "த்வதர்ச்சாவிதிமுபரி பரிக்ஷீயதே பூர்வபாகః" என்று ஸாதித்திருக்கிருர். பூர்வ பாகத்தில் கருமங்களைப்பற்றி விசேஷமாகச் சொல்லியிருந்தாலும், அக்கருமங்களெல்லாம் பெரும்பாலும் வாயு இந்திரன் வருணன் அக்னி முதலிய தேவதாந்தரங்களை யுத்தேசித்துச் செய்யப்படுவனவாகக் காணப்பட்டாலும் அவைகளெல்லாம் எம்பெருமானுன ஸ்ரீமந்நாராயணனுடைய திருவாராதனத்தைச் சொல்லுவதில் உபக்ஷீணங்கள் என்று அறுதியிடக் குறையில்லை.

295. இதை நன்ருக உபபாதிக்கக் கேண்மின் தைத்திரீய உபநிஷத்தில் "ஸ ஆத்மா; அங்காந்யந்யா தேவதா:" என்று ஓதப்பட்டிருப்பது ஸுப்ரஸித்தமானது. எம்பெருமானே உயிராயிருப்பவனென்றும் மற்ற தேவதைகளெல்லாம் உடலாயிருப்பன வென்றும் இதில் ஸ்பஷ்டமாகச் சொல்லிற்று. உலகில் உடலுக்கு இடுமதெல்லாம் உயிருக்கே த்ருப்தியளிப்பவை யென்பதைக் காணுகின்ருேம். உண்ணுஞ்சோறு பருகும் நீர், தின்னும் வெற்றிலை. ஆடையாபரணங்கள் முதலானவை உடலில் சேர்க்கப்பட்டாலும் இவையெல்லாம் உயிரை நோக்கியே சேர்க்கப்படுகின்றன வென்பதும், இவற்ருலுண்டாகும் த்ருப்தி உயிருக்கே யென்பதும் நிஸ்ஸந்தேஹமான விஷயமல்லவா? இது போல தேவதாந்தரங்களுக்கு இடுமவை யெல்லாம் தேவதாஸார்வபௌமனுய் ஸகல தேவதாந்தராத்மாவான நாராயணனுக்கே சேருமென்பதும் நிஸ்ஸந்தேஹம். "ஆகாசாத் பதிதம் தோயம் யதா கச்சதி ஸாகரம், ஸர்வதேவநமஸ்காரః கேசவம் ப்ரதி கச்சதி" என்று த்ரிமதஸ்தர்களான ஸகல ப்ராஹ்மணர்களும் முச்சந்தியும் சொல்லி வருவது கொண்டும் இதை யுணரலாம்.

296. இக் காலத்தில் ஆஸ்திகர்கள் விஞ்சியிருக்கிருர்களா? நாஸ்திகர்கள் விஞ்சியிருக்கிருர்களா? என்று ஆலோசித்துப் பார்த்தால், இக்காலத்தில் என்று என்ன? எக்காலத்திலுமே நாஸ்திகர்களின் விஞ்சுதலே அதிகமென்றுதான் சொல்ல வேண்டும். நூற்றில் 99 பங்கு நாஸ்திகர்களும் ஒரு பங்கு ஆஸ்திகர்களுமாகத் தேறுவதுதான் எக்காலத்திலுமுள்ளது. எதற்கும் நாளடைவில் ஏற்றத் தாழ்வு ஏற்படுவது இயல்வு. அந்த ரீதியில் பார்த்தாலும் நாஸ்திகர்களுக்கு ஏற்றம் மிகுகின்றது. இக்காலத்தில் ஆஸ்திகர்களுக்கு நூற்றில் ஒருபங்கு என்பது தேருது, ஆயிரத்தில் ஒரு பங்கு என்று தேறினுல் அதிசயம். ஆதிகாலத்திலேயே நாஸ்திக மதத்திற்கே லோகாயதமதம் என்று பெயர் ஏற்பட்டிருக்கிறது. [லோகே ஆயதம்—லோகாயதம்] என்று வ்யுத்பத்தி கூறப்படுகிறது. இதனுல் உலகத்தில் மிகப் பரம்பிய மதம் நாஸ்திகமதமே யென்று தெரிவிக்கப்பட்டதாகிறது.

297. நாஸ்திகர்களின் ஆயிரக்கணக்கான சுலோகங்களில் ஒரு சுலோகம் மட்டும் காட்டுகிருேமிங்கு; "யாவஜ்ஜீவம் ஸுகம் ஜீவேத் நாஸ்தி ம்ருத்யோரகோசர:. பஸ்மீபூதஸ்ய தேஹஸ்ய புநராகமநம் குத:?" என்பது நாஸ்திகர்களின் தலையான வாதமடங்கிய சுலோகம். இதன் பொருளாவது உயிருள்ள வரையில் ஆநந்தமாக வாழவேண்டியது; நாவுக்கு இனிமையான தின்பண்டங்களை எந்த இடத்திலும் எந்த

சமயத்திலும் எந்த நிலைமையிலும் உண்டு களிக்கவேண்டியது; ஏகாதசி யென்றும் அமாவாஸ்யை யென்றும் விரதநாட்களென்றும் பார்த்து உணவையோ மற்றுமுள்ள போகங்களையோ சுருக்கிக் கொள்வது பேதைமை; எதையும் எக்காலத்திலும் மனம் போனபடி தாராளமாக அனுபவிக்கவேண்டியது. உலகிற் பிறந்தாரனைவரும் ஒருநாள் யமனிடத்துச் சென்று சேரவேண்டியவர்களே; யமனுக்குத் தப்பிப் பிழைப்பார் ஆருமில்லை; நீறுகியொழிந்த தேஹம் திரும்பிவரமாட்டாது. கிடைத்திருக்கும் தேஹத்தைப் பழுதாக்காமல் விஷயங்களை யதேஷ்டமாக புஜித்துக் களிக்க வேண்டியதே என்பது மேலெடுத்த சுலோகத்தின் பரமதாற்பர்யம். இங்ஙனே வாதஞ்செய்யும் நாஸ்திகர்களே எங்கும் நிரம்பியிருக்கின்றார்கள். ஸங்கல்பஸூர்யோதயத்திலுள்ளதான “ஸர்வத: கரவீராதீந் ஸூதே ஸாகரமேகலா, ம்ருதஸஞ்ஜீவநீ யத்ர ம்ருக்யமாணதசாம் கதா” என்கிற ச்லோகரத்னமும் இவ்விஷயத்தையே ஸ்வாபதேசார்த்த முறையில் காட்டுகின்றது. “பூயாநஹோ பரிகர: ப்ரதிகூலபக்ஷே” என்கிற கூரத்தாழ்வானுடைய திவ்யஸூக்தியும் இத்தகைத்தே.

298. இப்படியாக நாஸ்திகர்கள் மலிந்த இக்காலத்தில் ஆஸ்திக்யம் குன்றாமல் செழித்தோங்கி வளர்ந்து வருமாற்றைக் கண்டு களிக்கவேண்டும். ஸ்ரீராமநவமியுத்ஸவமென்கிற வியாஜத்தினாலும் நவராத்திரி யென்கிற வியாஜத்தினாலும் எத்தனை நகரங்களில் எத்தனை அக்ரஹாரங்களில் எத்தனை க்ராமங்களில் எத்தனை ஸபைகள் ஏற்பட்டு எத்தனை பக்தர்கள் கூடி பகவத் கதாச்ரவணங்கள் பண்ணி ஆனந்தித்து வருகிறார்களென்பது கணக்கிட முடியாமலிருக்கிறது. ஒவ்வோரிடத்திலும ஆஸ்திக ஸமாஜமென்றும் வைதிகஸபையென்றும் ஸ்ரீராமபக்த ஸங்கமென்றும் ஸ்ரீக்ருஷ்ண பக்தி விவர்த்தினீ ஸபை யென்றும் இப்படி நூற்றுக்கணக்கான ஆயிரக்கணக்கான பெயர்களால் ஸபைகள் ஏற்படுத்தப்பட்டு அவை ஸ்பர்த்தையினால் நாடோறும் அபிவிருத்தி செய்யப்பட்டும் வருவதைக் காணுகின்றோம்.

299. “பச்யதி புத்ரம், பச்யதி பௌத்ரம்” என்று வேதம் சொன்னபடி நாம் புத்ர பௌத்ரர்களைப் படைப்பது அதிசயமன்று; நம் வீட்டில் பூனையின் முன்னே எலிகளும் பிள்ளை பேரன்களைப் பெற்று விளங்குவதைப் பார்த்து வருகிறோம். பூனை எப்போதும் எலிகளைப் பிடிப்பதிலேயே நோக்குடையது. வீடுதோறும் இரண்டு மூன்று பூனைகளும் உள்ளன. இவை வாழுமிடங்களில் எலி நடையாடுவதற்கு ப்ரஸக்தியே யிராது. அப்படி இருந்தும் பூனைகளுக்குத் தப்பிப் பிழைக்கும் எலிகள் புத்ர பௌத்ர ஸந்தானங்களைப் பெற்று மகிழவும் காண்கிறோம். இது போலவே நாஸ்திகர்களின் ப்ராபல்யம் ஓங்குமிடங்களிலும் அவர்களுடைய துர்வாதங்களுக்குத் தப்பிப் பிழைத்து ஆஸ்திகர்கள் தலையெடுத்து விளங்குவது மிகவும் அதிசயிக்கத்தக்கதே.

300. பலவாயிரம் ஆண்டுகட்கு முன்னம் நம்மாழ்வார் திருவவதரித்து “பொலிக பொலிக பொலிக! போயிற்று வல்லுயிர்ச்சாபம். நலியும் நரகமும் நைந்த நமனுக்கிங்கு யாதொன்றுமில்லை. கலியுங்கெடுங் கண்டு கொண்மின் கடல்வண்ணன் பூதங்கள் மண்மேல் மலியப்புகுந்திசைபாடி யாடியுழிதரக் கண்டோம்.” என்று மங்களாசாஸநம் செய்தருளினதன் ப்ரபாவமேயிது வென்று அறுதியிடத்தட்டில்லை. நாஸ்திகர்களின் ப்ராசுர்யத்தைப் பற்றி நாம் சிறிதும் கவலைகொள்ள அவசியமில்லை. இருள் எவ்வளவு கனத்திருந்தாலும் சிறிது வெளிச்சம் கண்டவாறே அகன்றொழியுமன்றோ. ஒரு ஆஸ்திகர் இருந்தாலும் அங்குப் பல நாஸ்திகர்கள் தொலையக் கூடுமென்பது கட்கூடு. .... .... .... .... .... *

நல்வார்த்தை நானூறு—மூன்றாவது நூறு முற்றிற்று.

# நல்வார்த்தை நானூறில்—நான்காவது சதகம்

## எம்பெருமானுர்க்குத் திருக்கச்சிநம்பிகள் மூலமாகக் கிடைத்த ஆறு வார்த்தைகள்

301. அஹமேவ பரம் தத்வம். ஸ்ரீமந்நாராயணனே பரதத்வமென்பது முதல் வார்த்தை. எது ஜகத்காரண வஸ்துவோ அதுவே உபாஸ்யமென்றும் அதுவே முழுமுதற் கடவுளென்றும் உபநிஷத்துக்களின் கொள்கையாகும். எது ஜகத் காரண வஸ்துவென்று ஆராயப் புகுமளவில், சாந்தோக்யோபநிஷத்தில் "ஸதேவ ஸோம்ய! இதமக்ர ஆஸீத் ஏகமேவ அத்விதீயம்" என்று ஸத் என்ற சப்தத்தாலே மூலப்பொருள் ஓதப்பட்டது. அதனுல் ஒரு நிஷ்கர்ஷம் பிறக்க வழியில்லை. மற்றும் உபநிஷத்துக்களை ஆராயுமிடத்தில் வாஜஸநேயகத்தில் "ப்ரஹ்ம வா இதம் ஏகமேவ அக்ர ஆஸீத்" என்று ஓதப்பட்டது. முற்காட்டிய உபநிஷத்தில் மூலப்பொருள் ஸத் சப்தத்தாலே கூறப்பட்டது. இதில் ப்ரஹ்மசப்தத்தாலே கூறப்பட்டது. அந்த வஸ்து மிகவும் பெரிது என்று இதனுல் ஏற்பட்டது. இன்னமும் உபநிஷத்துக்களை ஆராயுமளவில் ஐதரேயத்தில் "ஆத்மா வா அயமேக ஏவாக்ர ஆஸீத்" என்றுளது. இதனுல் அந்த மூலப்பொருள் அறிவுடையது என்று மாத்திரம் ஏற்பட்டது. இந்திரன் சந்திரன் ஸூர்யன் யமன் வாயு வருணன் குபேரன் சிவன் பிரமன் என்று சொல்லப்படுகின்ற ஆத்ம வர்க்கங்களில் ஒவ்வொரு தெய்வத்திற்கும் ஸ்ருஜ்யத்வமே சாஸ்த்ரங்களில் கூறப்பட்டிருத்தல் குறிக்கொள்ளத் தக்கது. ஒரு ஸர்வேச்வரனுடைய ஆஜ்ஞைக்கு அஞ்சி நடப்பாருமாய், அவனை ஆராதித்துப் பதவிகள் பெற்ருருமாய், சாஸ்த்ரங்களின் அநுவர்த்தந—அதிவர்த்தநங்களாலே புண்யபாபங்களைப்பெற்று அவ்வவற்றின் பயனுகிய சுக துக்கங்களை அநுபவிப்பாருமாய், ஓரளவு பட்ட ஐச்வர்யங்களை யுடையவர்களாகச் சொல்லப்படுகையாலே 'அஸ்மதாதிகளைப் போன்ற, அல்லது நம்மைக் காட்டிலும் சிறிது மேம்பட்டவர்களாகவுள்ள தேவர்கள் ஜகத்காரண பூதர்களாக இருக்கத் தகுதியுடையரல்லர். "ஏகோ ஹ வை நாராயண ஆஸீத் ந ப்ரஹ்மா நேசாந:" இத்யாதியாகவுள்ள மஹோபநிஷத் வாக்யத்தில் நாராயணனே மூலப்பொருள் என்று ஸுஸ்பஷ்டமாக ஓதப்பட்டுளது. முந்துற உதாஹரிக்கப் பட்டுள்ள ச்ருதி வாக்யங்களில் ஸத், ப்ரஹ்ம, ஆத்ம பதங்களால் விவக்ஷிக்கப்பட்ட வஸ்து நாராயணனேயாக வடுக்கும். ஏன்? ஸர்வ சாகா ப்ரத்யய ந்யாயத்தாலே காரண வாக்யங்களெல்லாவற்றுக்கும் ஏகவிஷயத்வம் வேண்டுகையாலே "பசுமாலபேத" என்று நாற்கால் விலங்குகளை யெல்லாம் சொல்லக்கடவதான [ஸாமான்யமான] பசு சப்தம் "ச்சாகோ வா மந்த்ர வர்ணுத்" என்கிற ஸூத்ரத்தின்படி ஆடாகிற பசு விசேஷத்திலே பர்யவஸிக்குமா போலே ஸத், ப்ரஹ்ம, ஆத்ம பதங்கள் நாராயணனுகிற விசேஷத்திலே பர்யவஸித்து நிற்கும். இந்தத் தெளிவைத் தேவப் பெருமாள் "அஹமேவ பரம் தத்வம்" என்ற முதல் வார்த்தையினுல் உண்டாக்கினர்.

302. தர்சநம் பேத ஏவ ச:. இது நம் விசிஷ்டாத்வைத ஸித்தாந்தத்திற்கு அந்தரங்கமானதொரு வார்த்தையாகும். உபநிஷத்துக்களில் "நேஹ நாநாஸ்தி கிஞ்சந" "ஸர்வம் கலு இதம் ப்ரஹ்ம" இத்யாதிகளான வாக்கியங்கள் ப்ரஹ்மமொன்றே யுள்ளதென்றும் வேறு எந்தப் பொருளுமில்லை யென்றும் தெரிவிக்கின்றன. "க்ஷரம் ப்ரதாநம் அம்ருதாக்ஷரம் ஹர: க்ஷராத்மாநாவீசதே தேவ ஏக:" 'த்வா ஸுபர்ணு ஸயுஜா' இத்யாதிகளான உபநிஷத் வாக்யங்களோ வென்னில் சித்து அசித்து ஈச்வரன் என்ற மூன்று தத்வங்களும் உள்ளன வென்று தெரிவிக்கின்றன. ஸ்ரீ சங்கராசார்ய ஸ்வாமிகள், முந்துறக்காட்டிய அபேத ச்ருதி வாக்கியங்களையே முக்யமாகக் கொண்டு அத்வைதக் கொள்கையை ப்ரவசநம் செய்தார்கள். அது தவறு என்று காட்டுவது இந்த வார்த்தை. சேதநாசேதநங்கள் ஈச்வரனுக்கு சரீரங்களாகையாலே உலகத்தில் சரீர சரீரிகளை ஒற்றுமை நயத்தினுற் கூறும் வழக்கில் அபேத ச்ருதிகள் அவதரித்தனவே யல்லது உண்மையில் தனியே மூன்று தத்துவங்கள் இல்லையென்று மறுக்க வந்தவை யல்ல. சரீராத்ம பாவத்தாலே அபேதம் நிர்வஹிக்கப் படுகிறது. ஸம்ஸார தசையிலும் முக்தி தசையிலும் எங்கும் பாரமார்த்திகமாகவே ஜீவ பரபேதம் உண்டு என்று இதனுல் விளக்கிற்றுயிற்று.

303. உபாயேஷு ப்ரபத்திஸ் ஸ்யாத். பகவத்கீதை முதலிய சாஸ்த்ரங்களில் கர்மயோகம், ஜ்ஞாநயோகம், பக்தியோகம், ப்ரபத்தியோகம் எனப் பல உபாயங்கள் எம்பெருமானைப் பெறுதற்கு வழியாக வகுக்கப்பட்டுள்ளன. ப்ரபத்தி தவிர மற்ற உபாயங்கள் ஆகிஞ்சந்யமும் அநந்யகதித்வமுமே வடிவாகவுள்ள ஸ்ரீவைஷ்ணவாதிகாரிக்கு ஸ்வரூப விருத்தங்களாகையாலே ஸ்வரூபஜ்ஞர்களான அதிகாரிகள் அவ்வுபாயங்களை அனுஷ்டிக்கத் தகுதியுடையரல்லர்; "ப்ராபகாந்தர பரித்யாகத்துக்கு அஜ்ஞாந அசக்திகளன்று, ஸ்வரூப விரோதமே ப்ரதாந ஹேது" என்று ஸ்ரீவசந பூஷணத்தில் பிள்ளையுலகாசிரியர் அருளிச்செய்த படி சரணாகதியே ஸ்வரூபோசிதமான உபாயமென்பது இந்த வார்த்தையின் கருத்து.

304. அந்திமஸ்ம்ருதி வர்ஜநம். ப்ரபந்நாதிகாரிகள் சரீர வியோகமடையும் காலத்தில் மன மொழி மெய்களாகிய கரணத்ரயமும் சிதிலமாய் எம்பெருமானை நினைக்கவும் முடியாதபடி யிருந்து அப்படியே பிராண வியோகமாய் விட்டால் அன்னவர்களுக்கு ஸத்கதி கிடையாதோ? என்று சங்கிக்க வேண்டா; வராஹ சரம ச்லோகத்தின்படிக்கும் "எய்ப்பென்னை வந்து நலியும்போது அங்கேதும் நானுன்னை நினைக்கமாட்டேன், அப்போதைக்கிப்போதே சொல்லிவைத்தேன் அரங்கத் தரவணைப் பள்ளியானே" என்ற அருளிச் செயலின்படிக்கும், யோக்ய காலங்களில் மநோவாக்காயங்களை நல்வழிப்படுத்தின மஹான்களுக்கு சரீராவஸாந காலத்தில் நல்ல ஸ்மரண மில்லையாயினும் குற்றமில்லை யென்பது இந்த வார்த்தையின் கருத்து. "அந்திம ஸ்ம்ருதிவர்ஜநம்" என்றிருப்பதால் அந்திம காலத்தில் ஸ்மரணம் இருக்கவே கூடாதென்று நிஷேதிப்பதாக கொள்ளலாகாது.

305. தேஹாவஸாநே முக்திஸ் ஸ்யாத். செய்த பாபங்கள் அநுபவிக்கப்பட்டுக் கழிந்தாலல்லது மோக்ஷம் பெற வழியில்லை. பாபங்களோ எத்தனை ஜந்மமெடுத்து அநுபவித்தாலும் இன்னமும் மேன்மேலும் அவை வளரும்படியாகவுள்ளதே யன்றிக் கழியும்படியாக இல்லையே; வித்யா மாஹாத்ம்யத்தினால் பாபங்கள் கழிவதாகக் கொண்டால் உடனே மோக்ஷம் கிடைத்துத் தீரவேணுமே; அப்படி கிடைப்பதாகத் தெரியவில்லையே யென்று தோன்றும் சங்கைக்குப் பரிஹாரம் இந்த வார்த்தையினால் கிடைக்கிறது. பாபங்கள் ப்ராரப்தமென்றும் ஸஞ்சிதமென்றும் இரு வகைப்படும்; பலன் கொடுக்கத் தொடங்கின பாவங்கள் ப்ராரப்தமெனப்படும். அங்ஙனல்லாதவை ஸஞ்சிதமெனப்படும். வித்யா மாஹாத்ம்யத்தினால் ப்ராரப்த கர்மங்கள் தொலையும். ப்ரபந்நாதிகாரிகளுக்கு ஸஞ்சித கர்மாநுபவத்தை இந்த தேஹத்தளவோடே செய்வித்து முடித்து மறுபடியும் தேஹ ஸம்பந்தமுண்டாகாதபடி எம்பெருமான் செய்தருள்வனாதலால் "மரணமானால் வைகுந்தங் கொடுக்கும் பிரான்" என்கிறபடியே இந்த தேஹத்தின் அவஸாநத்திலே மோக்ஷம் திண்ணம் என்பது இந்த வார்த்தையின் கருத்து. ஆர்த்த ப்ரபந்நனென்றும் த்ருப்தப்ரபந்ந னென்றும் ப்ரபந்நன் இருவகைப்படுவன். வர்த்தமாந தேஹத்தை ஒரு படி பொருத்திருக்க வல்லவன் த்ருப்த ப்ரபந்நன். இதையும் பொருத்திருக்க முடியாதபடி ஆர்த்தி கனத்திருக்குமவன் ஆர்த்த ப்ரபந்நன். அன்னவனுடைய ஆர்த்தி மிகுதியை யறிந்தவாறே எம்பெருமான் அப்போதே முக்தியளிப்பவன் என்பதும் இங்கு அறியத்தக்கது.

306. பூர்ணாசார்ய ஸமாச்ரய: எம்பெருமானார் தாம் எவரை ஆசார்யராகப் பற்றுவதென்று விசார முற்றிருந்தபடியாலே அதற்குப் பரிஹாரம் இந்த ஆறுவது வார்த்தையினாலாகிறது. ஆளவந்தாருடைய சிஷ்யர்களில் தலைவரான பெரிய நம்பியை ஆச்ரயிக்கும்படி இதனால் நியமநமாயிற்றென்று அறிவது. ஆக இவ்வாறு வார்த்தைகளையும் எம்பெருமானார் திருக்கச்சி நம்பிகள் மூலமாக லபிக்கப் பெற்று க்ருதார்த்தரானார்.

*

ஸ்ரீவைஷ்ணவ சம்பிரதாய நூல்கள் கிடைக்குமிடங்கள்:—

(1) க்ரந்தமாலா ஆபீஸ், காஞ்சீபுரம்.

(2) M. A. KRISHNAMMAL, Advocate,
20, South Mada Street, Triplicane, Madras-5.

(3) V. GOPALSWAMI,
17, பண்டி வெங்கடேச நாய்க்கன் தெரு, திருவல்லிக்கேணி.

(4) G. ரங்கைய நாயுடு,
26, குருவப்ப செட்டி தெரு, சிந்தாத்திரிபேட்டை, மதராஸ்—2

(இவர் சென்னையில் பிரசாரம் செய்ய நியமிக்கப்பட்டவர்.)

If un-delivered please return to:

**P. B. ANNANGARACHARYA,**
L. KANCHEEPURAM.

28. Sri Vangeepuram Raghavacharya,
Melkote. (Mysore).

Edited and Published by P. B. Annangaracharya Swami
for Madras Satgrantha Prakasana Sabha.

Printed by T. A. P. Srinivasavaradan at Sri Venkateswara Press,
Sannidhi Street, L. Kancheepuram.